17/39

ALAGAPPA ANNAMALAI, M.D.,
SCOUTER,
KOTTAIYUR, Ramnad DT.

# இந்து தேச சரித்திரம்

(மூன்றும் பாரத்திற்கு)

K. M. சுப்பிரமணியம், M. A., L. T.
திருத்தியது












துரைத்தனத்தார் அங்கீகரித்தது
[12-11-'35 கெஜட் 608-ஆம் பக்கம் பார்க்க]

சென்னை :
ஸி. குமாரசாமி நாயுடு ஸன்ஸ்
1935

ரெஜிஸ்தர் செய்தது] [விலை 12 அணா

AL. Annamalai,
Kottaiyur. S.I.R

# INTRODUCTION



This edition of 'A Junior History of India' has now been so revised that the arrangement of the lessons conforms to the topical order followed in the Syllabus issued by the Department.

The presentation of matter has also been, so far as is possible at this stage, made historical rather than merely narrative, since the standard for which it is intended forms the first stage where story gives place to history.

MADRAS, 1-2-1935. } K. M. SUBRAMANIAM

# பொருள் அடக்கம்





நமது ஜார்ஜ் சக்கரவர்த்தியும் மேரி மஹாராணியும்

# இந்து தேச சரித்திரம் — III

## 1. இந்தியாவிற்கு ஐரோப்பியரின் வருகை

1. நமது இந்திய தேசத்திற்கு முற்காலம் முதற் கொண்டு பல ஜாதியார் வந்திருக்கிறார்களல்லவா? அவர்களில் கடைசியாக வந்தவர் ஐரோப்பிய ரென்று உங்களுக்குத் தெரியும். இவர்களுக்கும் மற்றும் பல சமயங்களில் வந்தோருக்கும் முக்கியமான வித்தியாசம் யாதெனில், இவர்கள் மற்றோரைப் போலல்லாது கடல் மார்க்கமாய் வந்தவராம். இவர்கள் இந்தியாவிற்கு வந்தது பதினைந்தாவது நூற்றாண்டின் இறுதி. எனினும் கிறிஸ்து பிறப்பதற்கு வெகுகாலத்திற்கு முன்னிருந்தே இந்தியாவிற்கும் மேனாட்டிற்கும் பல சமயங்களில், பலவிதத்திலும் போக்கு வரவிருந்தது. அலெக்ஸாண்டர் படையெடுப்பிற்கு முன்பே இந்தியாவிற்கும் ஐரோப்பாவிற்கும் பெருத்த வியாபாரம் நடந்து வந்தது. ரோம் என்னும் நகரத்தில் கீர்த்தி பெற்ற சக்கரவர்த்திகள் அரசாண்டு கொண்டிருந்த போது இந்திய அரசர்கள் ராஜ தூதர்களை ரோமிற்கும், ரோம் சக்கரவர்த்திகள் தம் தூதர்களை இந்திய அரசர்களின் சமஸ்தானங்களுக்கும் அனுப்பி வந்தனர். இப்பிரதிநிதிகளை அனுப்புவதினபிப்பிராயம் யாதெனில் இவ்

விரு தேசங்களுக்குள் நடந்துவந்த வியாபாரத்தை அபி விருத்தி செய்வதேயாம்.

2. இந்த வியாபாரம் பெரும்பான்மையும் இந்தியாவின் வடமேற்கேயுள்ள தரை மார்க்கமாகவும், சிறுபான்மை கடல் மார்க்கமாகவும் நடைபெற்றது. பாண்டிய நாட்டாரும், சோழ நாட்டாரும், கிறிஸ்து பிறப்பதற்கு அனேக நூற்றுண்டுகளுக்கு முன்னரே கடல் மார்க்கமாக மேல்நாட்டோடும், கிழக்கே பர்மா, கிழக்கிந்திய தீவுப் பிரதேசங்களோடும் வியாபாரம் செய்துகொண்டிருந்தனர். ஆனால் மகம்மதியர் இந்தியாவிற்கு வந்தபின் வெகுகாலம் வரைக்கும் நமது தேசத்திற்கும் வெளிநாட்டிற்கும் ஏற்பட்ட சம்பந்தங் குறைந்துகொண்டே வந்தது.

3. இந்தியாவிற்கும், ஐரோப்பாவிற்கும் முக்கியமாக மூன்று தரை மார்க்கங்கள் இருந்தன. அவற்றின் வழியாகத்தான் நமது தேசத்தினின்று மேல் நாடுகளுக்கு வியாபாரமும் மற்ற போக்குவரத்துகளும் நடந்துவந்தன.

(1) இவைகளில் முதலாவது, தெற்கேயுள்ள வழி; இது, செங்கடல் வழியாய், ஆப்பிரிக்காவின் வடக்கேயுள்ள **அலெக்சாண்டிரியா** என்னும் பட்டண மடைந்து, பின்பு அதினின்றும் மத்தியதரைக் கடலைத்தாண்டி இத்தாலியா தேசத்திலுள்ள **வேனீஸ், ஜினேவா** என்னும் பட்டணங்களுக்குப் போய்ச் சேர்ந்தது.

(2) இரண்டாவது, இதற்கு வடக்கேயுள்ள மார்க்கம்; இது, இந்திய சமுத்திரக் கரையோரஞ் சென்று, பாரசிக வளைகுடாவின் வழியாக **மெஸோபொடேமியா**வை யடைந்து அப் பிரதேசத்தினின்று சிறிய **ஆசியா** அல்லது **பாலஸ்தீனம்** துறைமுகங்களிற்குச் சென்றது. இங்கிருந்து

சாமான்கள் வெனீஸ், ஜினேவா முதலிய ஐரோப்பிய நக ரங்களுக்குக் கொண்டுபோகப்பட்டன. (3) மூன்றுவது மார்க்கத்தில் ஜலக்கலப்பு அவ்வளவு அதிகங் கிடையாது. இது, மேற்சொன்ன இரண்டு மார்க்கங்களிலும் வடக்கே யுள்ளது. இது வடமேற்கு மாகாணங்களின் வழியாகத் தற்காலத்து ஆப்கானிஸ்தானத்தைக் கடந்து ஆக்ஸஸ் நதிப் படுகையைச் சேர்ந்து, அவ்விடத்தினின்றும் **இரண்டு கிளைக ளாய்ப் பிரிந்தது.** (a) இவைகளிலொன்று நேர் வடக்காகச் சென்று, காஸ்பியன் கடலைக் கடந்து, வால்கா நதி மார்க்க மாக அக் காலத்தில் மிகப்பெரிய சந்தை கூடுமிடமாகிய **நிஜ்நி நௌகிராட்** என்னுமிடத்திற்குப் போய்ச் சேர்ந்தது. இவ்விடத்தில் ஐரோப்பிய வர்த்தகர் சாமான்களை வாங்கி ஜெர்மனி முதலிய வட ஐரோப்பிய தேசங்களில் விற்றனர். (b) இம் மூன்றுவது மார்க்கத்தில் இரண்டாவது பிரிவு மேற் குப்புறந் திரும்பிக் கருங்கடலைத் தாண்டி, **கான்ஸ்டாண்டி நோபிள்** நகர் மார்க்கமாக வெனீஸ், ஜினேவா முதலிய தென் ஐரோப்பியத் துறைமுகங்களுக்குச் சென்றது.

4. இதினின்றும், அக் காலத்தில் நமது தேசம் செல் வம் மிகுந்திருந்தது என்று நீங்கள் தெரிந்து கொள்ளலாம். அதன் பெருத்த வியாபாரம் வெகு காலமாகக் "காரவன்" என்று சொல்லப்பட்ட வியாபாரக் கூட்டத்தினர் கையி லிருந்தது. இவர்கள் தங்கள் சரக்குகளை, ஆயிரக்கணக்கான ஒட்டகங்களின்மீது எடுத்துச் சென்றனர். இவ்வியாபாரம் பதினைந்தாம் நூற்றுண்டிற்குமேல் இம் மார்க்கமாக நடக்க முடியவில்லை. இச் சமயத்தே மகம்மதியர்கள் வியாபார மார்க்கங்களமைந்த பிரதேச முழுவதையுங் கைப்பற்றிக் கொண்டனர். இவர்கள் பெருத்த மதத் துவேஷிகள். இவர்களுக்குக் கிறிஸ்தவ மதத்தோரைக் கண்டால் மிகுந்த

வெறுப்பு உண்டு. மகம்மதியர் கான்ஸ்டாண்டிநோபிளைக் கிறிஸ்தவரிடமிருந்து கைப்பற்றியவுடன் ஐரோப்பியர் இந்தியாவுடன் வியாபாரஞ்செய்ய முடியவில்லை. ஆகையால் ஐரோப்பியர், இந்தியாவிற்கு வேறுவழி கண்டுபிடிக்க வேண்டியது அவசியமாயிற்று.

5. இப் புது வழியைக் கண்டுபிடிக்கும் முயற்சியைப் போர்ச்சுகீசியரே முதலில் மேற்கொண்டவர். போர்ச்சுகல் என்பது ஐரோப்பாவில் மிகச் சிறிய தேசங்களிலொன்று. எனினும், போர்ச்சுகீசியரே ஐரோப்பியர்களினுள் மிகுந்த துணிச்சலும், சமுத்திரத்தைப்பற்றிய ஞானமும், சாமர்த்தியமும் பெற்றவர்களா யிருந்தனர். இவர்கள் இந்தியாவிற்குக் கடல் மார்க்க மொன்றைக் கண்டுபிடிப்பதற்காகப் பலமுறை பிரயாணங்கள் செய்தனர். இவர்கள் தேசத்தில், சமுத்திரத்தைப் பற்றிய ஞானத்தைப் பரவச்செய்யப் பல மானுமி பள்ளிக்கூடங்கள் இருந்தன. இவர்கள் செய்த பல கடற் பிரயாணங்களிலே ஒன்றன் பலனாக அமெரிக்கா கண்டம் கொலம்பஸ் என்பவரால் முதன் முதற் கண்டுபிடிக்கப்பட்டது. இன்னும் சில போர்ச்சுகீசியர் செய்த முயற்சியின் பலனாகத் தென்னாப்பிரிக்காவின் கோடியிலுள்ள **நன்னம்பிக்கைமுனை** கண்டுபிடிக்கப்பட்டது. இம் முனையினின்றும் 1497-ம் வருஷத்தில் **வாஸ்கோடிகாமா** என்பவர் கடற்கரை யோ



வாஸ்கோடிகாமா

ரத்தி லிருக்கும் **கள்ளிக்கோட்டை** என்னும் பட்டணத்திற்கு வந்து சேர்ந்தார். இது முதற்கொண்டு இந்தியாவிற்கும், மேனட்டிற்கும் கடல் மார்க்கம் நிச்சயமாய்விட்டது.

6. வாஸ்கோடிகாமா கடல் வழியைக் கண்டுபிடித்தது முதற்கொண்டு சுமார் 275 வருஷங்கள் வரைக்கும், இக்கடல் மார்க்கமாகத்தான் இந்தியாவின் எல்லா வியாபாரமும் நடந்துவந்தது. இந்த வழி மிகவும் சுற்றுப் போக்காயிருந்தபடியால் இதினும் சுருக்கான வழியைக் கண்டுபிடிக்க ஐரோப்பியர் மிகவும் முயன்றனர். 1870-ம் வருஷம், மிகச் சாமர்த்தியம் பெற்றதோர் பிரஞ்சு இஞ்சினீயரின் பிரயத்தினத்தின்மேல் சூயஸ் பூசந்தி கால்வாயாக மாற்றப்பட்டது. **இதற்குத்தான் சூயஸ்கால்வாய்** என்று பெயர். இக் கால்வாய் வெட்டியதின் பலனுக ஆப்பிரிக்காவைச் சுற்றி நடந்த வியாபாரத்திற் பெரும் பாகமும் சூயஸ்கால்வாய் மார்க்கமாகத் திரும்ப ஆரம்பித்துவிட்டது. மத்திய தரைக்கடற் பட்டணங்கள் நன்னம்பிக்கை முனை மார்க்கம் ஏற்பட்டதற்குப் பின் செல்வமும், செழிப்பு மில்லாமற் போயின. ஆனல் சூயஸ்கால்வாய் மார்க்கமாக வியாபார மதிகரிக்கவே அவைகளின் செல்வமும், செல்வாக்கும் அதிகரித்தன. அதுவுமன்றி முன்னுளைக் கப்பல்களைப்போலல்லாது தற்காலத்திய ஸ்டீமர்கள் நீராவியால் மிகுந்த வேகத்துடன் ஓட்டப்படுகின்றன; ஸ்டீமர்களில் சரக்குகளும் மிகவு மதிகமாகக் கொண்டுபோகலாம். இவைகளின் மூலம், சூயஸ்கால்வாய் மார்க்கமாகத் தற்காலத்தில் பம்பாயிலிருந்து பதினைந்து நாளைக்குள் நாம் லண்டனுக்குப் போய்விடலாம்; சரக்குகளும் ஒரு மாதத்திற்குட் சேர்ந்துவிடுகின்றன.



## 2. இந்தியாவிற்கு வந்த முக்கிய ஐரோப்பியர்கள் போர்ச்சுகீசியர்

1. சென்ற பாடத்தில், நமது தேசத்திற்குக் கடல் மார்க்கமாய் முதல் முதலாக வந்த ஐரோப்பியர் போர்ச்சு கீசிய ரென்று சொன்னோ மல்லவா? இந்தியாவிற்கு வந்த பின் நிகழ்ந்த அவர்களின் சரித்திரத்தை இங்கே சுருக்க மாகக் கூறுவோம். போர்ச்சுகீஸ் கப்பற்றலைவனாகிய வாஸ் கோடிகாமா கள்ளிக்கோட்டையில் வந்திறங்கும்போது, அவ்விடத்தில் ஜாமோரின் என்னும் ஹிந்து அரசர் ஆண்டு வந்தனர். ஜாமொரின் வந்தவருக்குத் தம் தேசத்தினுள் அவர்கள் வியாபாரஞ் செய்வதற்குத் தக்க இடங்களும், சுதந்திரங்களும் கொடுத்தார். தம் தேசத்தாருக்கு வியா பார விஷயங்களில் சில நல்ல சௌகரியங்களைப் பெற்று வாஸ்கேடிகாமா தம் தேசத்திற்கு வாசனைத் திரவியங்கள், காலிகோதுணி முதலிய விலையுயர்ந்த பண்டங்களை ஏற்றிக் கொண்டு திரும்பிச் சென்றார். அங்குச் சென்றதும் ஜாமொரின் போர்ச்சுகல் தேசத்தரசனுக்குக் கொடுத்த கடிதத்தை அவ்வரசனிடம் ஒப்புவித்தார். அதில் பின்வருமாறு கண் டிருந்தது. "என் தேசத்தில் ஏராளமாக லவங்கப்பட்டை, கிராம்பு, இஞ்சி, மிளகு, நவரத்தினங்களிருக்கின்றன. உம் முடைய தேசத்தினின்று எதிர்பார்ப்பது யாதெனில் தங் கம், வெள்ளி, பவளம், ஊதாத்துணி இவைகளே." இது முதற்கொண்டு இவ்விரண்டு தேசங்களுக்கும் வியாபாரம் ஒழுங்காக நடந்துவரவேண்டுமென்று போர்ச்சுகல் தேசத் தரசர் தீர்மானம் செய்துகொண்டார்.

2. வாஸ்கோடிகாமா திரும்பிச் சென்ற சிறிது காலத்திற் கெல்லாம் (1502௵) கேப்ரல் என்ற போர்ச்சு

கீசியர் இந்தியாவிற்கு வந்தார்கள். இவர்கள் கள்ளிக் கோட்டைக்கு வந்து சேருமுன்னரே ஜாமொரின் நாட்டில் போர்ச்சுகீசியருக்கு விரோதமாகப் பெருத்த கிளர்ச்சி உண்டாயிற்று. இவர்கள் வந்ததின் நிமித்தமாக இங்கே அராபியர் செய்துவந்த வியாபாரம் மிகவும் குறைந்து போயிற்று. ஆகவே அவர்கள் ஜாமொரீனிடஞ் சென்று அவருக்கும் அயல்நாட்டு வியாபாரிகளுக்கும் பகையுண் டாக்கி விட்டார்கள். ஆகவே கேப்ரல் கள்ளிக்கோட்டை யில் தங்காது கொச்சிக்குப் போய் அவ்விடம் சிலமாத மிருந்து தம் தேசத்திற்குச் சென்றார். அடுத்த வருஷமே வாஸ்கோடிகாமா பெருத்த கப்பற்படையோடு இரண்டா முறை இந்தியாவிற்கு வந்தார். இச் சமயத்தில் ஜாமொரீனுக் கும் கொச்சி ராஜனுக்கும் மனஸ்தாபம் பலமாயிருந்தது. இவ் விருவரும் சேர்ந்து ஜாமொரீனுடன் சண்டை செய்தார் கள். அதில் ஜாமொரீன் தோற்கடிக்கப்பட்டார்.

3. போர்ச்சுகீசியரின் கப்பற்படை 1509-ம் வருஷம் **டையூ** என்னும் இடத்துக்கருகில் இந்திய எகிப்து கப்பற் படையைத் தோற்கடித்தது. இந்த ஜெயத்தின் பலனாக சமுத்திரத்தில் போர்ச்சுகீசியரின் ஆதிபத்தியம் நிலைநிறுத் தப்பட்டது. ஆனால் இந்தியாவிற்கு வந்த போர்ச்சுகீஸ் தலைவருள் **ஆல்புகர்க்கு** என்பவர் மிகுந்த சாமர்த்தியமும், அதிர்ஷ்டமும் வாய்ந்தவர். இவர் பாரசீக வளைகுடாவின் முகப்பிலிருக்கும் **ஆர்மூஜ்** என்னும் பெயர்போன நகரத் தைக் கைப்பற்றினார். இதன் பயனாக அப் பிரதேசத்தி லுள்ள வியாபார மெல்லாம் போர்ச்சுகீசியரின் கையினுட் சென்றுவிட்டது. 1510-ம் வருஷத்தில் இவர் **கோவா** என்னும் நகரத்தைப் பற்றினார். இந்நகர் போர்ச்சுகீசியருக் குரிய குடியேற்ற ஸ்தலங்களின் மத்தியிலிருந்தது. இவ்

வாறு வசதியான இடமானதுபற்றி கோவா, போர்ச்சுகீஸ் இந்தியாவின் முக்கிய நகராயிற்று. இன்றைய தினத்திலும் இந்நகர் அப்பதவியையே வகித்து வருகிறது.

4. அல்புகர்க்கு காலத்தில் போர்ச்சுகீசியருக்கும் கொச்சி அரசனுக்கும் சிநேகம் முதிர்ந்தது. இவர்களின் உதவியால் கொச்சி யரசன் போர்ச்சுகீசியருக்குத் தன் ராஜ்யத்தில் கோட்டை யொன்று கட்டிக்கொள்ளுமாறு அனுமதி கொடுத்தான். கோட்டை கட்டி முடித்தபின் கூட ஜாமெரீன் மறுபடியும் கொச்சியைத் தாக்கினார். இம் முறையும் அவர் போர்ச்சுகீசியரால் துரத்தப்பட்டார். சில வருஷங்களுக்குப் பின், ஜாமெரீன் போர்ச்சுகீசியரைத் தோற்கடித்தும் அவர்கள் தம் கையை நமது தேசத்தில் பலமாக ஊன்றிக்கொண்டார்கள்.

5. மேற்குக் கடலில் ஆர்மூஜைப் பிடித்ததுமன்றிப் போர்ச்சுகீசியர் சொகாட்டரா என்னும் தீவையும், தெற்கே இலங்கைத் தீவையும் கைப்பற்றிக் கொண்டார்கள். இதே சமயத்தில், கிழக்குத் தீவு கணத்தைச் சேர்ந்த மலாகா என்னுமிடம் போர்ச்சுகீசியர் வசப்பட்டது. ஆகவே, இப் பிரதேசங்களின் வியாபார முழுவதும் போர்ச்சுகீசியருக்குச் சர்வசுதந்திரமாயிற்று. இவ்விதம், இந்தியாவின் விளைபொருளை ஐரோப்பிய தேசங்களிலும், ஐரோப்பிய விளைபொருள்களை இந்தியாவிலும் விற்கும் சுதந்திரம் போர்ச்சுகீசியரின் கைவசம் ஒரு நூற்றாண்டு வரை (1500-1600) தானிருந்தது.

6. ஆனால், அடுத்த (17-வது) நூற்றாண்டின் ஆரம்ப முதல் போர்ச்சுகீசியரின் அதிகாரம் நமது தேசத்தில் க்ஷீணதசை யடைய ஆரம்பித்தது. இதற்குப் பல கார

ணங்கள் உள்ளன :— (a) போர்ச்சுகல் என்பது ஐரோப்பாவில் மிகச் சிறிய தேசங்களிலொன்று என்று முன் சொன்னோமல்லவா? இதன் அதிகாரம் உன்னதத்திலிருக்கும்போது பிரான்சு, இங்கிலாந்து முதலிய பெரிய தேசங்கள் இதற்குப் போட்டியாக நின்றன. திரவிய சாதனமும், ஜனத்தொகையும் மிகுந்த அத் தேசங்கள் முன்னேற்றமடைந்து இந்தியாவோடு வியாபாரஞ் செய்யத் தலைப்படவே போர்ச்சுகீசியரின் வரும்படியும், செல்வாக்கும் குறைய ஆரம்பித்தன.

(b) மேலும், முதல் முதலில் நமது தேசத்திற்கு வந்த • ஆல்புகர்க் முதலிய போர்ச்சுகீசியர் சுறுசுறுப்பாகவும், சுயநலத்தைக் கருதாமலும், தேச முன்னேற்றத்தை உத்தேசித்தே உழைத்துவந்தனர். ஆனால் வரவர இந்தியாவிற்கு வந்த போர்ச்சுகீஸ் உத்தியோகஸ்தர் சர்க்கார் விஷயத்திற் சோம்பேறிகளாகவும், லஞ்சம் வாங்குவோராகவும் நெறியிழந்த துன்மார்க்கர்களாகவு மிருந்தார்கள்.

(c) போர்ச்சுகீசியர் மிகத் துவேஷம் பெற்ற கிறிஸ்தவர். நாளடைவில் அவர்கள் இந்துக்களையும் மகம்மதியரையும் தத்தம் மதங்களை விட்டு கிறிஸ்தவ மார்க்கத்தைத் தழுவுமாறு பலவிதத்திலும் நிர்ப்பந்தித்தனர். கிறிஸ்தவர்களாகாத இந்துக்களையும், மகம்மதியரையும் இவர்கள் கொதிக்குந் தண்ணீரில் போட்டும், எரிகிற நெருப்பில் வீழ்த்தியும் துன்பப்படுத்தினார்கள்.

(d) போர்ச்சுகீசியரின் வியாபார அபிவிருத்திக்கு விஜயநகரராஜ்யம் பிரதானகாரணங்களிலொன்றாயிருந்தது. விஜயநகரமன்னர்கள் தமக்கு வேண்டிய குதிரைகள் முதலியவைகளைப் போர்ச்சுகீசியர் மூலமாகவே பெற்றுவந்தனர்.

விஜயநகர ராஜ்யம் தலைக்கோட்டை யுத்தத்தில் சிதறுண்டு போகவே இவர்களின் வியாபார வரும்படியும் திடீரெனக் குறைந்து போயிற்று.

(e) முடிவாக, இசேசமயத்தில் போர்ச்சுகல், ஸ்பெயின் தேசத்தரசரால் கைப்பற்றப்பட்டது. டச்சுக்காரர் இவர்களை மலாகாவினின்றும் துரத்திவிட்டார்கள்; ஆங்கிலேயர் ஆர்மூஜையுங் கைப்பற்றினார்கள். இவ்விதமாகப் போர்ச்சுகீசியருக்குக் **கோவா, டாமன், டையூ** என்னும் மூன்று இடங்களைத் தவிர மற்ற ஸ்தலங்களெல்லாம் கைவிட்டுப் போயின. இம்மூன்று இடங்களுமே தற்காலத்தில் அவர்கள் கைவசமிருந்து வருகின்றன.



## 3. டச்சுக்காரர்

1. இதுவரை போர்ச்சுகீசியர் நமது தேசத்தில் 16-வது நூற்றாண்டில் பிரபலமானதைப் பற்றியும் அவர்களின் அதிகார வீழ்ச்சியின் காரணங்களைப் பற்றியும் படித்தீர்கள். அவர்களுக்குப் போட்டியாக நமது தேசத்திற்கு வந்த ஐரோப்பியரில் முக்கியமானவர் டச்சுக்காரரும், ஆங்கிலேயரும், பிரெஞ்சுக்காரருமே. இப்பாடத்தில், டச்சுக்காரர் முன்னேற்றத்திற்கு வந்து, க்ஷீணித்ததைப்பற்றிச் சுருக்கமாக எழுதுவோம்.

2. பதினேழாவது நூற்றாண்டில் டச்சுக்காரரின் ஏகாதிபத்யம் உலகமெங்கும் பிரசித்தமாயிருந்தது. ஹாலண்டு தேசத்தாரே டச்சுக்காரர் எனப்படுவர். இவர்களை உலாந்தாக்காரர்கள் என்றழைப்பதும் உண்டு. ஹாலண்டு போர்ச்சுகலைப்போல ஐரோப்பாவின் சிறிய

தேசங்களிலொன்று. இத் தேசத்தாருக்கும் வியாபாரந் தான் பிரதானமானது; ஆகையால் இத்தேசத்தார் வெகு சாலமாகச் சிறந்த மாலுமிகளென விளங்கினர்.

3. 1602-ம் வருஷத்தில் **டச்சக்கிழக்கிந்தியா கம்பேனி** என்றதோர் பெருத்த வியாபாரச் சங்கம் இந்தியா முதலிய கிழக்குத் தேசங்களோடு வர்த்தகம் செய்யும் பொருட்டு ஏற்பாடு செய்யப்பட்டது. இக் கம்பெனியார் இலங்கைத் தீவிலும், இந்தியாவின் மேற்குக்கடற்கரை யோரத்திலும் பல பண்டகசாலைகளைக் கட்டினார்கள். கொஞ்சங் கொஞ்சமாக டச்சுக்காரர் கிழக்குப் பிரதேசங்களிலுள்ள போர்ச்சுகீசியரிடங்களை யெல்லாம் கைப்பற்றிக்கொண்டு நாளடைவில் அவர்களின் பெருத்த வியாபாரத்தையும் தம் வசப்படுத்திவிட்டனர். 1619-ம் வருஷத்தில் டச்சுக்காரர் ஜாவா என்னுந் தீவில் **படாவியா** என்னும் நகரத்தை ஏற்படுத்திக்கொண்டார்கள்; அந்நகர் ஆசியாவிலுள்ள டச்சுப் பிரதேசங்களுக்குந் தலைநகராயிற்று. இந்தியாவிலும், அவர்கள் வங்காள மாகாணத்தில் கங்காதீரத்தில் **சிந்சூரா** என்னும் நகரத்தை ஸ்தாபனஞ்செய்து, அதை இந்தியாவிலுள்ள தம்மிடங்களுக்குப் பிரதான நகராக்கிக் கொண்டார்கள். ஆங்கிலேயர் இந்தியாவிற்கு வரும்போது டச்சுக்காரருக்கு நமது தேசத்தில் அதிக செல்வாக்கும், அதிகாரமுமிருந்தன. ஆகையாலவர்கள் ஆங்கிலேயரை நமது தேசத்திற்குள் வராதபடி யிருக்க எவ்வளவு செய்யவேண்டுமோ அவ்வளவுஞ் செய்தார்கள். 1623-ம் வருஷத்தில் அவர்கள் கிழக்கிந்தியத் தீவுகளில் **அம்பாயினு** என்னுமிடத்திலுள்ள இங்கிலீஷ்காரரிற் பலரைக் கொன்று மற்றவர்களை யெல்லாம் தீவுகணத்தினின்றும் போகும்படி செய்தனர். இது காரணமாக டச்சுக்காரருக்கும் ஆங்கிலேயருக்கும் 17-ம் நூற்றாண்



டில் தீராப் போராக இருந்தது. முடிவாக, 1688-ம் வருஷத்தில் ஹாலண்டின் அதிபராகிய உவில்லியம் என்பவர் ஆங்கிலேயரால் தம் நாட்டிற்கும் அரசராக வரும்படி கேட்டுக்கொள்ளப்பட்டார். அவர் மூன்ருவது உவில்லியமெனப் பட்டந்தரித்து இங்கிலாந்தின் சிம்மாசன மேறிய பின்பு தான் இவ்விரு தேசத்தாருக்கும் நடந்து வந்த ஓயாச் சண்டையும் ஓய்ந்தது. இக் காலமாகிய 17-வது நூற்ருண்டு முழுவதும் கிழக்குத் தீபகணத்தில் டச்சுக்காரர் பிரதானமாக இருந்தார்கள். இந்தியாவிலும் இலங்கைத் தீவிலுங்கூட இவர்களுடைய வியாபாரம் சிறப்பாயிருந்தது. இவர்கள் வியாபாரத்தைக் காப்பாற்றச் செய்த சட்ட திட்டங்கள் மற்ற ஐரோப்பிய தேசத்தாருக்கு ஒரு முன் மாதிரியாக இருந்தன. இவர்களின் பண்டகசாலைகள் கோட்டைகளாலும் போர் வீரர்களாலும் காப்பாற்றப்பட்டன. இவர்கள் ஏற்பாட்டில் வியாபார சிறப்பும் அரசியல் மேன்மையுங் கலந்திருந்தன, நமது நாட்டில் அவர்களின் முக்கிய ஸ்தலங்கள், மேற்குக் கடற்கரை யோரத்தில் சூரத்தும், கோச்சியும், கிழக்குக்கரையோரத்தில் பழவேற்காடும், மசூலிபட்டணமும், சின்ஸுராவுமே.

4. ஆனல், இந்தியாவில் ஆங்கிலேயரின் அதிகாரமும் செல்வாக்கும் அதிகரிக்க அதிகரிக்க, டச்சுக்காரரின் அதிகாரமும் வன்மையுங் குறைந்துகொண்டே வந்தன. 1793-ம் வருஷமுதல் 1815-ம் வருஷம் வரை இங்கிலாந்துக்கும் பிரான்சுக்கும் பெரிய யுத்தம் நடந்தது. அதில் ஹாலண்டு பிரான்சின் பக்கம் சேரவேண்டியதாயிற்று. ஆகவே, இக்காலத்தில் இங்கிலாந்து டச்சுக்காரரின் குடியேற்ற நாடுகளையும் பட்டணங்களையும் கைப்பற்றிக் கொண்டது. 1816-ம் வருஷம் சமாதானம் நடந்தபோது ஜாவா என்னும்

தீவானது டச்சுக்காரருக்குத் திருப்பிக்கொடுக்கப்பட்டது; 1824-ம் வருஷம் சுமத்ரா என்னும் தீவு மாலாக்காவுக்குப் பதிலாகக் கொடுக்கப்பட்டது. இக்காலத்திலும் இத்தீவுகள் டச்சுக்காரரின் ஆதிபத்யத்தின்கீழ் அடங்கியுள்ளன. இந்தியாவிலோ டச்சுக்காரருக்கு சின்சூரா என்னும் ஒரே இடந்தானிருந்தது. இதையும் இங்கிலீஷ்காரருக்கு அவர்கள் கொடுக்கவேண்டி வந்தது. இவ்விதமாக நமது நாட்டில் டச்சுக்காரரின் அதிகாரம் க்ஷீணதசையை யடைந்தது. ஹாலண்டென்னும் சிறிய தேசம், இங்கிலாந்து பிரான்சு முதலிய பெரிய தேசங்களுடன் சரியாகச் சண்டைபோட முடியுமா?



## 4. இந்தியாவிற்குவந்த முக்கிய ஐரோப்பியர்கள் ஆங்கிலேயர்

1. சென்ற இரண்டு பாடங்களில் போர்ச்சுகீசியரும், டச்சுக்காரரும் நமது தேசத்தில் 16-வது, 17-வது நூற்றுண்டுகளில் முறையே பிரபலமாகி க்ஷீணதசையை யடைந்ததைப்பற்றிப் படித்தீர்கள். இப்பாடத்திலும், இதற்கடுத்த பாடத்திலும் ஐரோப்பியரில் மிகவும் பலிஷ்டராகிய ஆங்கிலேயரும், பிரஞ்சுக்காரரும் நமது தேசத்திற்குவந்த செய்தியைக் கூறுவோம்.

2. போர்ச்சுகீசியரின் வியாபாரம் மிகவும் உன்னத நிலைமையிலிருக்கும்போது நமது தேசத்தின் ஐசுவர்யத்தைப்பற்றிப் பல சமாசாரங்கள் இங்கிலாந்திற்கெட்டின. சில லண்டன் வியாபாரிகள் "கிழக் கிந்தியா கம்பெனி" என்றோர் கம்பெனியை ஏற்படுத்தி, கிழக்கு தீவுகளுடு தோடு வியாபாரஞ் செய்யும் பொருட்டு அக்காலத்தில்

இங்கிலாந்தை அரசாண்ட எலிசபெத் ராணியிட மிருந் தோர் சாஸனம் பெற்றார்கள். அடுத்த வருஷம் நான்கு கப்பல்கள் இந்தியாவிற் கனுப்பப்பட்டன; அவைகள் மலாகா, ஜாவா முதலிய இடங்களில் சரக்குக ளேற்றிக் கொண்டு திரும்பி வந்தன. இவ்விதமாகப் பல முறை அநேக பிரயாணங்கள் செய்யப்பட்டு அவை யாவும் அநு கூலமாகவே முடிந்தன. ஆகவே, ஆங்கில வர்த்தகர்கள் தைரியங் கொண்டு **சூரத், காம்பே** என்னு மிடங்களில் பண் டகசாலைக ளேற்படுத்தினார்கள்.

3. ஆனால் போர்ச்சுகீசியரும், டச்சுக்காரரும் உன்னத ஸ்தானத்தி லிருக்கும் வரை ஆங்கிலேயர் மிகுந்த முன்னேற் றங்காட்ட முடியவில்லை. அம்பாய்னா படுகொலை நடந்த காரணம் பற்றி ஆங்கிலேயர் கிழக்கு தீவுகணத்தில் வியா பாரஞ் செய்யமுடியவில்லை. அவர்களுடைய சுறுசுறுப்பை யெல்லாம் இந்தியாவில் மட்டும் காட்டி வந்தார்கள். கிழக் கிந்திய தீவுகளுடன் வியாபாரம் நின்றுவிடவே, நமது தேசத்தின் கடற்கரை யெங்கு மிவர்கள் பண்டகசாலைக ளேற்படுத்திக்கொண்டனர். ஆரம்பத்தில் மொகலாய சக்கரவர்த்திகள் இவர்கள் கொண்டுவந்த சரக்குகளின் மீது பெருத்த வரி போட்டு வந்தார்கள். இதை நிவர்த்தி செய்யும் பொருட்டு இங்கிலாந்தின் அரசராகிய முதலாவது ஜேம்ஸ் என்பவர் ஜஹாங்கிர் சமஸ்தானத்திற்கோர் ராஜ தூதரை யனுப்பினார். இவர்தான் **ஸர் தாமஸ் ரோ** என்பவர். இவரை ஜஹாங்கீர் மரியாதையாக வரவேற்று அன் புடனாதரித்தார். ரோ என்பவர் மொகலாய சமஸ்தானத் தில் 1612-ம் வருஷ முதல் 1615-ம் வருஷம் வரை இப் பதவியைப் பெற்றிருந்தார். இக்காலத்தி லிவர் இங்கிலாந் திற்கும் இந்தியாவிற்கும் ஒரு வியாபார உடன்படிக்கை

உண்டாக்கிவிட முயன்றார்; ஆனால் அவர் பிரயத்தனம் வீணாகப்போயிற்று. இருந்தாலும் இவர் தம் தேசத்து வியாபாரிகளுக்குச் சக்கரவர்த்தியிடமிருந்து சில விசேஷ உரிமைகளைப் பெற்றார். மொகல் சக்கரவர்த்தியி னதிகாரம் பலமாயிருந்தவரை இவர்களை ஒருவருந் தொந்தரவு படுத்த வில்லை. தங்களுடைய வேலையாட்களைத் தகுந்த ஒழுங்கு முறைகளில் வைத்து நடத்தும்படி கம்பெனிகாரர்க்குச் சில அதிகார உரிமைகள் கொடுக்கப்பட்டன. நாளடைவில் இவர்களுக்குக் கொஞ்சம் நாட்டுரிமை உண்டாகவே இவர்கள் முனிசிபாலிடிக ளேற்படுத்தி, நியாயாதிபதிகளையும், போலீஸ்காரரையும் நியமித்து, தம்மதிகாரத்திற் குட்பட்ட ஜனங்களின் வழக்குகளைத் தீர்த்து, அவர்களின் சொத்துக் களையும், உரிமைகளையுங் காத்துவந்தனர்.

4. கிழக்குக் கரையோரத்தில், கோல்கொண்டா சுல்தான் உத்தரவின்பேரில் இவர்கள் 1632-ம் வருஷம் மசூலி பட்டணமென்னு மிடத்தில் ஓர் பண்டக சாலையை ஏற் படுத்தினார்கள். ஆனால் இவர்கள் டச்சுக்காரரின் உபத் திரவந் தாங்கமுடியாமல் அவ்விடத்தினின்றும் நீங்கவேண் டியதாயிற்று. 1639-ம் வருஷத்தில் சந்திரகிரி ராஜனின் பாளையக்காரனாகிய செங்கல்பட்டுச் சென்னப்ப நாயக்க னென்பவர் கூவம் நதி முகத்துவாரத்தில் ஓரிடத்தை யளித் தார். இந்த இடத்தில்தான் தற்காலத்திய மதராஸ் அல் லது சென்னப்பட்டண மென்ற நகர் கட்டப்பட் டிருக் கிறது. இதுதான் ஆங்கிலேயருக்கு நமது தேசத்தில் முதல் முதலாக ஏற்பட்ட நில உரிமை. சென்னை தற் காலத்தில் நமது ராஜதானிக்குப் பிரதான பட்டணம். இந்த இடம் இவர்கள் கைவசம் வந்தவுடன் இங்கே ஸெயின்ட் ஜியார்ஜ் கோட்டை யென்றோர் அரணைக் கட்டிக்கொண்



ஸெயின்ட் ஜியார்ஜ் கோட்டை, சென்னை

டார்கள். இப் பிரதேசத்தில் வியாபாரம் வெகுகாலம் வரைக்கும் சிறந்து விளங்கவில்லை. இதற்குக் காரணம் யாதெனில், அடிக்கடி வரும் பஞ்சங்களும், சுதேச ராஜாக்களுக்குள் நடந்துவந்த யுத்தங்களுமே. ஆகையால் இவர்கள் தம் ஊக்கத்தை வங்காளத்திற் செலுத்தலாயினர். 1633-ம் வருஷத்திலேயே இவர்கள் வங்காள கவர்னரிடமிருந்து, ஒரிஸா மாகாணத்தில் வியாபாரஞ் செய்வதற்கு அனுமதி பெற்று, ஹரிஹர்பூர், பாலசோர் என்னுமிடங்களில் குடியேற்ற நாடுகளை ஏற்படுத்தினர்கள். ஷூஜா என்பவர் கவர்னராயிருந்தபோது இவர்கள் ஹூக்ளி, பாட்னு, டாக்கா, மூர்ஷதாபாத், காஸிம்பஜார் முதலிய இடங்களில் வர்த்தக சாலைகள் கட்டுவதற்கும், பட்டு, வெடியுப்பு, சர்க்கரை முதலிய சரக்குகளில் வியாபாரஞ் செய்வதற்கும் உத்தரவு பெற்றுர்கள். மேற்குக் கடற்கரை யோரத்திலுள்ள பம்பாய் தீவு இச்சமயத்தில்தான் இவர்கள் கையில் வந்தது. இத்தருணத்து இங்கிலாந்தில் அரசனுயிருந்த இரண்டாவது சார்லஸ் என்பவர் போர்ச்சுகல் தேசத்தின் இராஜகுமாரியைக் கலியாணஞ் செய்து கொண்டார். அவருக்குத் தற்காலத்தில் பம்பாயிருக்குமிடம் ஸ்ரீதனங்களி லொன்ருகக் கொடுக்கப்பட்டது. பம்பாய், கம்பெனியாரின் கைவசம் வந்த சிறிது காலத்திற்கெல்லாம் அது அவர்களின் மேற்குக் கடற்கரை வியாபாரத்திற்குத் தலைநகராயிற்று. தபதி நதி, வண்டல் மேவிப்போனதால், அதன் முகத்துவாரத்தி லிருந்த சூரத் துறைமுகப் பட்டணம் க்ஷீணித்து போயிற்று.

## வங்காளத்தில் ஆங்கிலேயரின் பண்டக சாலைகள்

5. ஐரோப்பியர் இதற்குமுன் நமது தேசத்திற்கு வந்த அன்னியர்களைப்போ லல்லாது, கடல் மார்க்கமாக

வந்து, கூடுமானவரை நதி முகத்துவாரங்களில் தம் பண்டக சாலைகளை ஏற்படுத்தி, அந்நதிகள் வழியாகவே உள் நாட்டில் பரவித் தம்மதிகாரத்தை ஸ்தாபனஞ் செய்து கொண்டார்கள். இதன் உண்மை ஆங்கிலேயர் வங்காளத்தில் பரவிய சரித்திரத்தைப் படித்தால் உங்களுக்கு நன்கு விளங்கும். சில வருஷங்களாக ஆங்கில வியாபாரிகள் வங்காளத்தில் செழிப்பாக இடையிடையே வியாபாரத்தை நடத்தி வந்தார்கள். இருந்தாலும் இவர்களுக்கு இடையிடையே துன்பங்களும் நேர்ந்துகொண் டிருந்தன. ஸையிஷ்டகான் என்பவர் 1663-ல் வங்காளகவர்னரா யிருந்த போது, அவர் கீழிருந்த உத்தியோகஸ்தர்கள் ஆங்கில வியாபாரிகளைத் துன்பப்படுத்தி, அவர்களிடம் ஒவ்வொரு சமயத்திலும் சாக்குப் போக்குச் சொல்லிப் பணத்தைப் பிடுங்கினர். இதுவுந்தவிர ஆங்கில வியாபாரிகள் தங்கள் சரக்குகளுக்காகச் சுங்கஞ் செலுத்த வேண்டியதில்லை யென்று பாதுஷாவிடமிருந்தே விலக்குப்பத்திரம் பெற்றிருந்தும் வங்காளகவர்னர் அதைச் செலுத்தும்படி உத்தரவு செய்தார். ஆகவே, இதை அடக்கவேண்டு மென்று கம்பெனிக்காரர் தீர்மானித்து மொகலாய சக்கரவர்த்தியின் மீது யுத்தஞ் செய்யச் சித்தமானார்கள்.

6. இதைக்கேட்ட பாதுஷா, அவுரங்கசீப்புக்குவந்த கோபத்துக்கு அளவில்லை. அவர் ஆங்கிலேயரை அப்போதே தம் ராஜ்யத்தினின்று துரத்திவிட உத்தரவு செய்தார். மசூலிபட்டணத்திலிருந்த ஆங்கிலேயரின் வர்த்தக ஸ்தலம் இந்தியத் துருப்புக்களால் பிடிக்கப்பட்டது. இதேமாதிரியாக விசாகப்பட்டணத்தி லிருந்த ஆங்கிலேய கிட்டங்கிகள் தாக்கப்பட்டுத் தகர்ந்துபோயின. ஆனால் பாதுஷாவுக்கு மட்டும் ஆங்கிலேயரை எஞ்ஞான்றும் தம்

நாட்டைவிட்டுத் துரத்திவிட வேண்டுமென்கிற எண்ணங் கிடையாது. ஆங்கிலேயர் போய்விட்டால் தேசத்தின் வியாபாரங் குறைந்துபோகு மென்பதும், ஆகையால் பொக்கிஷத்திற்கு வரும்படி குறைவாய்விடு மென்பதும் அவருக்கு நன்றாய்த் தெரியும். அதுவுமன்றி, ஆங்கிலேயர் கடற்பல மிருந்தவர்க ளானபடியால் இந்தியாவி லிருந்து மெக்காவுக்குப்போகும் யாத்திரைக் கப்பல்களை அவர்கள் தடுத்துவிடக்கூடும். இக்காரணத்தால் ஆங்கிலேயர் சமாதான நிமித்தமாக அவருடன் விண்ணப்பஞ்செய்துகொண்ட போது, அவுரங்கசீப் அவர்களைத் தொந்தரவின்றி வியாபாரஞ் செய்ய விடும்படி உத்தரவு செய்தார். ஆனால், ஆங்கிலேயர் பாதுஷாவுக்கு 1½ லட்ச ரூபாயும், ஒவ்வொரு வருஷமும் சுங்கத்திற்குப் பதிலாக 3000 ரூபாயுங் கொடுப்பதாக ஒப்புக்கொள்ளவேண்டி யிருந்தது. இந்த விவகாரந் தீர்ந்தவுடன் ஆங்கிலேயர் ஹுக்ளிக்குத் திரும்பிப்போக வில்லை; இதற் கடுத்துள்ள சுதாநதி என்னுமிடமே தங்களுக்கு வசதியான தென்று கருதி அங்கே தம் பண்டகசாலையை ஏற்படுத்தினார்கள். அவ்விடத்தைத் தேர்ந்தெடுத்தவர் ஜாப் கார்னுக் என்னும் ஆங்கிலத்தலைவர். இதுதான் கல்கத்தா நகரம்.

7. இவ்விடத்தில் பண்டகசாலைகள் கட்டிக்கொள்ளலாமென்று ஆங்கிலேயர் உத்தரவு பெற்றிருந்தபோதிலும் வங்காள கவர்னர் இவர்களுக்குக் கோட்டை கட்டிக்கொள்ள அனுமதி கொடுக்கவில்லை. ஆனால், 1696-ம் வருஷத்தில் சுபாசிங்கர் என்ற ஒரு மிராசுதாரன் திடீரெனக் கலகஞ் செய்து, பர்த்வான் ராஜாவைக் கொன்று, ஹுக்ளியைக் கைப்பற்றி, அக்கம் பக்கங்களை நடுநடுங்கச் செய்துவிட்டான். சிந்துரா, சந்திரநாகூர், சுதாநதி முதலிய இடங்களி

ளுள்ள ஐரோப்பியர் தங்களுடைய பண்டகசாலைகளைச் சுற்றிக் கோட்டைகளைக் கட்டிக்கொள்வதற்கு அனுமதி கொடுக்குமாறு கேட்டுக்கொண்டார்கள்; அவரது வேண்டு கோளின்படி உத்தரவளிக்கப்பட்டது. இச் சமயத்தில் தான் ஆங்கிலேயர் ஒரு கோட்டைகட்டி, அதற்கு அக் காலத்தில் இங்கிலாந்தி னரசராகிய மூன்றுவது உவில்லியம் என்பவரின் பெயரைக் கொடுத்தார்கள். அக் கோட்டைக் குத்தான் போர்ட் வில்லியம் என்று பெயர் வழங்குகிறது. இச் சமயத்தில் அவுரங்கசீப் தன் பேரர்களி லொருவராகிய அஸிம்ஷா என்பவரை வங்காள கவர்னராக நியமித்தார். ஆங்கிலேயர் அவருக்கு வெகுமதிகள் மிகுதியாகக் கொடுத்துப் பிரீதிசெய்து 1698-ம் வருஷத்தில் சுதாநதி, கோவிந்தப்பூர், கல்கத்தா என்னு மிடங்களை, வருஷத்திற்கு 1200 ரூபா பாதுஷாவிற்குக் கொடுக்கிறதென்ற நிபந்தனையின் மேல், சர்வசுதந்திரமாகப் பெற்று, அவ் விடங்களில் தம்மிஷ்டப்படி அரசாங்கம் செலுத்திக்கொள்வதற்கு அவரிடம் உத்தரவு பெற்றூர்கள். இது முதற்கொண்டு ஆங்கிலேயரின் வங்காளக் குடியேற்ற நாடு செல்வாக்கும் பிரபலமுமடைய ஆரம்பித்தது. இதற்கென்று தனியாக ஒரு கவர்னர் ஏற்படுத்தப்பட்டார். ஆகவே இச் சமயத்தில், சென்னப்பட்டணம், பம்பாய், கல்கத்தா என்ற மூன்றிடங்களே நமது தேசத்தில் ஆங்கில வர்த்தகத்தின் பிரதான ஸ்தலங்களா யிருந்தன.

8. கிழக்கிந்திய கம்பெனியாரின் பெருத்த லாபத்தைப் பார்த்த மற்ற ஆங்கிலேயரும் வேறு கம்பெனிகள் உண்டாக்கி ஆங்கில அரசரிடம் பட்டயம் பெற்று, மொகல் பாதுஷாவிற்கும் பிரத்தியேகமாய்த் தூதனுப்பி, இந்தியாவுடன் வியாபாரஞ் செய்யத் தொடங்கினர். ஆனுல் இவர்

களின் காரியம் திருப்திகரமாக விருத்தி யடைய வில்லை. இதுவுமன்றி இவர்களுக்கும், பாதுஷாவுக்கும் சண்டைகூட வருந்தறுவாயிலிருந்தது. முடிவில் இரு கம்பெனிக்காரரும் ஒற்றுமையின்மையாலும், சண்டையாலும் தங்களிரு தரத்தார்க்குள் ஏற்படக் கூடிய கேடுகளை நன் கறிந்துகொண்டார்கள். ஆகவே, 1708-ம் வருஷத்தில் இரு கம்பெனியாரும் **ஐக்கிய கிழக்கிந்திய கம்பேனி** என்ற பெயருடன் ஒன்று சேர்ந்து வியாபாரஞ் செய்யத் தலைப்பட்டனர். இது முதற் கொண்டு, இக் கம்பெனியாரைத் தவிர வேறு எவ்வித ஆங்கிலேயரும் இந்தியாவுடன் வியாபாரஞ் செய்யலாகாதெனப் பார்லியமெண்ட் சட்ட மூலமாய் மறுத்துவிட்டது. 1813ஆம் வரை இச் சர்வாதீனம் ஐக்கிய கிழக்கிந்திய கம்பெனியாரிடமே இருந்தது. இவர்கள் பிரபல்யத்திற்கு வரும்போது மொகலாய சக்கரவர்த்தியி னதிகாரம் க்ஷீணதிசையை அடைய ஆரம்பித்தது. ஆகையால் தம் சொத்து சுதந்திரங்களைக் காப்பாற்றிக்கொள்வதற்குப் பாதுஷா கொடுத்த பட்டயங்கள் போதா வென்றும், தம் ஆயுத பலத்தையே தாம் நம்பி யிருக்கவேண்டு மென்றும் இவர்கள் கண்டு கொண்டார்கள்.



## 5. இந்தியாவிற்கு வந்த முக்கிய ஐரோப்பியர்கள் பிரஞ்சுக்காரர்

1. சென்ற பாடத்தில் ஆங்கிலேயர் நமது நாட்டிற்கு வியாபார நிமித்தம் வந்து, பல இடங்களில் பண்டகசாலைகளையும், பட்டணங்களையும் ஏற்படுத்திக்கொண்ட விஷயத்தைப்பற்றி நீங்கள் படித்தீர்கள். இந்தப் பாடத்தில், பிரஞ்சுக்கார ரென்ற மற்றொரு ஐரோப்பிய தேசத்தார் நம்

தேசத்திற்கு அதே காரணம் பற்றி வந்ததைக் குறித்து நீங்கள் படிப்பீர்கள். இந்தியாவிற்கு வந்த அன்னிய தேசத்தாரில் போர்ச்சுகீஸியரும், டச்சுக்காரரும் இங்கே வேரூன்ற முடியவில்லை. அவர்கள் நிலையற்றுப் போனதின் காரணங்கள் உங்களுக்குத் தெரியும். பிரஞ்சுக்காரரி னதிகாரமும், மற்ற இருவர்களி னதிகாரத்தைப் போலவே முடிவில் ஒழிந்து போயிற்று. ஆனால் அது வெகு காலம் வரைக்கும் நல்ல நிலைமையி லிருந்து பின்பு ஆங்கிலேயரின் அதிகாரத்துடன் எதிர்க்க நேர்ந்தமையால்தான் கேடடைந்தது. இதைப் பற்றி மற்றப் பாடங்களில் படிப்பீர்கள். இங்கு பிரஞ்சுக்காரர் ஆங்கிலேயரைப்போல் வந்து தம் வியாபார ஸ்தலங்களை ஏற்படுத்தினதைப்பற்றி மட்டும் எழுதுவோம்.

2. ஆங்கிலேயர் நமது தேசத்திற் கெப்போது வந்தார்களோ அனேகமாய் அதே காலத்தில்தான் பிரஞ்சு வியாபாரிகளும் இங்கு வந்தார்கள். 1604-ம் வருஷத்திலேயே பிரஞ்சு கம்பெனிக ளேற்பாடு செய்யப்பட்டு கிழக்கு தேசங்களுக்குக் கப்பல்கள் அனுப்பப்பட்டன. ஆனால் 1664ஆம் வரை இக் கம்பெனிக ளொன்றும் விசேஷமாகப் பிரபலமடைய வில்லை; இந்தியாவின் கடற்கரையெங்கும் பண்டகசாலைக ளேற்படுத்தப்பட்டன. நான்கு வருஷத்திற்கப்புறம், அதாவது, 1668-ம் வருஷத்தில், பிரஞ்சுக்காரர் சூரத் என்னுமிடத்திலும், மசூலிபட்டணத்திலும் வியாபார ஸ்தலங்க ளேற்படுத்துவதற்குப் பல சௌகரியங்கள் பெற்றனர். 1674-ம் வருஷத்தில் பீஜப்பூர் கவர்னராகிய ஷேர்கான் லோடி என்பவரிடமிருந்து பிரஞ்சுக்காரர் தற்காலத்தில் புதுச்சேரியிருக்கு மிடத்தை விலைக்குவாங்கி, அதில் பல பண்டகசாலைகளையும், கைத்தொழிற் சாலைகளையு மேற்படுத்தினார்கள். வங்காளத்தில் **சந்திரநாகூர்** என்னுமிட

மும் பிரஞ்சுக்காரர் வசம் வந்தது. **1725**-ம் வருஷத்தில் பிரஞ்சுக்காரர் மலையாளக் கடற்கரை யோரத்திலுள்ள **மாகி** என்னுமிடத்தைக் கைப்பற்றினார்கள்.

3. **ட்யூமாஸ்** (1735-41). இதுவரை பிரஞ்சுக்காரர் இந்தியாவில் வியாபார விஷயங்களில் விசேஷ கௌரவம் பெற்றிருந்தார்கள். ஆனால் அவர்கள் ராஜாங்க விஷயங்களில் நமது தேசத்தில் கண்ணிய மடைந்தது, **ட்யூமாஸ்** என்பவர் கவர்னராயிருந்த காலம் முதற்கொண்டுதான். இவர் 1735-ம் வருஷமுதல் 1741-ம் வருஷம் வரை, இப்பெரும் பதவியைப் பெற்றிருந்தார். இக்காலத்தில் டோஸ்ட் அலிகான் என்பவர் ஆற்காட்டிலிருந்து கர்னாடக மாகாணத்தின் நவாபாகப் பாதுஷாவின் ஆக்ஞையின் கீழ் ஆண்டு வந்தார். இவருக்கும் பிரஞ்சுகவர்னருக்கும் மிகுந்த நேசம். ட்யூமாஸ், இவர் மூலமாகப் பாதுஷாவிட மிருந்து புதுச்சேரியில் தங்கசாலை ஏற்படுத்தித் தங்கள் நாணயங்களைத் தாங்களே அடித்துக்கொள்ளும் சுதந்திரத்தைப் பிரஞ்சுக்காரருக்கு வாங்கிக்கொடுத்தார். இந்தக் கவர்னர் காலத்தில் தான் **காரைக்கால்** என்னுமிடம் பிரஞ்சுக்காரர் வசம் வந்தது.

4. 1740-ம் வருஷத்தில் மஹாராஷ்டிரர்கள் வெகு காலம் நின்ற சுங்கநிலுவையை வசூலிக்க எண்ணி, தக்ஷிண பீடபூமியினின்று கர்னாடக சமவெளியில் புகுந்தனர். நவாப் டோஸ்ட் அலிகான் இவர்களைத் தமால்சேரிக் கணவாய் (படத்தில் பார்க்க) என்னுமிடத்தில் தடுக்க முயன்றார். அங்கு நடந்த சண்டையில் அவர் சேனை முதுகு காட்டியோட அவருங் கொல்லப்பட்டார். அந்த நவாப்பின் குமாரராகிய சப்தர் அலி வேலூருக் கோடிவிட்டார்; சந்தாஸாகிபோ திரிசிராப்பள்ளிக்கு விரைந்து சென்று, அங்

குள்ள கோட்டை நிறையத் தானியாதிகளை நிரப்பி வைத்துக்கொண்டு முற்றுகைக்குச் சித்தமாக இருந்தனர். ஆனால் மஹாராஷ்டிரர் வெகு தந்திரசாலிகள். அவர்கள் சப்தர் அலியை நவாபாகச் செய்து விடுவதென்று அவருடன் இரகசியமாக உடன்படிக்கை செய்துகொண்டார்கள். இது முடிந்தவுடன், சந்தாஸாகிபைத் திரிசிராப்பள்ளிக் கோட்டையினின்று வெளிவருவதற்கு ஒருபாயஞ் செய்தார்கள். அவர்கள் கர்னாடகத்தினின்றும் தக்ஷிண பீட பூமிக்குத் திரும்பிப் போவதாகப் பாசாங்கு செய்யவே, சந்தாஸாகிபும் வெகு சந்தோஷமாக வெளியில் வந்து, அபாயமில்லையென்று நினைத்துத் தான் சேகரித்து வைத்திருந்த தானியாதிகளை விற்றுவிட்டார். இதை யறிந்த மஹாராஷ்டிரர்கள் திடீரென்று மறுபடியும் கர்னாடகத்திற்கு வந்து, திரிசிராப்பள்ளியில் சந்தாஸாகிபைச் சிறிது காலம் முற்றுகை போட்டு, அவரை இணங்கும்படி செய்து, அவரையுங் கைதியாகச் சத்தாரா நகரத்திற்குக் கொண்டு போய்விட்டார்கள்.

5. ஆனால் நல்ல வேளையாய்க் காலஞ் சென்ற டோஸ்ட் அலிகானின் சம்சாரமும், அவள் புத்திரியாகிய சந்தாஸாகிபின் மனைவியும் நகை முதலிய ஜங்கம சொத்துக்களுடன் மஹாராஷ்டிரர் வரும்போது புதுச்சேரிக்கு இரக்ஷணத்திற்காக அனுப்பப்பட்டனர். இச் சமயத்தில் ட்யூமாஸ் என்பவர் புதுச்சேரியில் கவர்னராக இருந்தார். மஹாராஷ்டிரத் தலைவராகிய ரகோஜி பான்ஸ்லே என்பவர் தம் சேனையோடு புதுச்சேரிக் கோட்டை முன்வந்து நின்று, தஞ்சம் புகுந்த பெண்டீர்களைத் தம்மிடத்தில் ஒப்புவிக்க வேண்டுமென்று கேட்டார். அதற்குத் தைரிய மிகுந்த ட்யூமாஸ் "சந்தாஸாகிபின் மனைவி புதுச்சேரியில் பிரஞ்சு அரசரின்

ஆதரவின்கீ ழிருக்கிருள். ஆகையால் அவளை உம்மிடத்தி லொப்புவிப்பதிலும் இந்தியாவிலுள்ள பிரஞ்சுக்காரரெல்லாம் உயிர் துறப்பதே மேலாகும்" என்ற தக்க விடை கொடுத்தார். மஹாராஷ்டிரர்கள் கோட்டைக்கு வெளிப்புறத்திலுள்ள கிராமங்களை நாசஞ் செய்தபோதிலும், புதுச்சேரியைத் தாக்காமல் போய்விட்டார்கள். வன்மை மிகுந்த மஹாராஷ்டிரர்களைக்கூட ட்யூமாஸ் லட்சியம் செய்யாது இவ்வித பதிலளித்ததால் ட்யூமாஸின் கியாதி தென்னிந்தியாவெங்கும் பரவிற்று. நிஜாம் தமது மதிப்பைக் காட்டும் பொருட்டு அவருக்குத் திவ்யமான கௌரவ உடுப்பொன்று அனுப்பினுர். இதே விதமாக டில்லி பாதுஷாவும் இவருக்கு நவாபென்ற பட்டமளித்து '4500 குதிரைப் படைத்தலைவர்' என்ற பதவியையுங் கொடுத்தார்.

6. **ட்யூப்ளே** இவ்விதவெற்றி பெற்றவுடன் ட்யூமாஸ் தம் பெரும் பதவியை ராஜிநாமா செய்தார். இவருக்குப்பின் பிரஞ்சு ராஜ்யதந்திர நிபுணராகிய **ட்யூப்ளே** என்பவர் பிரஞ்சு இந்தியாவிற்குக் கவர்னர் ஜெனரலாக்கப் பட்டார். இவருடைய சாமர்த்தியத்திற்கும் ஆசைக்கும் கங்குகரையில்லை. இவர் இப்பதவியைப் பெறுமுன் சந்திரநகரென்னுமிடத்தில் 10-வருஷம் கவர்னராகவிருந்தார். இவர் கவர்னராக வருமுன் அவ்விடம் க்ஷீணித்துப்போகும் குக்கிராமமாயிருந்தது. ஆனுல், இவர் கவர்னராயிருந்த காலத்திற்



டியூப்ளே

குள்ளே, அது பரபரப்பும் ஆரவாரமும் மிகுந்ததோர் வியாபார பட்டணமாயிற்று. இவ்வித அபிவிருத்திக்கு இவருடைய பெருந்திறமையே முக்கிய காரணம். இவருடைய மனைவி இவரைப் போலவே மிகுந்த சாமர்த்தியம் பெற்றவள். இம்மாது இந்தியாவிலே பிறந்து, இந்தியாவிலே வளர்ந்தமையால் இவளுக்குச் சுதேச பாஷைகளும், தேச நடையுடை பாவனைகளும் நன்றாகத் தெரியும். இவள் தன் கணவன் கவர்னர்-ஜெனரலாக இருந்தவரை அவருக்குப் பிரதான மந்திரியாகவும், அரசியல் விஷயங்களில் தகுந்த யோசனை சொல்பவளாகவும் இருந்தாள். இவர் காலத்தில்தான் பிரஞ்சுக்காரரின் அதிகாரம் தென்னிந்தியாவில் மிகுந்த உன்னத நிலையை அடைந்தது. பிரஞ்சு அதிகாரத்தை இப்படி உன்னத நிலைமைக்குக் கொண்டுவர முயலும்போதுதான் ட்யூப்ளே ஆங்கிலேயருடன் சண்டை செய்ய நேரிட்டது. அதை யடுத்த அத்தியாயத்தில் விவரித்துச் சொல்லுவோம்.



## 6. ஆங்கில பிரஞ்சு கர்னாடக யுத்தம்
### (முதல் யுத்தம்; பிரஞ்சு வெற்றி)

1. வியாபார விஷயத்திலும், ராஜாங்க விஷயத்திலும் பிரஞ்சுக்காரரும், ஆங்கிலேயரும் தங்கள் தங்கள் ஏகாதிபத்யத்தை நிலை நிறுத்தப் பேராவல் கொண்டிருந்தனர். இவ்விருவரும் இக் காரணம் பற்றி மிகுந்த வைராக்கியம் பெற்றவர்களா யிருந்ததால் சமாதானமென்ற பேச்சிற்கே இடமில்லாமலிருந்தது. இவர்களின் பொறாமைக்குத் தக்கவாறு அக் காலத்தில் நமது தேசத்தின் அரசாங்க நிலைமையும் மிகவு மேற்றதா யிருந்தது. நீங்கள் முன் படித்த

வாறு, டில்லி பாதுஷாவின் அதிகாரம் அவுரங்கசீப் காலஞ் சென்ற பின் மிகவுங் குறைந்துவிட்டது. அவருக்குப் பின் வந்த சக்கரவர்த்திகளெல்லாம் மாகாண கவர்னர்களை அடக்கி ஆள முடியவில்லை. ஆகையா லிவர்கள் தமக்குள் சண்டை போட்டுக்கொள்ளத் தலைப்பட்டார்கள்.

2. ட்யூப்ளே கவர்னர்-ஜெனரலாக வந்த மறு வருஷம் நவாப் ஸப்தர் அலி தன் மைத்துனனால் கொலை செய்யப் பட்டார். (1742-ம் வூ) எனினும், ஸப்தர் அலியின் இளங் குமாரனே பட்டத்திற்கு வரவேண்டி யிருந்தது. இத் தருணத்தில் தென்னிந்தியாவில் **நிஜாம் அல்-முல்க்** என்பவர் பாதுஷாவின் கீழ் சுபேதாரா யிருந்தார். தக்ஷிணப் பிரதேச மெல்லாவற்றிற்கு மிவர் மேலதிகாரி. ஆனால் வாஸ்தவத்தில் பாதுஷாவிற்கு இவர் கீழ்ப்பட்டவரில்லை. இவர் மொகலாய சமஸ்தானப் பிரபுக்களில் மிகவும் முக்கிய மானவர். கர்னாடக ராஜ்யத்தில் நடக்கும் அக்கிரமங்களைக் கண்டித்து அப் பிரதேசத்தை ஒழுங்காக வைக்குமாறு இவர் 1743-ம் வருஷத்தில் பெருத்த தொரு சேனையுடன் கர்னாடகத்திற்கு வந்தார். வந்தவுடன் இவர் **அன்வார்தீன்** என்ற பிரபுவை இளைய நவாபுக்கு உதவித் துணையாக நியமித்து ஐதராபாத்திற்குத் திரும்பினார்; ஆனால் அதே வருஷம் இளைய நவாப் கொலையுண்டார். ஆகவே, அன்வார் தீன் என்பவரே நிஜாமால் நவாபாகத் தேர்ந் தெடுக்கப் பட்டனர்.

3. இப்படி யிருக்கும்போது (1745) ஐரோப்பாவில் இங்கிலாந்திற்கும், பிரான்சிற்கும் சண்டை தொடங்கிற்று. இவ்விதச் சண்டைகள் அடிக்கடி அவ்விரு தேசத்தார்க்கும் பல வருஷங்களாக நடந்து வந்தன. இவைகளுக்குப் பல காரணங்கள் உண்டு. இதில் முக்கியமானது, இந்தியா

விலும் அமெரிக்காவிலும், ஆங்கிலேயருக்கும், பிரஞ்சுக்கார ருக்கும் வியாபார விஷயமாக ஏற்பட்ட பெரும்போட்டியே. ஐரோப்பாவில் சண்டை தொடங்கவே இந்தியாவிலும் இவ் விரு தேசத்தாருக்கும் யுத்தத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்யத் தொடங்கினர். இவ்விதமாக உலகத்தில் எங்கெந்த பாகங்களில் ஆங்கிலேயர்களும், பிரஞ்சுக்காரரு மிருந்தார் களோ, அந்தந்த பாகங்களில் இரு தாத்தாரும் தமக்குள் யுத்தஞ் செய்யத் தலைப்பட்டனர். இவ்விரு தரத்தாருக்கும் தம் தம் தேசங்களினின்றும் உதவிகள் அனுப்பப்பட்டன.

4. பிரான்சினின்று **லாபோர்டினே** என்பவர் சண் டைக் கப்பற்றிரளோடு இந்தியாவி லிருக்கும் பிரஞ்சுக்கார ருக்கு உதவியாக அனுப்பப்பட்டா ரென்ற செய்தி ட்யூப் ளேக்கு எட்டியது. ஆனால் ட்யூப்ளேக்கு உதவி வருமுன் ஆங்கிலேயர் பிரஞ்சுக்காரரைத் தாக்குவார்க ளென்ற பய மிகுந் திருந்தது. ஆகையால் அவர் நவாபிடம் சென்று இரு தாத்தாரும் தம் ராஜ்யத்தில் சண்டை செய்யக் கூடா தென்று மறுக்கும்படி ஏற்பாடு செய்தார். அடுத்த வருஷம் (1746) லாபோர்டினே, வழியில் தன்னை எதிர்த்த ஆங்கிலக் கப்பற் படையைத் தோற்கடித்து புதுச்சேரி துறை முகத்தில் வந்து சேர்ந்தார். ஆனால் ஆரம்பம் முதல் கப்பற் கூட்டத் தலைவருக்கும், கவர்னர்-ஜெனரலுக்கும் மனஸ் தாபம் ஏற்படத் தொடங்கிற்று. ட்யூப்ளே, உடனே சென்று சென்னபட்டணத்தைத் தாக்குமாறு லாபோர் டினேவை வேண்டினர். அதற் கவர் சரியாகப் பதில் கொடுக்காமல் அனேக மாதங்களை விவகாரத்தில் கழித்து விட்டார். பின்பு இவர் ஒருவாறுகத் தம் கப்பற் படை யோடு சென்னபட்டணத்திற்குச் செல்லும்போது பல மாதங்கள் கழிந்துவிட்டன. எனினும், அங்குள்ள ஆங்கி

லேயர் இவரை எதிர்க்க முடியவில்லை. ஆகையால் லாபோர்டினே எளிதாகச் சென்னையைப் பிடித்துக்கொண்டனர். ட்யூப்ளேக்கு ஆங்கில அதிகாரத்தை அடியோடு தொலைத்துவிட வேண்டுமென்ற ஆசை மிகுந்திருந்தது. ஆகையால் சென்னபட்டணக் கோட்டை கட்டிடங்களைக் கொஞ்சமும் பாக்கி விடாமல் இடித்துவிட வேண்டுமென்பது அவரது ஆவல். ஆனால், லாபோர்டினேக்கு இது கொஞ்சமும் விருப்பமில்லை. ஆகையால் ட்யூப்ளே எவ்வளவு தடுத்துரைத்தபோதும், இவர், அதைக் கவனியாமல் பெருத்த தொகையை ஆங்கிலேயர் ஈட்டுப் பணமாய்க் கொடுத்துச் சென்னையைத் திரும்பிப் பெறலாமென்று சமாதானம் செய்தார். இதனால் சிறிது காலங் கழிந்து பிரஞ்சு போர்க் கப்பற்படை ஐரோப்பாவிற்குத் திரும்பிப் போகமுடிந்தது.

5. உடனே ட்யூப்ளே பட்டணத்தை மறுபடியுந் தாக்க விருப்பங் கொண்டார். இதற்கு உத்தரவு கொடுக்கும்படி அவர் நவாபைக் கேட்டார். சென்னையைப் பிடித்து தம்மிடத்தில் கொடுப்பதாகப் பிரஞ்சு கவர்னர் வாக்குத்தத்தஞ் செய்த பின்பே, நவாப் உத்தரவு கொடுத்தார். மதராஸ் பிரஞ்சுக்காரரால் மிகவும் எளிதாகப் பிடிக்கப்பட்டது. நவாப் அந்த நகரத்தைத் தம்மிடம் ஒப்பிக்குமாறு கேட்க, வெகு நாள் வரைக்கும் ட்யூப்ளே அவருக்கும் போக்கு சொல்லிவிட்டார். நவாப் கோபங் கொண்டு ஒரு சேனையை அனுப்பினர். பிரஞ்சுக்காரர் மிகச் சிலரா யிருந்தும் நவாபின் சேனையை **அடையாற்றின் கரையி**லெதிர்த்துத் தோற்கடித்தார்கள். இதற்குக் காரணம் யாதெனில் பிரஞ்சுக்காரரின் யுத்த பயிற்சியும், ஏற்பாடும் நவாப் சேனையின் ஏற்பாட்டையும், பயிற்சியையும்விட மேன்மையாயிருந்தன. இவ்வெற்றியின் பயனாக இதுவரையில்

நவாபின் அதிகாரத்திற்குப் பயந்து வியாபார விஷயங்களை மட்டும் கவனித்து வந்த ஐரோப்பியர் ராஜாங்க விஷயங்களில் தாராளமாய்த் தலையிட ஆரம்பித்தனர். முன்போலத் தம்மைப் பிறர் தாக்குதலினின்று காத்துக்கொள்வதோடு நிற்காமல் வலியச் சண்டை செய்யக்கூட இவர்கள் ஆரம்பித்துவிட்டார்கள். ஐரோப்பிய மார்க்கங்களில் பழக்கப்பட்ட சிபாய்கள் இதர சுதேசப் போர் வீரர்களைவிட சிலாக்கியமெனக் கருதப்பட்டனர். மதருஸில் பிரஞ்சுக்காரரின் ஆதிக்கியத்துக்கு விரோதமாக நவாபு யாதொரு தடையும் செய்ய முடியவில்லை.

6. 1748-ம் வருஷத்தில் சென்னையைப் பிரஞ்சுக்காரரினின்று மீட்பதற்கும், அவர்களைப் பழிக்குப் பழி வாங்குவதற்கும் இங்கிலாந்திலிருந்து பாஸ்கவன் (Bosecowan) என்ற தலைவரின் கீழ் ஒரு பெருத்த சேனையும், போர்க் கப்பற்படையும் அனுப்பப்பட்டன. இப்படை சென்னைக்கு வந்தவுடன் காலதாமதமின்றி புதுச்சேரியை முற்றுகை போடுமாறு அந்நகரிற்கு அனுப்பப்பட்டது. புதுச்சேரி ஒன்றரை மாதம் வரை வெகு உக்கிரமாக முற்றுகை போடப்பட்டது. ஆனால் ட்யூப்ளே வெகு சாமர்த்தியமாகப் பாதுகாப்புப் படையையும் தளுந்த சாமான்களையும் தயார் செய்து ஆங்கிலேயரின் பிரயத்தனங்களெல்லாம் வீணுகப் போகுமாறு செய்துவிட்டார். இச் சமயத்தில் பருவக்காற்றும் வெகு கொடூரமாக ஆரம்பித்து விட்டது. ஆகையால் பாஸ்கவன் கப்பற்றிரளோடு சென்னைக்குத் திரும்பி வந்துவிடவேண்டியதாயிற்று. இம் முற்றுகையில் ஆங்கிலேயரில் ஆயிரம் பேருக்கு மேல் மாண்டனர்.

7. அடுத்த வருஷம் ஐரோப்பாவில் பிரஞ்சுக்காரரும் ஆங்கிலேயரும் சமாதானம் செய்துகொண்டனர். இச்

சமாதானத்தின்படி சென்னை ஆங்கிலேயருக்குத் திருப்பிக் கொடுக்கப்பட்டது. இந்த யுத்தம் பொதுவாகப் பிரஞ்சுக் காரருக்கு அனுகூலமாயிருந்ததுபற்றி அவர்களுக்கு இத னால் பெருங்கியாதி வந்தது. மகாராஷ்டிரர்களைப் புதுச் சேரியைத் தாக்க வொட்டாமல் அவர்கள் பயமுறுத்தி விட் டார்கள்; கிழக்குக் கரையில் ஆங்கிலேயருக்குப் பிரதான இடமாகிய சென்னையை வெகு எளிதாகப் பிடித்தார்கள்; முடிவாக ஆங்கிலேயர் புதுச்சேரியை முற்றுகை போடும் போது அவர்களால் அந்நகர் பிடிபடாமலிருந்தது மன்றி முற்றுகை போட்டவர்களே பெரு நஷ்டத்துடன் தோற் கடிக்கப்பட்டனர். எனவே ட்யூப்ளேயின் கீர்த்தியும், பிரஞ்சுக்காரரின் பெருமையும் தேசமெங்கும் வெகு சீக்கிரம் பரவின.

8. **இரண்டாவது யுத்தம்:**—சென்ற தொகுதியில் ஆங் கிலேயருக்கும், பிரஞ்சுக்காரருக்கும் கர்னாடகத்தில் நடந்த முதல் யுத்தத்தைப்பற்றி நீங்கள் படித்தீர்கள். அச் சண்டையோடு இருதேசத்தாருக்கும் ஏற்பட்ட மனஸ்தாப மும், போட்டியும் தீர்ந்து விட்டதென்று நினைத்தல் கூடாது. ஏனெனில், ட்யூப்ளே எவ்வளவு சாமர்த்திய முடையவராய் இருந்தும் ஆங்கிலேயரை அடியோடு தொலைக்கவேண்டிய சாதகங்கள் அவரிடமில்லை. அதுவுமின்றி ஆங்கிலேயர் தோல்வி அடைந்ததின் முக்கிய காரணம் அவர்களுக்கு இங்கிலாந்திலிருந்து உதவிச்சேனை வருமுன் பிரஞ்சுக்காரர் யுத்தத்தை ஆரம்பித்து விட்டதே ஆகையால் உதவி வந்த வுடன் சண்டை மறுபடியும் ஆரம்பிக்குமென்பதிற் சற்றுஞ் சந்தேகமில்லை. காரணம் பலமாயிருந்தபடியால் இவர்கள் இரண்டு மூன்று யுத்தங்கள் செய்ய நேரிட்டன. இதன்கூட, கர்னாடகராஜ்யத்தின் நிலைமை மிகவும் சீர்கேடாயிருந்தது.

ஆகையால் அவ்விருதாரத்தாரும் ராஜீய விஷயங்களில் தலையிட நேரிட்டது. அப்படித் தலையிடும்போது ஒருவரை ஒருவர் தாக்க நேர்வது சகஜந்தானல்லவா? இவ்விதமாக நடந்த யுத்தம் முடிவுக்கு வந்து, ஐரோப்பாவில் இங்கிலாந்தும், பிரான்சும் சமாதான நிலைமையிலிருந்தும், இந்தியாவில் இருதேசத்தாரும் யுத்தம் செய்யத் தலைப்பட்டனர். இதற்குக் காரணம், தென்னிந்தியாவின் நிலைமை சீர் கெட்டதும் அதன் ஆதிபத்யத்தை யாரடைவது என்கிற விவாதமுமே யாகும்.

9. இதைப்பற்றிச் சற்று விவரமாய்ச் சொல்வோம். 1748-ம் வருஷத்தில் தக்ஷிண சுபேதாராகிய நிஜாம் அல் மூல்க் காலம் செல்லவே அவரது இரண்டாவது குமாரராகிய நாஸர் ஜங் பட்டத்திற்கு வந்தார். ஆனால் அவர் பெண் வயிற்று பேரனாகிய முஸபர் ஜங் என்பவர் தம்பாட்டனார் தம் பேருக்கே மரணஸாஸனம் எழுதிவைத் திருப்பதாக மன்றாடி, தாமே பட்டத்திற்கு வரவிரும்பினர். இதற்காக இவர் சத்தாரா நகரத்தில் மகாராஷ்டிரரிடம் கைதியாயிருக்கும் சந்தாஸாகிப்போடு இரகசியமாக ஏற்பாடு செய்து வந்தார்.

அவர்களுக்குள் நடந்த ஒப்பந்தம் யாதெனில் இருவரும் ஒன்று சேர்ந்து முஸபர்ஜங்கை ஐதராபாத் நிஜாமாகவும், சந்தாஸாகிபை கர்னாடக நவாபாகவும் ஆக்கிவிட வேண்டுமென்பதே. பல நாட்களாய் தக்க சமயத்தை எதிர்பார்த்திருந்த ட்யூப்ளேக்குச் சரியான காலம் வாய்த்தது. இந்த விவகாரத்தில் தலையிட்டால் பிரஞ்சுக்காரரின் செல்வாக்கை அதிகரிக்கச் செய்யலாமென்பது அவருக்கு நன்றாகத் தெரியும். ஆகையால், இவர் முதல் முதல் மஹாராஷ்டிரருக்குப் பணம் கொடுத்து அவர்களினின்றும் சந்தாசாஹிபை விடுவித்தார். முஸபர்ஜங்கும் சந்தாசாஹிபும் தம்

சேனையைச் சேகரித்துக்கொண்டு பிரஞ்சுக்காரரின் உதவியோடுகூட கர்னாடகராஜ்யத்தின்மேல் படையெடுத்தார்கள். இவர்களைக் கர்நாடக நவாபாகிய அன்வார்தீன் தடுக்க முயன்றார். ஆனால் அவர் ஆம்பூரென்னும் இடத்தில் நடந்த பெரிய யுத்தத்தில் தோல்வியடைந்து உயிர் மாண்டார். இவ்வெற்றிக்கு முக்கிய காரணம் பிரஞ்சு தளகர்த்தராகிய புஸ்ஸி என்பவரின் சாமர்த்தியமே. இந்த ஜெயத்தால் இவர்கள் செய்த ஏற்பாட்டில் பாதிக்காரியம் நிறைவேறிவிட்டது. சந்தாசாஹிப் கர்நாடக நவாபாக முடி சூட்டப்பட்டு மிக்க விமரிசையுடன் புதுச்சேரிக்குச் சென்றார். அங்கரிற் ட்யூப்ளே அவரை வெகு ஆசார உபசாரத்துடனும் அவரது உயர்ந்த அந்தஸ்திற்குத் தகுந்தபடியும் வரவேற்றார். அன்வார்தீனின் குமாரராகிய மசம்மது அலி என்பவர் தன் தகப்பனார் கொல்லப்பட்டவுடன் திருச்சினாப்பள்ளிக் கோட்டைக்குத் தன் குடும்ப சொத்துக்களோடு ஓடிவிட்டார்.

10. மேற்கூறிய ஒப்பந்தத்தில் மற்றொரு பாகத்தை நிறைவேற்ற வேண்டுமல்லவா? சந்தா சாஹிபும் முஸபர் ஜங்கும் திரவியம் சேகரித்து வருமாறு தஞ்சாவூருக்குச் சென்றிருக்கும்போது ஐதராபாத் நிஜாமாகிய நாஸர்ஜங் கர்நாடகத்தின்மீது படையெடுத்துச் சந்தாசாஹிபைத் தோற்கடித்தார். சந்தா சாஹிபோ புதுச்சேரிக்கு ஓடிப்போக வேண்டி நேர்ந்தது. இத் தருணத்தில் பிரஞ்சுச் சேனையில் இரண்டு பிரிவுகள் கீழ்ப்படியாமல் கலகஞ் செய்யத் தொடங்கினமையால் ட்யூப்ளேயின் யோசனையும் ஏற்பாடும் சிதறுண்டு போகுந்தறுவாயி லிருந்தன. ஆனால், ட்யூப்ளே இப்படிப்பட்ட சம்பவங்களால் அதைரியப்படுபவரல்லர். சேனையின் வேண்டுகோள்களைப் பூர்த்தி செய்து கலகம் வாராமல் தடுத்துவிட்டார். உடனே இவர் புஸ்ஸியை

செஞ்சிக்கோட்டையைப் பிடிக்குமாறு அனுப்பினர். பிரஞ்சு தளகர்த்தரும் இதை வெகு எளிதாகப் பிடித்து விட்டார். செஞ்சிக்கோட்டை அக்காலத்தின் தென்னிந்திய கோட்டைகளுள் மிகவும் பலமானது. இதைப் பிடித்த தினுலும் இதுபோன்ற வெற்றிகளினுலும் பிரஞ்சுக்காரரின் கியாதி முன்போல் நிலை நிறுத்தப்பட்டது. ட்யூப்ளே இதோடு நிற்கவில்லை. அவர் இரகசியமாக கடப்பை, கர்னூல் நவாபுகளை நாஸர்ஜங் கட்சியை விட்டு நீங்கும்படி ஏற்பாடு செய்துவிட்டார். ஆகவே பிரஞ்சுக்காரருக்கும் நிஜாமுக்கும் சண்டை நடக்கும்போது கடப்பை, கர்னூல் நவாபுகள் நிஜாமுக்கு உதவாமல் ஒதுங்கி நின்று விட்டார்கள். இதுவுமன்றி அவர்களில் ஒருவர் நாஸர்ஜங்கைச் சுட்டுக் கொன்றுர். அவர் இறந்தவுடன் முஸபர்ஜங் நிஜாமாகவும் தக்ஷிண இந்தியாவின் அதிபதியாகவும் விளம்பரஞ் செய்யப்பட்டார். ஆகையால் ட்யூப்ளேயின் சாமர்த்தியத்திற் கேற்ப நல்ல காலமும் வாய்த்தது. பிரஞ்சுக்காரரின் ஜயபேரி எங்கும் முழங்கியது. இத் தருணத்தில், பிரஞ்சுக்காரரின் வார்த்தையைத் தட்டிச் சொல்ல எவராலும் முடியாமல் இருந்தது. நிஜாமும் கர்னுடக நவாபும் இவர்களுக்குக் கீழ்ப்பட்டவர்களானுர்கள்.

11. **ஆங்கிலேயரின் நிலைமை :—** இதை யெல்லாம் பார்த்திருந்த ஆங்கிலேயருக்கு ஒன்றுந் தோன்றவில்லை. ட்யூப்ளேயின் வெற்றிகளை எல்லாம் ஆச்சரியத்துடனும் பயத்துடனும் இவர்கள் தெரிந்துகொண்டார்கள். இச் சமயத்தில் இதற்குத் தக்க பிரதி செய்யாவிட்டால் தங்கள் கதி அதோகதி என்பது அவர்களுக்கு நன்ருகத் தெரியும். இவர்கள் நோக்கத்திற்கேற்ப இத் தருணத்தில் திருச்சினுப்பள்ளிக் கோட்டையில் அடைபட்டிருக்கும் மகம்மது அலி

யின் அதிகாரத்தை நிலை நிறுத்தினல்தான் தங்களுக்கும் க்ஷேமம் என்பது ஆங்கிலேயருக்கு நன்றாகத் தெரிந்தது. ஆகையால் அவர் கேட்ட உதவியைக் கொடுப்பதாக அப்போது மறுபேச்சின்றி ஆங்கிலேயர் ஒப்புக்கொண்டனர். ஆனல் பிரஞ்சுக்காரருக்கு விரோதமாக மகமது அலிக்கு உதவி புரிவது மிகவும் கஷ்டமான காரியம். இருந்தாலும் இந்தத் தருணத்தில் பிரஞ்சுக்காரரின் ஆட்டத்தை ஒடுக்கித் தென்னிந்தியாவில் ஆங்கிலேயரின் செல்வாக்கை ஸ்தாபனஞ் செய்யுஞ் சக்தியுள்ள ஓர் இங்கிலீஷ்காரர் தோன்றினர். அவர்தான் **ராபர்ட் க்ளைவ்.**

12. இவர் இங்கிலாந்தில் ஒரு கௌரவமான குடும்பத்திற் பிறந்தவர். சிறு பிராயம் முதற்கொண்டே இவருக்கு வித்தையிற் சிறிதும் விருப்பமில்லை. எனினும் இவரது தைரியமும் மனவுறுதியும் மிகவும் வியக்கத்தக்கதாயிருந்தன. திருச்சிராப்பள்ளி முற்றுகையிலிருந்து மகம்மது அலியை விடுவிக்கவேண்டியது எப்படி என்பது சென்னை கவர்னருக்குத் தோன்றவில்லை. பிரஞ்சுக்காரரையும், சந்தாஸாகிப்பையும் யுத்தகளத்தில் தோற்கடித்து மகம்மது அலியை விடுவிக்கத் தகுந்த சேனை ஆங்லேயரிடம் இல்லை. இச் சமயத்தில்தான் க்ளைவ் முன்வந்து கவர்னரிடம் ஓர் நல்ல உபாயஞ் சொன்னர். அதாவது, 'கர்னடக ராஜ்யத்தின் தலைநகராகிய ஆற்காட்டில் நவாபின் மனிதர்கள் அவ்வளவு அதிகமில்லை; ஆகையால் அந்தை வெகு சுலபமாகப் பிடித்துக் கொள்ளலாம். அப்படிச் செய்தால் திருச்சிராப்பள்ளியை முற்றுகை போட்டுகொண்டிருக்கும் சேனையிற் பெரும்பாகம் அவ்விடத்தைவிட்டு ஆற்காட்டுக்கு அனுப்பப்படும்; இதனல் மகம்மது அலிக்குச் சற்று ஆதரவேற்படும்' என்பதே. இதைக் கேட்ட

கவர்னர் மிகுந்த சந்தோஷமடைந்து ஒரு சிறு சேனையுடன் இவரையே ஆற்காட்டிற்கு அனுப்பினர். இவர் தம் சேனா-சிப்பந்திகளோடு ஐந்து தினத்தில் அறுபத்திநான்கு மைல்



ராபர்ட் க்ளைவ்

கள் நடந்து ஆற்காட் நகரைக் கைப்பற்றிக் கொண்டார். இவர் எதிர்பார்த்த பிரகாரமே இந் நகரை பிடிப்பது வெகு எளிதாக முடிந்தது.

13. இதைக்கேட்ட சந்தாஸாகிப் திருச்சியை முற்றுகை போட்டுக்கொண்டிருந்த சேனையின் பெரும்பாகத்தைத் தம் குமாரரின் கீழ் ஆற்காட்டிற்கு அனுப்பினர்.

ஆனால் எதிரியின் சேனை வருமென்று க்ளைவுக்கு நன்றாகத் தெரியும். இதற்காக இவர் ஆற்காட்டின் கோட்டை மதில்களைச் சீராக்கிப் பழுதுபார்த்துத் தம்மாட்களுக்கு வெகு நாளைக்கு வேண்டிய ஆகாராதிகளைச் சித்தஞ்செய்து வைத்துக்கொண்டார். சந்தாஸாகிபின் குமாரர் ஆற்காட்டின் முற்றுகையைத் தொடங்கினர். ஆங்கிலேயரின் சேனை மிகவுஞ் சிறியதா யிருந்தது; எனினும் அதன் தலைவரின் தைரியமும், இந்திய சிப்பாய்களின் விசுவாசமுமே ஆங்கிலேயருக்கு முடிவில் வெற்றி தந்தது. 1751-ம் வருஷம் நவம்பர் மாதம் 24-ம் தேதி யன்று கடைசிமுறை நவாபின் சேனை கோட்டையைத் தாக்கிற்று. ஆனால் இத்தடவையும் அது மிகுந்த நஷ்டத்துடன் துரத்தப்பட்டது. க்ளைவின் அற்புத தீரச் செயல் தேசமெங்கும் பரவியது. இதைக் கேட்ட மகம்மதலியின் நண்பர்களுக்கெல்லாம் ஒருவித ஊக்கமும், உற்சாகமும் உண்டாயின. உடனே, திருச்சிராப்பள்ளியை விடுவிக்குமாறு மேஜர் லாரன்ஸ் என்பவர் தக்க சேனையுடன் பட்டணத்தினின்று அனுப்பப் பட்டனர். க்ளைவும் இவருடன் சேர்ந்துகொண்டார். இச்சமயத்தில் லா என்பவர் பிரஞ்சு சேனையின் தளகர்த்தராயிருந்தார். அவருக்கோ சாமர்த்தியம் குறைவு. ஆங்கில சேனை நெருங்கியவுடன் இவர் திருச்சிராப்பள்ளியை விட்டுவிட்டுத் தம் சேனையுடன் ஸ்ரீரங்கம் தீவில் போயிருந்தார். இத்தீவை ஆங்கிலேயர் சுற்றிக்கொள்ளவே பிரஞ்சு சைன்யம் முடிவில் சரணமடைய வேண்டியதாயிற்று. சந்தாஸாகிபும் தம் எதிரிகளால் பிடிபட்டு ராஜதுரோகியெனக் கொல்லப்பட்டார்.

14. **ஐதராபாத்தின் சங்கதிகள்.** கர்னாடகத்தில் இவ்விதமாகப் பிரஞ்சுக்காரருக்கு யுத்தம் அபஜயமாகப்போன

போதிலும், ட்யூப்ளே மட்டும் மனோதைரியம் இழந்துவிடவில்லை. கர்னாடகத்தில் யுத்தம் நடக்கும்போது புஸ்ஸி ஐதராபாத்தில் பிரஞ்சுக்காரரின் நல்லபேரைப் போற்றி வந்தார். முஸபர்ஜங் இரண்டு மாதகாலந்தான் நிஜாமாக இருந்தார். பிறகு அவர் பாளையக்காரரில் ஒருவனால் கொலையுண்டனர். புஸ்ஸி உடனே நிஜாம்வம்சத்தைச் சேர்ந்த மற்றொருவரைப் பட்டத்திற்குக் கொண்டுவைத்தார். அவருக்கு மனோதைரியமில்லை; சாமர்த்தியமும் குறைவு. ஆகையால் அவர் பிரஞ்சுக்காரரை சகல விஷயத்திலும் நம்பியிருக்க வேண்டியிருந்தது. இக் காரணங்களால் பிரஞ்சுக்காரரின் அதிகாரம் ஐதராபாத்தில் பலமாயிற்று. ஐதராபாத் சமஸ்தானத்திலிருக்கும் ராஜ சேவகர்கள் புஸ்ஸியை எப்படியாவது அவ்விடத்தினின்று நீக்கிவிடவேண்டுமென்று பிரயத்தனம் செய்தார்கள். ஆனால் அவர் தம் சாமர்த்தியத்தாலும், தம் சிறுசேனையின் அற்புதப் பயிற்சியாலும் அவர்களின் சூழ்ச்சிகளெல்லாம் பயனற்றுப் போகும்படி செய்துவிட்டார். இச் சமயத்தில்தான் நிஜாம் பிரஞ்சுக்காரர் தமக்குச் செய்த உதவிக்குக் கைம்மாறாகத் தற்காலத்தில் வடசர்க்கார் என்று வழங்கும் பிரதேசத்தை அவர்களுக்கு இனாமாகக் கொடுத்தார். அக்காலத்திலேயே இதற்கு 40 லட்ச ரூபாய் வரி வருமான மிருந்தது.

ட்யூப்ளேயின் வீழ்ச்சி

15. **இரண்டாவது சண்டையின் முடிவு:** இச் சண்டை நடக்கும்போது ஐரோப்பாவில் ஆங்கிலேயரும், பிரஞ்சுக்காரரும் சமாதானமாக இருந்தார்களென்று முன்னே சொன்னோமல்லவா? ஐரோப்பாவிலிருக்கும் ஆங்கிலேய கம்பெனியின் மேலதிகாரிகளும், பிரஞ்சுக் கம்பெனியின் மேலதிகாரிகளும் தம் வேலைக்காரர்கள் இந்தியாவில் உள்

நாட்டு விஷயங்களில் தலையிட்டுப் பெருத்த சண்டைகள் செய்வதினாலுண்டாகும் பெரு நஷ்டத்தைக் கண்டுகொண்டனர். நடந்த சண்டைக்கும் காரணம் ட்யூப்ளேயின் பேராசையென்று இருதாரத்தாரும் தீர்மானித்தனர். உடனே பிரஞ்சு கவர்ன்மெண்டு ட்யூப்ளேயை வேலையினின்று நீக்கினார்கள். அவர் செய்த வேலைக்குக் கைம்மாறு முடிவில் யாது கிடைத்ததென்று உங்களுக்குத் தெரியுமா? பிரான்சின் தலைநகராகிய பாரிஸ் பட்டணத்தில் இவர் தரித்திரனாகக் காலங்கழித்து உயிர் நீங்கினார்.

ட்யூப்ளே ஏன் தோல்வி அடைந்தார்

16. ட்யூப்ளே அவ்வளவு சாமர்த்திய முடையவரா யிருந்தும், அவர் இவ்வளவு சிரமமெடுத்துக்கொண்டும் அவர் செய்த பிரயத்தனங்களெல்லாம் ஏன் வீணாய்ப் போய்விட்டன? இதற்கு இரண்டு காரணங்களுண்டு. முதலில், இவருக்கும் பிரஞ்சு கவர்ன்மெண்டார் சரியானபடி தகுந்த சமயத்தில் உதவி செய்யவில்லை. ஏகதேசம் அவர்கள் இவருக்கு உதவி அனுப்பினாலும் படைத் தலைவர்கள் இவர் சொற்படி கேட்டு இவருடன் ஒத்துழைக்க வில்லை. இரண்டாவது, இவரை எதிர்த்த ஆங்கிலேயருள் ஒற்றுமை அதிகம். அவர்களுக்கு இங்கிலாந்திலிருந்து ஒழுங்கு தப்பாமல் வேண்டிய சமயங்களில் தகுந்த உதவிகள் வந்து கொண்டே யிருந்தன. சென்னைக் கவர்ன்மெண்டாரும், ஆங்கில சேனைத் தலைவர்களும், பிரஞ்சுக்காரர்களைப்போலல்லாது, மனப்பூர்வமாய் ஒத்துழைத்தார்கள். ஆகையால், ட்யூப்ளே எவ்வளவு சாமர்த்திய முடையவரா யிருந்தும் முடிவில் வெற்றிபெற முடியவில்லை. ஆனால் இவர்போல் சுதேசாபிமானமும், ராஜ விசுவாசமும் பெற்றவர் மிகச் சிலரே.

## ஆங்கிலேயருக்கும் பிரஞ்சுக்காரருக்கும் மூன்றும்முறை யுத்தம், பிரஞ்சு அதிகார நாசம்

17. ட்யூப்ளேக்குப் பின் பிரஞ்சு கவர்னர் ஜனரலாய் வந்த காடெயு இருதேசத்தாருக்கும் சமாதானம் செய்து வைக்குமாறு, தம்மாலியன்றவரை முயன்றார். ஆனால் அது முடிவுபெறவில்லை. பிரஞ்சுக்காரருக்கும் ஆங்கிலேயருக்கும் முன்னிருந்த வியாபாரத் துவேஷமும், இராஜ்ய விஷயத்தில் அமர்ந்த பொறாமையும் தீரவில்லை. இதற்கேற்ப 1757-ம் வருஷத்தில் ஐரோப்பாவில் இங்கிலாந்திற்கும், பிரான்சிற்கும் சண்டை ஆரம்பித்தது. இது ஏழு வருஷகாலம் நடந்தமையால் இதற்கு(Seven Years' War) 'ஏழுவருஷ யுத்தம்' என்று பெயர் வழங்கியது. முன் நடந்த யுத்தத்தைப்போல இந்த யுத்தமும் ஐரோப்பாவில் தொடங்கிய நிமிஷமே இந்தியாவிலும் ஆரம்பித்தது. இந்தியாவில் இவ்விருதேசத்தாருக்கும் நடந்த போர்களில் இதுதான் கடைசியானது. இதை எதிர்பார்த்த இருதேசத்தாரும் தகுந்த ஏற்பாடுகள் செய்ய ஆரம்பித்தனர். 1756-ம் வருஷம் க்ளைவும், வாட்ஸன் என்ற போர்க்கப்பற் படைத்தலைவரும் இங்கிலாந்தினின்று பெருத்த ராணுவத்துடன் அனுப்பப்பட்டனர். இவ்விருவரின் வீரச்செயல்களைப் பற்றி அடுத்த பாடத்திலும் படிப்போம்.

18. யுத்தம் ஆரம்பமான வருஷமே பிரான்சினின்றும் பெரும்படை யொன்று லாலி பிரபு (Count-de-Lally) என்பவரின் தலைமையின் கீழ் இந்தியாவிற்கு அனுப்பப்பட்டது. இவர் யுத்தத்தில் கைதேர்ந்தவர்; மிகப்பெயர் பெற்றவர். இவர் போர்வீரர்களும் ஐரோப்பா வெங்கும் கீர்த்திபெற்றவர்கள். இச்சேனை 1758-ம் வருஷம் புதுச்சேரிக்கு வந்து சேர்ந்தது. ஆனால் அது வந்தது முதற்கொண்டு லாலிக்கும்,

பிரஞ்சு கவர்னர் ஜெனரலுக்கும் பெருத்த மனஸ்தாபமாயிருந்தது. புதுச்சேரியில், யுத்தத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளொன்றும் சித்தமாகவில்லை. இருந்தாலும், லாலி கடலூருக்குத் தெற்கேயுள்ள **ஸேயிண்ட் டேவிட் கோட்டை**யைத் தாக்கிப் பிடித்தார். ட்யூப்ளே காலத்தில் பிரஞ்சுக்காரர் இக்கோட்டையைப் பிடிக்கப் பலமுறை முயன்றும் பயன்படவில்லை.

19. இது முடிந்தவுடன், லாலி, சென்னபட்டணத்தைப் பிடிக்கவேண்டிய ஏற்பாடு செய்தார். இதற்காக இவர் புஸ்ஸியை ஐதராபாத்தி னின்றும் சேனையோடு வரவழைத்தார். இது மிகவும் சீர்கேடான காரியம். ஏனெனில், புஸ்ஸி ஐதராபாத்திலிருந்தவரை, பிரஞ்சுக்காரருக்கு அப்பிரதேசத்தில் மிகுந்த செல்வாக்கும், அதிகாரமு மிருந்தன. இவர் அங்கிருந்து திரும்பி அழைக்கப்பட்டவுடன் ஐதராபாத்தில் பிரஞ்சுக்காரரின் அதிகாரம் குறைந்தது. இவருக்குப் பிரதியாக நிஜாம் சமஸ்தானத்திற்கு அனுப்பப்பட்டவர் சாமர்த்தியத்தில் மிகக் குறைந்தவர். இச்சமயம் பார்த்து,விசாகபட்டணத்தினரசர் பிரஞ்சுக்காரருக்குவிரோதமாகக் கலகஞ்செய்து ஆங்கிலேயரின் உதவியை நாடினர். க்ளைவ் வங்காளத்திலிருந்து **கர்னல் போர்ட்** என்பவரை அவருக்கு உதவியாக அனுப்பினர். 1758-ம் வருஷத்தில் இவர் பிரஞ்சுச் சேனையைக் குண்டூர் என்னுமிடத்தில் தோற்கடித்தார். உடனே மசூலிபட்டணம் ஆங்கிலேயரால் முற்றுகை போடப்பட்டது. இந்நகர் பிடிபடவே, வட சர்க்கார் முழுவதும் ஆங்கிலேயர் கைவசம் வந்தது. இதை நிஜாமும் அங்கீகரித்துவிட்டார்.

20. இது நிற்க, சென்னையில் பிரஞ்சுக்காரரின் சமாசாரத்தைக் கவனிப்போம். லாலியும் புஸ்ஸியும் தங்கள்

சேனையுடன் சென்னைக்கு வந்தார்கள். ஆனால் இவ்விருவரும் கோட்டையைப் பிடிக்கும் விஷயத்தில் மனப்பூர்த்தியாக ஒத்துழைக்கவில்லை. ஆகையால் ஆதிமுதற்கொண்டே பிரஞ்சுக்காரருக்கு ஜயம் கிடைப்பது துர்லபமாயிருந்தது. இவர்களிட மிருந்த பணமும், துப்பாக்கி மருந்தும், இதரசாமான்களும் செலவாகி விட்டன ; சேனையும் கலகஞ்செய்யுந் தறுவாயிலிருந்தது. அதனால் முற்றுகைக் காரியங்கள் முன்னேற்ற மடையவில்லை. இச்சமயத்தில் (1759) ஆங்கிலப் போர்கப்பற்படை சென்னைக்கு வந்து சேர்ந்தது. பிரஞ்சுக்காரர் உடனே புதுச்சேரிக்குத் திரும்பிப்போக நேர்ந்தது. இப்போது ஆங்கிலேயர்க்குத் தக்க சமயம் வாய்த்தது. இங்கிலீஷ்காரர் சேனை **கர்னல் கூட்** என்பவரின் தலைமையின் கீழ் பிரஞ்சுக்காரரைத் தாக்குவதற்கு அனுப்பப்பட்டது. இருவருக்கும் **வந்தவாசி** என்னுமிடத்தில் பெரும்போரொன்று மூண்டது. அதில், பிரஞ்சுக்காரர் முற்றிலுந் தோல்வியடைந்தார்கள் ; புஸ்ஸியும் கைதியாக்கப்பட்டார். லாலியுந் தப்பிய பிரஞ்சுப் போர்வீரர்களும் புதுச்சேரி நோக்கி ஓடினார்கள். ஆனால் அந்நகரோ ஆங்கிலேயரால் முற்றுகைபோடப்பட்டு அவர் கைவசப்பட்டுவிட்டது. இது நடந்த சிறிது காலத்திற் கெல்லாம் தென்னிந்தியாவிலுள்ள பிரஞ்சு ஸ்தலங்களெல்லாம் ஆங்கிலேயராற் கைப்பற்றப் பட்டன. 1761-ம் வருஷத்தில் பிரஞ்சுக்காரருக்கு ஓரிடங்கூட மீதியில்லை. லாலி பிரான்சுக்குத் திரும்பிப்போனார். ஆங்கு அவர் இந்தியாவில் தோல்வியடைந்ததற்காக விசாரணை செய்யப்பட்டு மரணதண்டனை விதிக்கப்பட்டார்.

23. 1763-ம் வருஷம் இருதேசத்தாருக்கும் பாரிஸ் நகரில் சமாதானம் நடந்தது. அதன்படி புதுச்சேரி பிரஞ்

சுக்காரருக்குத் திருப்பிக் கொடுக்கப்பட்டது. ஆனால் இதற்குப்பின் பிரஞ்சுக்காரர் நம் தேசத்தில் தலையெடுக்க முடியவில்லை. பிரஞ்சு அதிகாரம் க்ஷீணித்துப் போனதின் காரணம் உங்களுக்கு தெரியுமே. ஆங்கில வெற்றியின் முக்கிய காரணம் யாதெனின் அவர்களின் ஒற்றுமையும், பிடிவாதமும், அவர்களது கப்பற்படைத் திறமையுமே. ஆங்கில கவர்ன்மெண்டாரும், பிரஞ்சு கவர்ன்மெண்டாரைப்போலல்லாது, தங்கள் தளகர்த்தர்களுக்கு வேண்டிய உதவிகளைச் சமயோசிதமாகச் செய்து வந்தார்கள்.



## 7. வங்காளம் ஆங்கிலேயர் கைவசமானது

1. சென்ற பாடத்தில் ஆங்கிலேயரும், பிரஞ்சுக்காரரும் தென்னிந்தியாவின் ஏகாதிபத்யத்திற்காகச் சண்டை செய்த விஷயத்தைப்பற்றி நீங்கள் படித்தீர்கள். அதில் பிரஞ்சுக்காரருக்கு முதலில் வெற்றிகிடைப்பது போலிருந்தும் முடிவில் ஆங்கிலேயரே ஜெயமடைந்தனர். இந்த யுத்தத்தின் பயனாகத் தென்னிந்தியாவில் ஆங்கிலேயரின் அதிகாரம் நிலைநிறுத்தப் பட்டது. இதே காலத்தில், வட இந்தியாவிலும், வங்காளப் பிரதேசத்தில் ஆங்கிலேயர் முன்னேற்றமடைய முயன்றனர். அக்கதையை இங்கே சொல்லுவோம்.

2. 1756-ம் வருஷத்தில் வங்காள நவாபாகவிருந்த **அலிவர்திகான்** காலம் சென்றார். இவருக்குப் புத்திரன் இல்லை. ஆகையால், இவரிறக்குஞ் சமயத்தில் தன் பெண் வயிற்றுப் பேரனாகிற **ஸிராஜ் டௌலா** என்பவர் பட்டத்திற்கு வரவேண்டுமென்ற எண்ணத்தை வெளியிட்டார்.

அவர் எண்ணப்படியே பின்பு நடந்து, புதிய நவாப் பட்டத்திற்கு வரும்போது, அவருக்கு வயது இருபதே. இவர் பாலிய முதற்கொண்டே தம் பிதா மகனால் மிகச் செல்வமாக வளர்க்கப் பட்டமையால் இவருக்கு நல்ல குணங்கள் உண்டாகவில்லை. இவருக்கு அரசியல்களின் கஷ்டங்களொன்றுந் தெரியாது. ஆனால் இவருக்கு ஆதிமுதற்கொண்டே ஆங்கிலேயரென்றால் வெறுப்புமட்டும் இருந்தது. அதற்கு இன்னதுதான் காரணமென்று நிச்சயமாகச் சொல்லமுடியாது. இவர் பட்டத்திற்கு வந்து சிறிது காலத்திற்கெல்லாம், டாக்காவின் டிப்டி கவர்னராயிருந்த ராஜ-ராஜ கிருஷ்ணதாஸ்மேல் நவாப்புக்கு மிகுந்த அதிருப்தி விழுந்தமையால் அவர் தம் குடும்பத்தை சொத்துக்களுடன் கல்கத்தாவிற்கு ஆங்கிலேயரிடம் பாதுகாப்பிற்காக அனுப்பினர். இதோடுகூட இச்சமயத்தில் ஒரு பெரிய யுத்தம் ஆரம்பிக்கும் தறுவாயிலிருந்தபடியால் ஆங்கிலேயர் கல்கத்தாக் கோட்டையைச் சீர்திருத்திப் பலமாக்கினார்கள். இதைக்கண்ட நாவபுக்கு மிகுந்த கோபமுண்டாயிற்று. அவர்கள் கல்கத்தாக் கோட்டையை உத்தரவில்லாமல் பலப்படுத்தி வந்தபோது அவர்கள் ராஜத்துரோகமான காரியம் செய்வதாக நவாபு கருதினார். ஆகையால் அவர் உடனே, கல்கத்தா கவர்னருக்கு ராஜ கிருஷ்ணதாஸரின் குடும்பத்தை அந்நகரிலிருக்கவிடக்கூடாதென்றும், கோட்டையின்மேற் கட்டடத்தை உடனே இடித்து விடும்படிக்கும் வெகு கண்டிப்பான உத்தரவனுப்பினார். ஆனால், கல்கத்தா கவர்னர், இவைகளி லொன்றேனும் செய்ய மறுத்துவிட்டார். இதைக் கேட்ட நவாபிற்கு வந்த கோபத்திற்குக் கங்குகரையில்லை. நவாபு ஆங்கில ஸ்தலங்களைக் கைப்பற்றுமாறு ஒரு சேனையைச் சேகரித்தார். சில

நாளைக்கெல்லாம் இவர் காஸிம் பஜாரிலிருந்த ஆங்கிலேயரின் தொழிற்சாலையைக் கைப்பற்றி, அவ்விடத்திலிருந்த உத்தியோகஸ்தர்களைக் கைதுசெய்துவிட்டுக் கல்கத்தாவின்மேல் சென்றார். இதற்குள் அவ்விடத்திலிருந்த ஆங்கிலேயர் கோட்டையைக் காத்தற்கு வேண்டிய ஏற்பாடு செய்தார்கள். ஆனால் அவர்கள் யுத்தத்தை நிறுத்தி நவாபிற்கு இணங்கவேண்டி யிருந்தது. கோட்டையின் திறவுகோல்கள் நவாபின் கையிற் கொடுக்கப்பட்டவுடன், அவர் பொக்கிஷசாலைக்குட் சென்று அங்கிருந்த பணத்தையெல்லாங் கைக்கொண்டார்.

3. அன்றிரவு கைதிகள் ஹாலெக்ளி கவர்னராகிய மணிக் சந்த் என்பவரின் பாதுகாப்பிலிருந்தனர். அவர் கைதிகளைப் பத்திரமாய் அடைத்து வைக்குமாறு ஓர் அறையைத் தேடுமாறு சொல்லக் காவல்காரர்கள் கோட்டைக்குள்ளிருக்கும் காராக்கிருஹத்தைக் காட்டினார்கள். ஆனால் கவர்னர் அந்த இடத்தின் விஸ்தீரணத்தை அளந்து பார்க்காமல், சரியாக இருக்குமென்று நினைத்து, கைதிகளை யடைக்குமாறு உத்தரவுசெய்தார். கைதிகள் 146 பேரிருந்தனர்; ஆனால் அறையோ பதினெட்டடி நீளமும், பதினெட்டடி அகலமுந்தானிருந்தது. இதில் காற்று வருவதற்கு மார்க்கமுமில்லை. இதுவுந் தவிர ஜூன் மாதத்தில் கல்கத்தாவில் உஷ்ணம் பொறுக்க முடியாது. ஆகவே அந்த இரவில் அடைப்பட்டவரில் பெரும்பான்மையோர் சுவாசிக்கப் பிராணவாயுவின்றி மாண்டனரென்றும், மறுநாட்காலை சிறைச்சாலையின் கதவைத்திறந்து பார்க்கையில் இருபத்து மூவரே குற்றுயிருடனிருக்கக் காணப்பட்டன ரென்றும் கூறப்படுகிறது. இதற்கே **"ப்ளாக் ஹோல்"** படுகொலை என்று பெயர் வந்திருக்கிறது. தற்காலத்தில் சரித்திர நிபுணரில் பலர் இது நடக்க வில்லை என்று மெய்ப்பித் திருக்கின்றனர்.

4. கல்கத்தா பிடிபட்டு அதில் இருட்டறைப் படு கொலை நடந்த தென்ற சங்கதி சென்னைக்கு எட்டியது. அப்போது அங்கிருந்த ஆங்கிலேயருக்கிருந்த விசனமும் கோபமும் சொல்லி முடியா. உடனே க்ளைவும், வாட்ஸனும் 900 இங்கிலீஷ் துருப்புகளுடனும் 500 சிப்பாய்களுடனும் பழிக்குப் பழிவாங்கும்படி வங்காளத்திற்கு அனுப்பப்பட்டார்கள். 1757-ம் வருஷம் ஜனவரிமாதம் இரண்டாம் தேதியன்று கல்கத்தா ஒரு சிரமமின்றிக் கைப்பற்றப்பட்டது. பின்பு ஒரு வாரத்திற்கெல்லாம் ஹூக்ளியும் அவர்களால் பிடிக்கப்பட்டது. இதற்குள் நவாப்புக்கு மிகுந்த பயமுண்டாயிற்று. ஆகவே அவர் ஆங்கிலேயரின் சுதந்தரங்களையெல்லாந் திரும்பிக்கொடுத்து அவர்களடைந்த நஷ்டத்திற்கெல்லாந் பரிகாரஞ் செய்வதாக ஒப்புக்கொண்டார். ஆனால் அவரைச் சுற்றி இருந்தவர்களெல்லாம் துரோகிகளும் துர்ப்போதனை செய்வோருமே. அவர்களின் தூண்டுதலின்மேல் இவர் இரகசியமாக ஐதராபாத்திலிருக்கும் பிரஞ்சுக்காரரைத் தனக்கு வந்து உதவி செய்யும்படி வேண்டினார். க்ளைவுக்கு இந்தச் சங்கதி தெரிந்தது. உடனே இவர் வங்காளத்தில் பிரஞ்சுக்காரரின் ஸ்தலமாகிய சந்திரநகரைப் பிடித்துக்கொண்டார்.

5. க்ளைவ் இதோடு நிற்காமல் ஸிராஜ் டௌலாவையே தீர்ப்பதற்கு வேண்டிய உபாயத்தை நாடினார். நவாபின் சமஸ்தானத்தில் பல நன்றிகெட்டவர்களும், துரோகிகளு மிருந்தார்களென்று சொன்னோ மல்லவா? இவர்களில் முக்கிய ராஜத்துரோகி மீர் ஜாபர் என்பவர். இவர் நவாபின் சேனாதிபதி. இவரை நவாபு ஆக்குவதாகச் சொல்லி, க்ளைவ் இவரை இரகசியமாகத் தம்பக்கஞ் சேர்த்துக்கொண்டார். இவ்விருவருக்கும் நடந்த நிபந்தனையில் க்ளைவுக்குப் பெருந்தொகை கொடுப்பதாகக் கண்டிருந்தது.

மீர்ஜாபரும், க்ளைவும் சேர்ந்து உத்தேசித்த ராஜத்துரோகம் முதிருந் தறுவாயி லிருந்தது. அதன்படி க்ளைவ் நவாபின் சேனையைத் தாக்கவேண்டும்; அப்போது நவாபின் சேனாதிபதியாகிய மீர் ஜாபர் தம்மாட்களுடன் ஒதுங்கி நின்று ஆங்கிலேயர் பக்கம் போய்ச் சேர்ந்துவிடவேண்டும். எல்லாம் சித்தமா யிருக்கும்போது, இவ் விருவருக்கும் மத்தியஸ்தமா யிருந்த உமிசந்த் என்பவன் தனக்குப் பெருந்தொகை (30-லட்சம் ரூபாய்கள்) கொடுத்தாலன்றிச் சங்கதி முழுவதும் நவாபிடம் தெரிவிப்பதாகப பயமுறுத்தினான். இப்பொழுது க்ளைவுக்கு என்ன செய்வதென்று ஒன்றுந் தோன்றவில்லை. உமிசந்து தனக்குக் க்ளைவும், வாட்ஸனுஞ் சேர்ந்து அத்தொகையைக் கொடுப்பதாக எழுதிக்கொடுத்தால் போதுமென்று சொன்னார். உடனே க்ளைவ் அவ்விதமாக ஓர் சிவப்புக் காகிதத்தில் நிபந்தனைகளை யெல்லாம் எழுதி அந்தத் தஸ்தவேஜை வாட்ஸனுக்குக் கையொப்பத்திற்காக அனுப்பினார். க்ளைவின் மோசக் கருத்தை யறிந்த வாட்ஸன் கையொப்பமிட மாட்டேன் என்றார். உடனே க்ளைவ் சிறிதும் தயங்காமல் வாட்ஸனின் கையொப்பத்தைத் தானே போட்டுவிட்டான். காரியமெல்லாம் முடிந்தபின் உமிசந்த் பணத்தைக் கேட்கும்போது தான் அவருக்கு நடந்த மோசந் தெரிந்தது. அதிலேற்பட்ட மன அதிர்ச்சியால் அவன் மாண்டான்.

6. க்ளைவ், உடனே நவாபின்மீது யுத்தந்தொடங்கி, அவர் தலைநகராகிய மூர்ஷிதாபாத்தின் மீது காலதாமதமின்றிப் படையெடுத்தார். மோசமொன்று மறியாத நவாபும், தளகர்த்தர் மீர்ஜாபர் சகிதம் ஆங்கிலேயரை எதிர்க்க வந்தார். நவாபின் சேனை மிகப் பெரியது; ஆனால் அவர் தளகர்த்தர்களில் முதல் மூவரும் ராஜத்துரோகிகள்;

ஆங்கிலேயருக்கு உதவிசெய்யும் இரகசிய ஏற்பாட்டிற்கு உடன்பட்டவர்கள். அவர்களில் மீர் மாதன்கான் என்பவர் ஒருவரே தன் எஜமானனுக்கு அநுகூலமாயிருந்தவர். இவ்வளவு சௌகரியங்களிருந்தபோதிலும், க்ளைவுக்கு மனதில் சந்தேகந்தான். இரு சேனைகளுக்கும் **பிளாஸீ** என்னுமிடத்தில் 1757-ம் வருஷம், ஜூன்மாதம் 23-ம் தேதி சண்டை நடந்தது. யுத்த ஆரம்பத்திலேயே நவாபின் துர் அதிர்ஷ்டத்தினுல் மீர் மாதன்கான், குண்டால் தாக்கப்பட்டு மாண்டார். உடனே கிட்ட இருந்த துரோகிகள் இவர் பயத்தை அதிகரிக்கச் செய்து, இவரையும் போர்க்களத்தினின்றும் ஓடும்படி தூண்டிக்கொண்டிருந்தனர். இவர்கள் இஷ்டப் பிரகாரமே 2,000 குதிரைப் படையுடன் நவாப் மூர்ஷிதாபாத்திற்கு ஓடிவிட்டார். உடனே துரோகிகளின் தளகர்த்தர்கள் சண்டையை நிறுத்தும்படி தம் சேனைக்கு உத்தரவிட்டனர். இப்போதுதான் க்ளைவுக்கு ஐயந்தீர்ந்து ஜெயம் தம்பக்கமென்று பட்டது. உடனே இவர் சேனையுடன் பதுங்கியிருந்த மாந்தோட்டத்திலிருந்து வெளியே வந்தார். ஆகவே முடிவில் ஆங்கிலேயரே வெற்றி பெற்றனர்; அவர்கள் கட்சியில் சேதம் மிகக்குறைவு. இச் சண்டையில் ஒரு பெருமை யாதெனில், நவாபுக்கு உதவியாக வந்த பிரஞ்சுக்காரர் கடைசி நிமிஷம் வரைக்கும் அவருக்கு விசுவாசமாகச் சண்டை செய்தார்கள்.

7. நவாப் தம் தலைநகரைவிட்டு ஓடவேண்டியிருந்தது. அப்போது வழியில் அவரை ஒருவன் பிடித்து மீர் ஜாபர் கையிலொப்புவித்தான். மீர் ஜாபரின் குமாரனுகிய **மீரான்** என்பவன், அவரைக் கொன்றுவிட்டான். ஸிராஜ் டௌலா இறக்கும்போது, அவருக்கு வயது இருபதே; அவர் 15 மாதகாலந்தான் ஆண்டார்.

8. மீர் ஜாபர், உடன்படிக்கைப்படி நவாபாக்கப்பட்டார். ஆங்கிலேய உத்தியோகஸ்தர் ஒவ்வொருவரும் நல்ல வெகுமதி பெற்றார்கள். க்ளைவுக்கு மட்டும் இருபது லட்சம் ரூபாய் கொடுக்கப்பட்டது. இதுபோலவே ராணுவ உத்தியோகஸ்தரானாலுஞ்சரி, சாதாரண உத்தியோகஸ்தரானாலுஞ் சரி, ஒவ்வோர் ஆங்கிலேயரும் பெருத்த வெகுமானங்கள் பெற்றார்கள். இச் சமயத்தில் மூர்ஷிதாபாத்திலிருந்து பணமும், தங்கத் தட்டுகளும், நகைகளும் படகுகளில் ஏற்றிக் கல்கத்தாவிற்கு அனுப்பப்பட்டன. இதுவுந் தவிர, மீர் ஜாபர், 24-பர்க்காணங்களென்ற மாகாணத்தின் வரும்படியை ஆங்கிலேயர் வசூலித்து அனுபவிக்கும்படி உத்தரவு செய்தார்.

9. ஆகையால், ஆங்கிலேயரின் தென்னிந்திய சரித்திரத்தில் ஆற்காட்டின் முற்றுகை எவ்வளவு முக்கியமோ அவ்வளவு முக்கியமாக, அவரது வங்காள சரித்திரத்தில், பிளாஸியுத்தமும் இருந்தது. இவ் வெற்றியின் பின்தான் ஆங்கிலேயருக்கு முதல் முதலாக வங்காளத்தில் சர்வ சுதந்தரத்துடன் 24 பர்க்காணங்களென்ற பூஸ்திதி கிடைத்தது. இனிமேல் இவர்கள் இத்துடன் நிற்பார்களென்று நினைப்பதற்கிடமில்லை.

10. வங்காளத்தைவிட ஆங்கிலேயருக்குச் சாதகமான பாகம் இந்தியாவில் வேறெங்கும் இருந்ததில்லை. மற்ற இடங்களைப் போலல்லாது இஃது ஒரு பெரிய சமதளமான பூமி. இம் மாகாணமெங்கும் கங்கை நதியும், அதன் உப நதிகளுமே நிறைந்திருப்பதால், இரண்டுவித சாதகங்களேற்படுகின்றன : முதலாவது தேசமெங்கும் செழிப்பாகவும், தானியம் நிரம்பியுமிருக்கும் ; இரண்டாவது, மகாணத்தின் எப்பாகத்திற்கும் கப்பல்கள் வெகுசுலபமாகப்



ROJA MUTHIAH
47, HOSPITAL STREET

போய்ச் சரக்குகளை ஏற்றியோ, இறக்கியோ வரலாம். இது காரணம் பற்றியே தற்காலத்திலும் கல்கத்தா நமது தேசத்தின் மிக முக்கியமான துறைமுகங்களில் ஒன்ருயிருந்து வருகிறது. அதுவுமன்றி, இம்மாகாணத்திலிருப்போர், மற்றவர்களைக் காட்டிலும் தனவந்தர்; சாதாரணமாய்ச் சோம்பலும் இன்பப்பிரீதியும் நிறைந்தவர். ஆகையால் இவர்களைச் சீக்கியர் அல்லது மஹாராஷ்டிரரைவிட மிக எளிதாகவே வென்றுவிடலாம். இது காரணம் பற்றியே ஆங்கிலேயர் இப்பிரதேசத்தில் மிக எளிதில் தமது அதிகாரத்தைப் பரவச்செய்து, நிலைநிறுத்திக் கொண்டனர்.



## 8. பிளாஸியுத்தம் முதல் 1770-ம் வருஷம் வரை

1. சென்ற பாடத்தில் ஆங்கிலேயர் பிளாஸி வெற்றி யடைந்ததைப் பற்றியும், அவர்களுக்கு அதனுல் கிடைத்த சாதகங்களைப் பற்றியும் படித்தீர்கள். இப்பாடத்தில், வங்காளத்தில் அவர்களதிகாரம் பூர்த்தி யடைந்ததைப் பற்றிப் படிப்பீர்கள்.

2. மீர் ஜாபர், ஆங்கிலேயருக்கு மிகவும் நல்லவராயிருந்தும், சாமர்த்திய மற்றுத் தேசத்தையாளும் திறமையில்லாதவராயிருந்தார். அவருக்கு அரசரென்று சொல்லக் கூடிய ஒருவித யோக்யதையுங் கிடையாது. வங்காளத்தில் ஸிராஜ்டௌலா கொல்லப்பட்டு மீர்ஜாபர் நவாபாக வந்தாரென்ற சங்கதி டில்லிக்கெட்டியது. மொகலாய ராஜ்யமாரம்பமுதல் வங்காளம் டில்லி பாதுஷாவுக்கு உட்பட்டிருந்தது; வங்காள நவாபு சக்கரவர்த்திக்கு உட்பட்டவரே. அவரை நியமிக்கும் அதிகாரமும், தள்ளிவிடும்

அதிகாரமும் சக்கரவர்த்தியிடமே இருந்தன. ஆகையால், மீர்ஜாபர் தம் உத்தர வின்றி நவாபாகப் பட்டத்திற்கு ஆங்கிலேயரின் உதவியால் வந்தாரென்று பாதுஷா கேள்விப் பட்டவுடன், அவர் தம் குமாரனாகிய **ஷா ஆலம்** என்பவரையும் அயோத்தி நவாபையும் பெருத்த சேனையுடன் மீர்ஜாபரைப் பட்டத்தினின்று நீக்கிவிடும்படி அனுப்பினார். அவர்கள் வருஞ்செய்தியைக் கேள்விப்பட்டு மீர்ஜாபர் மிகவும் பயந்திருந்தார். ஆனால் ஆங்கிலேயரின் உதவியிருந்ததால் ஷா ஆலம் பயப்பட்டுத் திரும்பிப்போய் விட்டார். ஆங்கிலேயர் செய்து வந்த தொந்தரவுகள் மீர்ஜாபரால் பொறுக்கமுடியவில்லை. அவர்கள் இவரை எப்போதும் பணமும் சுதந்திரங்களும் வேண்டுமென்று தொந்தரவு செய்துகொண்டே யிருந்தனர். முடிவில் மீர்ஜாபருக்கு அவர்கள்மேல் வெறுப்புண்டாகி அவர்களைத் தேசத்தி-னின்று துரத்தி விடவேண்டுமென்ற எண்ணமும் விழுந்து விட்டது. அதற்காக அவர் டச்சுக்காரருடன் இரகசியமாகச் சதியாலோசனை செய்தார். இச் சமாசாரம் க்ளைவுக்கு எட்டியவுடன், அவர் டச்சுக்காரரின் சேனையையும், போர்க் கப்பற் படையையும் தோற்கடித்து, அவர்களின் முக்கிய ஸ்தலமாகிய சின்சுராவையுங் கைப்பற்றினார்.

3. இத்துடன் இந்தியாவில் டச்சுக்காரரி னதிகாரந் தொலைந்தது. இதற்குச் சற்று முன்பாகத்தான், கர்னல் போர்ட் என்பவர், வடசர்க்கார் ஜில்லாக்களைப் பிரஞ்சுக் காரரிடமிருந்து கைப்பற்றினார். இவ்விதமாக, இந்த நான்கு வருஷகாலத்திற்குள் க்ளைவ் இந்தியாவில் பிரஞ்சுக்காரரின் அதிகாரத்தையும், டச்சுக்காரரி னதிகாரத்தையும் தொலைத்தது மன்றி வங்காளத்தில் ஆங்கிலேயருக்கு வேண்டியவரை நவாபாக்கி, அவரிடமிருந்து நல்ல வரும்படி வரத்

தக்க ஒரு ஜில்லாவைக் கம்பெனிக்கும் வாங்கி வைத்தார். இவர் மிகவும் உழைத்தபடியால் உடம்பிற் கொத்துக் கொள்ளாமல் நோயில் விழுந்தார். ஆகையால் இவர் 1760-ம் வருஷத்தில் இங்கிலாந்திற்குத் திரும்பிப் போகவேண்டி யிருந்தது. இவர் அங்கு போனவுடன் யாவரும் இவரை ஆதரவுடன் உபசரித்தனர்; இங்கிலாந்தினரசர் இவரை ஓர் பிரபுவாக்கினர். இது முதற்கொண்டு இவருக்கு லார்ட் க்ளேவ் என்று பெயர் வழங்கியது.

4. **மீர்காஸிம்:** க்ளேவ் இந்தியாவை விட்டு நீங்கியபின் மேற்சொன்ன காரணத்தால், மீர்ஜாபர் நவாபாக ஆளமுடிய வில்லை. இதுவுந் தவிர இவருக்கு **மீர்காஸிம்** என்ற மரு மகன் ஒருவர் இருந்தார். அவர் மிகுந்த சாமர்த்தியம் பெற்றவர். கல்கத்தாவிலுள்ள ஆங்கில உத்தியோகஸ்தர் களுக்கு இவர் பெருத்த லஞ்சங் கொடுத்து மீர்ஜாபரைப் பட்டத்தினின்றும் நீக்கித் தன்னை நவாபாக்கி விடும்படி ஏற்பாடு செய்தார். தன்னிஷ்டம் சித்திக்கும் பொருட்டு இவர் ஆங்கிலேயர் கேட்டதை யெல்லாங் கொடுத்தார். அப்படியே இவர் நவாபாக்கப்பட்டவுடன் இவர் கம்பெ னிக்கு, வருஷத்திற்கு 50 லட்ச ரூபா வரும்படி கிடைக்கும் பரத்வான், மிட்நாபூர் சிட்டாகாங்க் என்ற மூன்று பெரும் ஜில்லாக்களை இனமாக அளித்தார். மீர்ஜாபர் தனக்கிருந்த சொத்தை வைத்துக்கொண்டு சௌக்கியமாகக் கல்கத்தா வில் காலங் கழித்துவந்தார்.

5. இவ்விதமாகக் காஸிம் பட்டத்திற்கு வந்தும் ஆங்கி லேயர் இவரைத் தம்மிஷ்டப்படி அரசாள விடவில்லை. அவர்கள் ஜாபரை ஆட்டிவைத்தது போல, இவரையும் ஆட்டிவைக்க விரும்பினர்கள். ஆனால், காஸிமிடத்தில் அவர்களின் எண்ணம் பலிக்கவில்லை. ஆங்கிலேயரின் உட்

கருத்தை யறிந்தவுடன் காஸிம் கோபங்கொண்டு, அவர்களினின்று விலகியிருக்குமாறு தம் தலை நகரை மூர்ஷிதாபாத்தினின்று கல்கத்தாவிற்கு வெகு தூரத்திலிருக்கும் மாங்கீரென்ற நகரத்திற்கு மாற்றிக்கொண்டார். அங்குச் சென்றவுடன் ராஜ்ய விஷயங்களில் இவர் பல சீர்திருத்தங்கள் செய்தார். தமது அதிகாரத்தைக் காப்பாற்றுவதற்கு நல்ல சேனை அவசியமென்று இவர் கண்டு கொண்டார். இதற்காக இவர் பொறுக்கின ஆட்கள் சேர்ந்ததோர் சேனையை உண்டுபண்ணி, அதை ஐரோப்பிய மார்க்கங்களில் பழக்கம் செய்து வந்தார். இதுவுமன்றி இவர் மாங்கீரிலேயே தனக்கு வேண்டிய துப்பாக்கிகளும், பீரங்கிகளும் செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளும் முடித்து வைத்தார்.

6. இதைக்கண்ட ஐரோப்பியருக்கு இவரிடம் மிகுந்த வெறுப்புண்டாயிற்று. இதோடுகூட அவ்விருவருக்கும் வேறு விதத்திலும்கூட மனஸ்தாபம் வளர ஆரம்பித்தது. அவுரங்கசீப் காலமுதற்கொண்டு, கம்பெனியார், வருஷத்திற்குக் கொஞ்சம் வரி செலுத்தினதின்பேரில் தேசமெங்கும் வேறு சுங்கம் செலுத்தாமல் வியாபாரம் செய்துவர உத்தரவு பெற்றிருந்தனர். அக்காலத்தில் கம்பெனி உத்தியோகஸ்தர்களுக்கு மிகவுங் குறைந்த சம்பளம். அதற்காக அவர்கள் கம்பெனியின் அனுமதிச் சீட்டை வைத்துக்கொண்டு சொந்தமாக வியாபாரஞ் செய்துவர உத்தரவு கொடுக்கப்பட்டனர். இவ்வித அனுமதிச் சீட்டில்லாத வியாபாரிகளெல்லாம் வரிசெலுத்தியே தங்கள் சரக்குகளை வியாபாரம் செய்யலாம். இவ்விதமாகக் கங்கை நதியில் செல்லுங் கப்பல்களெல்லாம் அனுமதிச் சீட்டு, அல்லது பணம் செலுத்திய ரசீது வைத்திருத்தல் வேண்டும். கம்

பெனி உத்தியோகஸ்தர்கள் மட்டும் இவ்வித அனுமதிச் சீட்டுகளை உபயோகித்து வந்தால் நவாபுக்கு மிகுந்த சேத முண்டாகாது. ஆனால் பேராசை பிடித்த அவ்வுத்தியோகஸ்தர்கள் தம் அனுமதிச் சீட்டுகளைப் பணம் வாங்கிக் கொண்டு சாதாரண வர்த்தகர்களுக்கும் கொடுத்துவந்தனர். இதனால் நவாபுக்குப் பெருத்த நஷ்டமுண்டாயிற்று. நவாபுக்கு மிகுந்த கோபமுண்டாகிக் கல்கத்தாவிலுள்ள ஆங்கிலேய நிருவாக சபையினிடம் முறையிட்டார். அது ஒன்றும் பலிக்காமல் போயிற்று. தம் குடிகள் மட்டும் கஷ்டப்பட அயல் நாட்டார் இலாபம் சம்பாதிப்பது அநியாயமென்று நவாப் கருதி இது முதற்கொண்டு யாவரும் சுங்கம் செலுத்தவேண்டியதில்லை யென்று விளம்பரம் செய்வித்தார். இதன் பயனாக யாவரும் வியாபாரஞ் செய்யத்தொடங்கினார்கள்; இது முதற்கொண்டு ஆங்கிலேயரின் வியாபாரம் மிகவுங் குறைந்து போயிற்று. ஆகையால், ஆங்கிலேயர் முன்போல சுதேச வர்த்தகர்களிட மட்டும் சுங்கம் வசூலிக்கும்படி சொன்னார்கள். அப்படிச் செய்வதால் தமக்கு மிகுந்த நஷ்டமும், ஜனங்களுக்குள் மிகுந்த மனக்குறையும் ஏற்படுமென்பது நவாபுக்குத் தெரியுமாகையால், அவர் ஆங்கிலேயரின் வேண்டுகோளை மறுத்துவிட்டார். இப்படி நவாப் செய்தது சகல விஷயத்திலும் நியாயமென்று சொல்லத் தக்கதாயிருந்த போதிலும் ஆங்கிலேயருக்கு மிகுந்த கோபம் வந்துவிட்டது. ஆகையால் அவர்கள் நவாபின்மீது அநியாயமாய்ச் சண்டை கூறினார்கள்.

7. நவாப் அஜாக்கிரதையா யிருக்கும்போது ஓராங்கில சேனை 1763-ம் வருஷத்தில் பாட்னா நகரைத் தாக்கி அதை கைப்பற்றிக் கொண்டது. உடனே நவாப் தன் சேனையை மாங்கீரினின்று பாட்னாவின் மீது அனுப்பினார். அப்பட்ட

ணம் மறுபடியும் நவாபின் மனிதரால் கைப்பற்றப்பட்டு அங்கிருந்த ஆங்கிலேய ரெல்லாம் கைதிகளாக்கப்பட்டனர். இவ்விதமாகவே காஸிம் பஜாரும் கைப்பற்றப்பட்டு அதி லிருந்த இங்கிலீஷ்கார ஏஜெண்டு கொல்லப்பட்டார். இதைக் கேட்டவுடன் கல்கத்தாவிலிருந்த நிர்வாக சபை அங்கத்தினருக்கு மிகுந்த கோபமுண்டாயிற்று; அவர்கள் உடனே பழிக்குப் பழிவாங்க நிச்சயித்தனர். கல்கத்தாவி லிருந்த மீர் ஜாபர் கம்பெனிக்குப் பெரும் பொருளுடன் காஸிமுடன் நடந்த சண்டைச் செலவையுங் கொடுத்து விடுவதாகச் சொன்னதின்மேல், அவர், மறுபடியும் நவா பாக்கப்பட்டார். ஆங்கிலேயர் இரண்டா முறை ஒரு சேனையை அனுப்பினார்கள. அது மூர்ஷிதாபாத்தைப் பிடித்து மாங்கீர்மேற் சென்றது. கேரியா என்னுமிடத்தில் இருகட்சிக் காரருக்கும் பெருத்த சண்டை நடந்தது. இச் சண்டை வெகு கொடூரமாக நடந்தபோதிலும் ஒருவரும் நிச்சயமான வெற்றி பெறவில்லை. உதுவாநல்ல என்னு மிடத்தில் நவாப் சேனை மிகவும் சிலாக்கியமான இடத்தில் தங்கியிருந்தது. அவ்விடத்தில் ஆங்கிலேயர் அதைத் தாக்க முடியாது. அப்போது நவாபின் சேனையிலிருந்த ஒரு துரோகி இங்கிலீஷ் சேனையை இரகசியமாக ஓரிரவில் அவ்விடத்திற் கொண்டுபோய்ச் சேர்த்தான். அதனால் ஆங்கிலேயர் வெற்றி பெற்றனர்; மாங்கீரைக் காப்பதற்கு ஆட்களில்லாததால், அவர்கள் அந்நகரை வெகு எளிதிற் கைப்பற்றினார்கள்.

8. இச் சமயத்தில் மீர்காஸிம் பாட்னாவில் இருந்தார். தம் பிரதானபட்டணத்தை ஆங்கிலேயர் கைப்பற்றினார்க ளென்ற சங்கதி நவாபுக் கெட்டியவுடன், அவருக்கு வந்த கோபத்திற் களவில்லை. உடனே அவர் பாட்னாவில், பிடி

பட்ட ஆங்கிலக் கைதிகளை யெல்லாம் கொன்றுவிடும்படி உத்தரவு செய்தார். இங்கிலீஷ் சேனை இதைச் சற்றேனும் மதிக்காது, பாட்னாவின்மீது சென்று, அதை வெகு சிரமத்துடன் கைப்பற்றிக்கொண்டது. காசிம் உடனே தன் ராஜ்யத்தை விட்டு அயோத்திக்குச் சென்றார். இக் காலத்தில் டில்லியில் பேருக்குப் பாதுஷாவா யிருந்த ஷா அலம் என்பவரும், அயோத்திக்கு நவாபாயிருந்த ஷுஜாடௌலா என்பவரும் இவருடைய நிலைமையைப் பார்த்துப் பரிதபித்து இவருடன் சேர்ந்துகொண்டார்கள். அவ் விருவர்களுக்கும் அன்னியர்களைத் தம் தேசத்தி னின்றும் துரத்திவிட வேண்டுமென்கிற எண்ணமே மேலி கொண்டிருந்தது. இவர்கள் இருவரும் பாட்னாவை மீட் கும்படி ஒரு சேனையை அனுப்பினார்கள். ஆனால் அவ்வூர் பிடிபடவில்லை. சண்டை அதனுடன் நிற்காமல் வெகு உக்கிரமாக நடந்தது. 1764-ம் வருஷம் அக்டோபர் மாதம் இம் மூவரும் ஆங்கிலேயர்மீது படையெடுத்தார்கள். அவர் கள் பக்ஸார் என்னுமிடத்தில் ஆங்கிலேய சேனையைச் சந்திக் கப்பட்டார்கள். அவ்விடத்தில் இரு கட்சிக்காரருக்கும் பெருத்த போர் மூண்டது. இதில் இங்கிலீஷ்காரர் ஜெயித் தார்கள். எனினும், அவர்கள் சேனையில் ஐம்பது உத்தி யோகஸ்தர்களும், சுமார் ஆயிரம் பேர்களும் இறந்தார்கள். நேசக் கட்சியில் இன்னும் பலர் மாண்டனர். இவ் வெற்றி யின் பலனாக ஆங்கிலேயர் வட இந்தியாவில் மிகுந்த பலிஷ் டர்களானார்கள். ஷா அலம் ஆங்கிலேயரின் ஆதரவை நாடிச் சென்றார். டில்லி பாதுஷாவே இவர்களின் தயவை நாடி வதாயிருந்தால் இவர்களின் பெருமை எவ்வளவு உன்னதமா யிருக்க வேண்டுமென்பதை நீங்கள் யோசித்துப் பாருங்கள். இதோடுகூட அயோத்தி ராஜ்யமும் இவர்கள் வசமாய்

வந்தது. அதை இவர்களிஷ்டப் பிரகாரம் செய்துகொள்ளலாம். மீர்காஸிம் சென்றவிடம் தெரியாமற்போயிற்று.

9. க்ளைவ் வங்காளத்திற்குக் கவர்னரானது தங்களிஷ்டப்படி கல்கத்தா நிர்வாக சபையோர், வங்காளத்தில் நவாபுகளை உண்டாக்குவதிலும், தள்ளுவதிலுந்தான் இந்த யுத்தம் நடந்தது என்பது உங்களுக்குத் தெரியும். இச்சமாசாரம் இங்கிலாந்துக்கெட்டியவுடன் கம்பெனி டைரெக்டர்கள் லார்ட் க்ளைவை இந்தியாவிற்குச் சென்று தங்கள் சமாசாரங்களைச் சீர் திருத்தஞ் செய்து வைக்கும்படி கேட்டுக்கொண்டார்கள். இந்தியாவில் தம் தேசத்தார் செய்யும் அக்கிரமங்களை வேரோடு தொலைக்க வேண்டுமென்றெண்ணி அவருமதற்குடன்பட்டார். இவர் புறப்படுமுன் இந்தியாவில் மீர்ஜாபர் காலஞ் சென்றார். கல்கத்தா நிர்வாக சபையோர் அவர் தாசியின் குமாரனிடமிருந்து இருபது லட்ச ரூபாய் பெற்றுக்கொண்டு அவனை நவாபாக்கிவிட்டார்கள். இதுவுமன்றி, இவர்கள் ஆங்கில சேனையை வாடகைக்கு விடுவதும், இலஞ்சம் வாங்குவதும், சொந்த வியாபாரஞ் செய்வதுமாக இருந்தார்கள். இதன் நிமித்தம் கவர்ன்மெண்ட் சீர் கெட்டு நிலை குலைந்து ஜனங்களுக்கு மிகுந்த கெடுதி உண்டாயிற்று.

10. ஆகையால், லார்ட் க்ளைவ் இந்தியாவிற்கு வந்தவுடன் இரண்டு காரியங்கள் செய்ய வேண்டியிருந்தன. முதலாவது, டில்லி பாதுஷாவுடனும், அயோத்தி நவாபுடனும் சமாதானம் செய்ய வேண்டியிருந்தது: இரண்டாவது, வங்காள அரசாங்கத்தைச் சீர் திருத்தி, உத்தியோகஸ்தர்களிடமிருந்த தீக் கொள்கைகளையெல்லாம் நீக்க வேண்டியிருந்தது. இவர் 1765-ம் வருஷம் மே மாதம் கல்கத்தாவில் வந்து சேர்ந்து உடனே அலகபாத்திற்குச் சென்றார்.

அங்கே அவர் டில்லி பாதுஷாவுடனும், அயோத்தி நவாபுடனும் ஓர் உடன்படிக்கை செய்துகொண்டார். இது இந்தியாவில் ஆங்கில சரித்திரத்தில் மிகவும் முக்கியமான உடன்படிக்கைகளிலொன்று. இவ் வுடன்படிக்கையின்படி, டில்லிபாதுஷா, கம்பெனியாருக்கு **வங்காளம், பீஹார், ஓரிஸா** முதலிய பெரிய மாகாணங்களிலிருந்து வரிவசூல் செய்யும் **திவானி** அதிகாரத்தைக் கொடுத்தார். இதற்குப் பதிலாகக் கம்பெனியார் வருஷத்திற்கு 26 லட்சம் ரூபாய்கள் வரி பாதுஷாவுக்குக் கொடுப்பதாக ஒப்புக் கொண்டார்கள். இது வரையில் கம்பெனியார் இந்தியாவில் சம்பாதித்த பிரதேசங்களெல்லாம் அவர்கள் யாதொருதடையுமின்றி அனுபவித்து வரலாமென்ற உத்தரவும் பாதுஷா கொடுத்தார். ஆகையால் இச்சமாதானத்திற்கு அப்புறந்தான் கம்பெனியாருக்கு நமது தேசத்தில் ஒரு கிரமமான நிலைமையும் பதவியுங் கிடைத்ததென்று சொல்லலாம். மற்ற நவாபுகளைப்போல இவர்களும் பாதுஷாவின் உத்தரவின்பேரில், தங்களுக்குட்பட்ட மாகாணங்களில் அரசாளலாம். இரண்டாவது, அயோத்தி ராஜ்யம் ஷுஜாவுடௌலாவுக்குத் திருப்பிக் கொடுக்கப்பட்டது. ஆனால் அவர் யுத்தச் செலவிற்காக 50 லக்ஷ ரூபாய் ஆங்கிலேயர்க்கும், அலகபாத், கோரா என்ற மாகாணங்களை ஷா அலத்திற்கும் கொடுக்கவேண்டியிருந்தது.

11. **வங்காளத்தின் அரசாங்க ஏற்பாடு** — கம்பெனியாருக்குத் திவானி அதிகாரம் கிடைத்த போதிலும் வங்காளத்தில் ஒரு நவாபு இருந்தானென்று உங்களுக்குத் தெரியுமல்லவா? இவரைப் பெயருக்கு நவாபாக வைத்துக்கொண்டு க்ளைவ் வங்காள மாகாணங்களின் அரசாங்கத்திற்குப் பாடுபட்டார். இதன்படி கம்பெனியார் தங்கள் சேனையை வைத்

துக்கொண்டு மேல்கூறிய மாகாணங்களைக் காத்து வரிகளை வசூல்செய்து, வரவுசெலவுகளைச் சரிபார்த்து வந்தனர். மாகாண வருமானத்திலிருந்து, வங்காள நவாப் வருஷத்திற்கு 53 லட்ச ரூபாய்பெற்று, நியாயஸ்தலங்களை நடத்தியும், போலீஸ் அதிகாரத்தைச் செலுத்தியும் வந்தார். ஆகையால் இச்சமயத்தில் வங்காளத்தில் இரண்டுவித அரசு இருந்ததெனச் சொல்லலாம்.

12. **க்ளைவின் உத்தியோகச் சீர்திருத்தம்** :— மேற்சொன்ன காரியங்கள் முடிந்தவுடன் க்ளைவ் உத்தியோகங்களைச் சீர்திருத்தம் செய்ய முயன்றார். கம்பெனி உத்தியோகஸ்தருள் லஞ்சம் வாங்குவது, சொந்த பாவத்தாக வியாபாரஞ்செய்வது முதலிய ஊழல்களிருந்தன வென்று சொன்னோ மல்லவா? இதன் பயனாக ராஜாங்க விஷயங்கள் மிகவும் நிலைகுலைந்து நின்றன. இதைச் சீர்திருத்தஞ் செய்வதென்றால் மிகவும் துர்லபமான காரியம்; இவ்வித சீர்திருத்தத்திற்குக் கம்பெனி உத்தியோகஸ்தர்கள் உடன்படமாட்டோமென்று எதிர்வாதஞ் செய்ய ஆரம்பித்தனர். இதற்குக் காரணம் அவர்களுக்குக் குறைந்த சம்பளமாயிருப்பதுதானென்று க்ளைவ் தெரிந்துகொண்டார். சம்பளம் குறைவாயிருப்பதால் அவர்கள் கவலையற்று உத்தியோகம் பார்க்க முடியவில்லை. ஆகையால் க்ளைவ் அவர்களின் சம்பளத்தை அதிகரித்து அவர்களைச் சொந்த வியாபாரஞ் செய்யலாகாதென மறுத்தார். ராணுவத்திலும் க்ளைவ் இவ்வித சீர் திருத்தங்கள் செய்து வைத்தார். தங்கள் வரும்படி குறைந்துபோகவே, உத்தியோகஸ்தரெல்லாம் கலகம்செய்வதாகப் பயமுறுத்தினார்கள். ஆனால் க்ளைவ் மிகுந்த தைரியமாகவும் ஒரே பிடிவாதமாகவு மிருந்தபடியால், அவர்களின் பிதற்றுதலெல்லாம் வீணாய்ப் போயின.

13. இரண்டு வருஷகாலம் மிகுந்த சிரமத்துடன் கவர்னராக வேலை செய்தபின், க்ளைவ் 1767-ம் வருஷம் இங்கிலாந்திற்குத் திரும்பிப் போனார். வேலை மிகுதியால் அவர் தேகம் மிகுந்த அசௌக்கிய மடைந்தது. இவர் இந்தியாவில் மிகுந்த பணம் சப்பாதித்ததால் லண்டனில் பெரிய பிரபுபோல் வசித்து வந்தார். இவர் இந்தியாவில் செய்த சீர்திருத்தங்களின் பலனாக இவருக்குப் பலர் விரோதிகளானார்கள். அவர்கள் இங்கிலாந்திற்குப் போய் இவரைப் பலவாறாக நிந்தித்து, தங்கள் நண்பர் மூலமாக இவர்மீது பார்லியமெண்ட் சபையிலுங் குற்றங்கூறினார். இவரைப் பார்லிமெண்டார் விசாரணை செய்து முடிவில் இவரை விடுதலை செய்துவிட்டார்கள். க்ளைவ் பெருத்த வெகுமானங்களைப் பெற்றிருந்த போதிலும் அவர் தம் தேசத்திற்கு மிகவும் கண்ணியமான வேலை செய்திருக்கிறா ரென்பது அவர்களினபிப்பிராயம். இருந்தாலும், இவ்விசாரணை இவருக்கு மிகுந்த மனோவிசாரத்தை உண்டாக்கி இவரைப் பைத்தியம் பிடித்தவர்போலாக்கிவிட்டது. 1774 ம் வருஷம், நவம்பர் மாதம் இவர் தற்கொலை செய்துகொண்டார். சில சமயங்களில் மனச்சாட்சிக்கு விரோதமாகவே இவர் சில குற்றங்கள் செய்திருந்தபோதும், க்ளைவ் மிகுந்த தைரியமும், திடமும், பிடிவாதமும், அமைவும் பெற்றவர். எவ்வளவு அபாயமாயிருந்தபோதிலும் இவர் யுத்தகளத்தில் தைரியத்தை இழந்தவரல்லர். ஆகையால் இவர் செய்த யுத்தங்களில் எல்லாம் வெற்றி பெற்றார்.

14. **க்ளைவுக்குப்பின் இந்தியாவின் நிலைமை :—** க்ளைவ் இந்தியாவை விட்டுச் செல்லும்போது ஆங்கிலேயருக்குக் கொஞ்சமிடந்தான் சொந்தமாயிருந்தது. அவர்களுக்குச் சேர்ந்ததெல்லாம் வங்காள மாகாணமும், வட சர்க்காரும்,

சென்னபட்டணம், திரிச்சிராப்பள்ளி, பம்பாய் போன்ற சிறு இடங்களுமே. பக்ஸார் யுத்தத்திற்குப்பின் ஆங்கிலேயருக்கு வட இந்தியா முழுவதும் கீர்த்தி பரவி யிருந்தது. டில்லி பாதுஷாவின் பலம், அக்பர் அவுரங்கசீப் முதலிய பாதுஷாக்களின் பலத்தில், பத்தில் ஒரு பங்குகூட இல்லை. வட இந்தியாவில் ஆங்கிலேயரை எதிர்க்கக் கூடியவர் மஹாராஷ்டிரர் ஒருவரே. அவர்களின் அதிகாரம் வட இந்தியாவிலும், மத்திய இந்தியாவிலும், தென்னிந்தியாவிலும், வெகு தூரம் பரவியிருந்தது. ஆனால் 1761-ம் வருஷம் இவர்களுக்கும் ஆப்கானியருக்கும் நடந்த யுத்தத்தில் இவர்கள் பெருந்தோல்வி யடைந்தனர். இத்தோல்வியின் பயனாக இவர்களினதிகாரம் முழுவதும் தொலையாவிடினும், அது மிகவும் ஒடுங்கியது. ஆகையால் இவர்கள் இந்தியாவில் யாவருக்கும் துன்பத்தைக் கொடுக்கும் நிலையிலில்லை. இச்சமயத்தில், நமதுதேசத்திற்கு வெளி நாடுகளினின்று அன்னியர் படையெடுப்பாரென்ற பயமில்லாமலிருந்தது. ஏனெனில் இந்தியாவின் வடமேற்குப் பிரதேசத்தில் இரண்டு பலமான ராஜ்யங்களேற்பட்டுவிட்டன. முதலாவது, பஞ்சாப் பிரதேசத்தில் சிக்கியர்கள் தங்கள் குருக்களின்கீழ் பலத்த ஜனங்களாகி ஓர் ராஜ்யத்தை அவுரங்கசீப்பிற்குப் பின்னர் ஏற்படுத்திக் கொண்டனர். இரண்டாவது, சற்றேறக்குறைய இதே சமயத்தில்தான இந்தியாவின் வடமேற் கெல்லைக்கு அப்புறமிருக்கும் ஆப்கானிஸ்தானத்திலும் ஒரு பலமான ராஜ்யம் ஏற்பட்டது. ஆகையால், மத்திய ஆசியாவிலிருந்து எவராவது நமது தேசத்திற்குள் வரவேண்டுமானால் அவ்விரு ராஜ்யங்களைத் தோற்கடித்த பின்தான் வரமுடியும். இது மிகவும் கடினமான காரியம். ஆகையால் நமது தேசம் இச்சமயத்தில் அயல்

தேசங்களினின்றும் நிலமார்க்கமாய் ஏற்படும் படையெடுப்புக்களினின்று பத்திரமாயிருந்தது. இந்தியா, இவ்வாறிருந்ததனல் ஆங்கிலேயரி னதிகாரமும் ஒருவித தடையுமின்றி வளர ஆரம்பித்தது.



## 9. வாரன் ஹேஸ்டிங்ஸ்

1. சென்ற பாடத்தில், வங்காள மாகாணத்தில் ஆங்கிலேயரின் அரசாட்சிஸ்தாபனமானதைப்பற்றி வாசித்தீர்கள். க்ளைவ் காலம் முதற்கொண்டு நமது தேசத்தில் பல அரசாங்க நிபுணர்கள் இங்கிலாந்தினின்றும் வந்து, ஆங்கில அரசாட்சியைப் பிரபலப்படுத்தி, நிலை நிறுத்தியிருக்கின்றனர். அந்நிபுணர்களில் வாரன் ஹேஸ்டிங்ஸ் என்பவர் ஒருவர். அவரைப்பற்றி இங்கு எழுதுவோம்.

2. க்ளைவ், வங்காள அரசாங்கத்திற்காகச் செய்த ஏற்பாடுகள் நாளடைவில் பயனற்றுப் போயின. தேசத்தின் வரியை வசூல் செய்யும்வேலை ஆங்கிலேயரிட மிருந்தும் சுதேச உத்தியோகஸ்தர்களே இவ்வேலையைச் செய்து வந்தனர். இவர்களில் பெரும்பாலோர் மிகவும் இழிந்த சுபாவத்தைப் பெற்று லஞ்சம் வாங்குபவர்களா யிருந்தார்கள். அவர்கள் ஜனங்களைச் சொல்ல முடியாத துன்பத்திற்கு உள்ளாக்கினுர்கள். ஆங்கிலேயர் தேசத்தைப் பாதுகாப்பதற்காகப் பெருத்த சேனையை மிகுந்த செலவில் வைத்திருந்தும், அவர்கள் உள்நாட்டு விஷயங்களில் தலையிடக் கூடாமற்போயிற்று. நவாபும், அவரைச் சார்ந்தவர்களும் தங்களிஷ்டப்படி தேசத்தை அரசாண்டு வந்தார்கள். ஜனங்கள் மிகுந்த கஷ்டத்திற்குள்ளாக்கப்பட்டும் இங்கி

லீஷ்சேனை இருந்ததின் நிமித்தம் கலகஞ் செய்யச் சக்தி யற்றவர்களா யிருந்தார்கள். இவ்விதமாக அநியாயமும், கஷ்டமும் முதிர்ந்து அரசாங்கமே அடியோடு தொலைந்து போகுந்தறுவாயிலிருந்தது. இதோடுகூட 1770-ம் வரு



வாரன் ஹேஸ்டிங்ஸ்

ஷத்தில், வங்காளத்தில் மிகக்கொடியதொரு பஞ்சம் உண்டாகி, ஜனத்தொகையில் மூன்றில் ஒரு பங்குக்குமேல் மாண்டன. பசியினாலும், வியாதியினாலும், மீதியிருப்போர் பட்டகஷ்டத்திற்கு அளவேயில்லை. அவர்களுக்கு உதவி

செய்யவும் ஒருவரும் இல்லை. இத்தருணத்தில் சாமர்த்திய மும், தைரியமும் வாய்ந்த ஒருவர் அதிகாரத்திற்கு வந்தாலன்றித் தேசம் நிலைகுலைந்து போகுமென்பது நிச்சயம். நல்ல வேளையாய் இவ்வளவு சாமர்த்தியம் பெற்றவர் ஒருவர் கம்பெனி உத்தியோகத்தில் இருந்தார். இவர்தான் **வாரன் ஹேஸ்டிங்ஸ்.**

3. க்ளைவைப் போலவே இவரும் வெகு பாலியமாயிருக்கும்போதே இந்தியாவிற்குக் கம்பெனி உத்தியோகஸ்தராய் வந்தவர். இவருக்கு அப்போது வயது பதினெட்டுதான். இவர் முதல் முதலில் காஸிம் பெஜாரிலிருந்த கம்பெனியின் வர்த்தகஸ்தலத்தில் வேலையாயிருந்தார். அவ்விடம் ஸிராஜுத் டௌலாவால் பிடிபட்டபோது இவரும் மற்றவர்களைப்போல வெகு சிரமத்துடன் அவ்விடத்தினின்று தப்பியோடினர். பிளாஸி யுத்தத்திற்குப் பின் இவர் மீர்ஜாபர் சமஸ்தானத்தில் ஆங்கிலப் பிரதிநிதியாகவும் பிறகு கல்கத்தா நிர்வாகசபையின் மெம்பராகவும் நியமிக்கப்பட்டார். இவ்விரண்டு உத்தியோகங்களிலுமிவர் மிகுந்த திறமையைக் காட்டி வந்தனர். ஆகையால், 1772-ம் வருஷத்தில் வங்காள அரசாங்கம் மிகுந்த கேடுகெட்ட நிலையிலிருக்கும்போது இவர் அம் மாகாணத்தின் கவர்னராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். க்ளைவுக்கு மட்டும் இவருடைய முழுசாமர்த்தியம் தெரியவில்லை. இவ்வளவு சாந்தமும், சாத்வீகமும் வாய்ந்தவர் கவர்னராக்கப்பட்டால் மற்ற நிர்வாகசபை மெம்பர்கள் இவரை மேய்த்து விடுவார்களென்று க்ளைவ் நம்பினர். ஆனல், அவர், ஹேஸ்டிங்ஸின் உள்ளிருந்த உத்தியோக பக்தியையும், விடாமுயற்சியையும், ராஜாங்க விஷயங்களில் புத்திநுட்பத்தையும், தெரிந்து கொள்ளவில்லை. இவர் உடம்பு ஒடிந்து விழுவதுபோலிருந்

தும் இவருக்கிருந்த சாமர்த்தியமும், மனோதைரியமும் கணக்கிடத் தகாதிருந்தன. நிர்வாக சபையிற் பெரும்பான்மையோர் இவருக்கு விரோதிகளா யிருந்தும் இவர் தம் சாதுர்யத்தாலும், பொறுமையாலும் அவர்களைச் சரிப்படுத்திவந்தார்.

4. **இவர் செய்த சீர்திருத்தங்கள்:—** இவர், க்ளைவ் ஏற்பாடு செய்திருந்த "இரட்டையரசு" என்ற ராஜாங்க ஏற்பாட்டை ஒழித்தார். மாகாண பரிபாலனத்தின் ஒவ்வொரு பாகத்தையும் இவர் தாமே பார்த்து வந்தார். இது முதற்கொண்டு நவாபுக்கு அரசாங்க விஷயத்தில் ஒரு சம்பந்தமும் கிடையாது. இவர் பொக்கிஷத்தையும் மாகாணத் தலைநகரையும் மூர்ஷிதாபாத்தினின்று கல்கத்தாவிற்கு மாற்றினார். பிறகு இவர் மாகாண முழுவதையும் பல ஜில்லாக்களாகப் பிரித்து, ஒவ்வொரு ஜில்லாவிற்கும் ஓர் இங்கிலீஷ் கலெக்ட்டரை ஏற்படுத்தினார். வரிவசூல் செய்வது, முன்னைவிட மிகவும் கண்டிப்பாய் நடந்து வந்தமையால், முன்போல் கீழ் உத்தியோகஸ்தர்கள் பணத்தைக் கொள்ளையடிக்க முடியவில்லை. அக் கலெக்ட்டர்களுக்கு வரிவசூல் செய்வதுடன், கேஸ்கள் விசாரிக்கு மதிகாரமுங் கொடுக்கப் பட்டது. மாகாண வரவு செலவுகளை மேற்பார்ப்பதற்காக, இச்சமயத்தில் கல்கத்தாவில் ஓர் நிலவரிச் சங்கம் (Revenue Board) ஏற்படுத்தப்பட்டது.

5. நிலவரி விஷயங்களை ஒருவிதமாக ஏற்பாடு செய்த பின், நியாய பரிபாலனத்தில் ஹேஸ்டிங்ஸ் தம் கவனத்தைச் செலுத்தினார். இதன் நிமித்தம் இவர் கல்கத்தாவில் **ஸதர் திவானி அதாலத்** என்ற நியாயஸ்தலமும், மூர்ஷிதாபாத்தில் **ஸதர் நிஜாமத் அதாலத்** என்ற நியாயஸ்தலத்தையு மேற்படுத்தினர். இவ்வை இரண்டும் அப்பீல்

கோர்ட்டுகள்; இவைகளில், கல்கத்தாகோர்ட் ஸிவில் கேஸ்களையும், மூர்ஷிதாபாத் கோர்ட்டு கிரிமினல் கேஸ்களையும் விசாரித்து வந்தன. இந்தக் கோர்ட்டுகளின் உதவிக்காக இந்துக்களின் சட்டங்களையும், மகம்மதியரின் சட்டங்களையும் ஒழுங்கு படுத்தி, சேர்த்துத் தொகுக்குமாறு இவர் ஏற்பாடு செய்தார். இவர் காலத்திலேற்பட்ட சட்டப் புத்தகங்களை தற்காலத்திலும் நமது தேசத்தில் நியாயஸ்தலங்கள் உபயோகித்து வருகின்றன. க்ளைவ் கம்பெனிக்கு ராஜ்ஜியத்தை சம்பாதித்தார்; ஆனால் ஹேஸ்டிங்ஸ்தான், கம்பெனியின் அரசாங்கத்தைச் சீர்திருத்தி ஒழுங்குபடுத்தினவர்.

**6. வாரன் ஹேஸ்டிங்ஸும் சுதேச மன்னர்களும்:—** ஹேஸ்டிங்ஸ் கவர்னராக வந்தபோது கம்பெனிக்கு சுமார் இரண்டு கோடி ரூபா கடனிருந்தது. இப்பெருங் கடனைத் தீர்ப்பது மிகவும் அத்தியாவசிய மாயிற்று. இதற்காக ஹேஸ்டிங்ஸ் சில கிரமமற்ற காரியங்கள் கூடச் செய்ய வேண்டியிருந்தது. இதற்காக இவர் வங்காள நவாபுக்கு இதுவரையில் கொடுத்துவந்த பணத்தில் பாதியை நிறுத்தி விட்டார். இதற்கு இவர் கூறிய காரணம் யாதெனில், ஆங்கிலேயர் ராஜாங்க விவகார முழுமையும் தாமே பார்த்து வருவதால், நவாபுக்கு முன்போற் செலவு கிடையாது என்பதே.

7. இதே காலத்தில் மஹாராஷ்டிரர்கள் சிறிது சிறிதாய்ப் பலவந்தர்களாகி ஆங்கிலேயருக்கு பலத்த எதிரிகளானார்கள். அவர்கள் வட இந்தியாவில், தங்கள் சேனைகளைச் செலுத்தி டில்லி நகரைப் பிடித்து, அங்குள்ள பாதுஷாவாகிய ஷா ஆலத்தையும் தம் வசமாக்கிக்கொண்டார்கள். அலகாபாத் உடன்படிக்கைப்படி ஆங்கிலேயர் பாதுஷாவிற்கு 26 லட்ச ரூபா வருஷக் கப்பஞ்செலுத்த வேண்டுமல்லவா?

ஷா ஆலம் மஹாராஷ்டிரர் கைவசஞ் சென்றபோது, இப் பெருந் தொகையைச் செலுத்தாமல் நிறுத்திக் கொள்வதற் குச் சரியான சமயம் நேரிட்டது. ஆகையால் ஹேஸ்டிங்ஸ் பாதுஷாவிற்குக் கொடுத்து வந்த 26 லட்ச ரூபாயை நிறுத்திவிட்டார். கப்பத்தைச் செலுத்தும்படி ஆங்கிலே யரைக் கட்டாயப்படுத்தும் திறமை ஷா ஆலத்தினிட மில்லாமற் போயிற்று. மேலும் இவர் கோரா, அலகபாத் என்ற மாகாணங்களை பாதுஷாவிட மிருந்து பிடுங்கி, அயோத்தி நவாபுக்கு, 50 லட்ச ரூபாய்க்கு விற்றுவிட்டார்.

8. ஹேஸ்டிங்ஸ் இதோடு நிற்கவில்லை. பணம் சம்பா திப்பதற்கு மிகவும் கேவலமான மார்க்கங்களையும் அனுஷ் டிக்கலானார். அயோத்திக் கடுத்து ரோஹில்கண்ட் என்ற பிரதேச மொன் றிருக்கிறது. அந்த நாடு மிகவும் செழிப் பானது. ஹேஸ்டிங்ஸ் காலத்தில் அந் நாட்டார்களுக்கு மஹாராஷ்டிர பயம் மிகவும் அதிகமாக இருந்தது. ஆகை யால், அவர்கள், மஹாராஷ்டிரர் தம் நாட்டைத் தாக்கும் போது உதவி செய்யுமாறு அயோத்தி நவாபை வேண்டினர். அப்படி அவர் செய்யும் உதவிக்குக் கைம்மாருக அவர்கள் நவாபுக்கு 40 லக்ஷ ரூபாய் கொடுப்பதாக வாக்குத்தத்தஞ் செய்தார்கள். ஆனால் அவர்கள் எதிர்பார்த்தபடி மஹா ராஷ்டிரர்களால் தாக்கப்படவில்லை. எனினும் நவாப் தனக் குச் சேர வேண்டிய 40 லக்ஷ ரூபாய்களைக் கொடுக்குமாறு வேண்டினார். இதை ரோஹில்லர்கள் மறுத்தனர். இக் காரணங் கொண்டு நவாப் இவர்களின் தேசத்தை ஜெயிப்ப தாகத் தீர்மானங் கொண்டார். உடனே இவர் ஹேஸ்டிங் ஸுடன் காசியிலோர் உடன்படிக்கை செய்துகொண்டார். இதன்படி கம்பெனியார் நவாபுக்கு உதவிச் சேனை அனுப் புவதென்றும், அதற்குப் பிரதிப் பிரயோஜனமாக செலவு

தொகையும், ரோஹில்லர் கொடுக்க வேண்டிய 40 லக்ஷ ரூபாய்களும் கம்பெனியார் பெற்றுக்கொள்ள வேண்டு மென்றுந் தீர்மானிக்கப்பட்டன. ஆங்கிலேயருக்கு ரோஹில் லர்கள் ஒரு விதக் கெடுதியும் செய்யா திருப்பினும், ஹேஸ்டிங்ஸ் கேவலம் பணத்தை உத்தேசித்து நவாபின் உதவிக்காகச் சேனையை அனுப்பினார். ரோஹில்லர்கள் தோல்வியடைந்து அவர்கள் ராஜ்ஜியம் அயோத்தி நவாபால் அபகரிக்கப்பட்டது; ஆங்கிலேயரும் தங்கள் பணத்தைப் பெற்றார்கள். ரோஹில்லர் வம்சத்தைச் சார்ந்தவர்தான், தற்காலத்தி லிருக்கும் **ராம்பூர் நவாப்** என்பவர். இக் காரி யத்திற்காக பலர் ஹேஸ்டிங்ஸை நிந்தித்தார்கள்.

1. **ரேகுலேடிங் ஆக்ட்:** பார்லியமெண்டார் அவர்களை நல்வழியில் நிறுத்தவேண்டியது அவசியமாயிற்று. இதுவுந் தவிர, 1773-ம் வருஷத்தில் கம்பெனியார் சடன் மிகுந் திருந்தபடியால் ஆங்கில கவர்ன்மெண்டைப் பொருளுதவி செய்யுமாறு வேண்டினர். கம்பெனியாரின் சமாசாரங்களில் தலையிடுவதற்குத் தகுந்த சமயத்தை எதிர்பார்த்திருந்த பார்லியமெண்ட், சில நிபந்தனைகளின்மீது அவ்வுதவி செய் வதாக ஒப்புக்கொண்டது. இந் நிபந்தனைகள் கீழ்கண்ட வைகளே:— (1) முதலாவது, கம்பெனியார் அடிக்கடி தாங்கள் ராஜாங்க விஷயங்களில் செய்யும் செய்கைகளை ஆங்கில கவர்ன்மெண்டாருக்குத் தெரிவித்தல் வேண்டும்; (2) இரண்டாவது, ஆங்கில கவர்ன்மெண்டாருக்குக் கம் பெனியார் செய்யும் எவ்வித விதிகளையும், சட்டங்களையும் உத்தரவுகளையும் ரத்து செய்யும் அதிகார மிருத்தல் வேண் டும்; (3) மூன்றாவது, கல்கத்தாவில் ஒருன்னத நியாய ஸ்தலம் (Supreme Court of Judicature) ஏற்படுத்தப்பட வேண்டும், அதன் ஜட்ஜிகளெல்லாம் இங்கிலாந்தின் அரச

ரால் நியமிக்கப்பட வேண்டும். அவர்கள்மீது கம்பெனி கவர்ன்மெண்டுக்கு ஒரு வித அதிகாரமும் இருத்தல் கூடாது ; (4) நான்காவது, வங்காள கவர்னர் இந்தியாவில் கம்பெனி ராஜ்ஜியங்களுக்கெல்லாம் கவர்னர்-ஜெனரலாதல் வேண்டும். அவர் இங்கிலாந்தில் அரசரால் தேர்ந்தெடுக் கப்படுதல் வேண்டும். அவருக் குதவியாக நான்கு நபர்க ளடங்கிய ஓர் நிர்வாக சபை யிருத்தல் வேண்டும். கம்பெ னியாருக்கு வேறு வழி யில்லாததால் இந்த நிபந்தனை களுக்கு உட்பட வேண்டி யிருந்தது. பார்லியமெண்டும் இவைக ளடங்கிய ஓர் சட்டத்தை உண்டாக்கி, இவர்கள் கேட்ட உதவியைக் கொடுக்கும்படி அனுமதி யளித்தது. இச் சட்டத்திற்குத்தான் **ரேகுலேடிங் ஆக்ட்** என்று பெயர். இச் சட்டப்படி வாரன் ஹேஸ்டிங்ஸ் இந்தியாவின் முதல் கவர்னர் ஜெனரலாகத் தேர்ந்தெடுக்கப்பட்டார். ஜெனரல் க்ளாவ்ரிங், மான்ஸன், ஸர். பிலிப் பிரான்ஸிஸ், பார்வெல் என்ற நால்வரும் நிர்வாக சபை அங்கத்தினராகத் தேர்ந் தெடுக்கப்பட்டனர். இவர்களில் முதல் மூவரும் இங்கி லாந்தி லிருந்து அனுப்பப்பட்டவர்கள் ; நான்காமவர் இந்தி யாவில் வெகு நாளாக உத்தியோகஞ் செய்தவர். இம் மூவருக்கும் ஹேஸ்டிங்ஸின் நடவடிக்கைக ளொன்றும் பிடிக்கவில்லை. ஆகையால் அவர்கள் ஒன்று சேர்ந்து கொண்டு கவர்னர்-ஜெனரலுக்கு ஒவ்வொரு சமயத்திலுங் குறுக்குக் கட்டை போட்டுக்கொண்டே வந்தனர். ரெகு லேடிங் ஆக்டின்படி, நிர்வாக சபை அங்கத்தினரின் பெரும்பான்மையோ ரிஷ்டப்படிதான், கவர்னர்-ஜெனரல் நடத்தல் வேண்டும். இச் சமயத்தில் பெரும்பான்மை யோர் ஹேஸ்டிங்ஸுக்கு விரோதமாக இருந்தபடியால் அவரால் அரசாங்க காரியங்கள் நடத்துவது மிகவுங் கஷ்டமாயிருந்தது.

**2. ராஜா நந்தகுமாரரைத் தூக்கில் போட்டது:** பிரான்ஸிஸ் முதலானவர்கள் ஹேஸ்டிங்ஸின் மீது லஞ்சம் வாங்கினதாகவும், வெகுமதிகள் பெற்றதாகவும் பல குற்றங்கள் சாட்டினார்கள். இவர்கள் இக்குற்றங்களை எவர் வேண்டுமென்றாலும் தைரியமாக, ஒரு வித அபாயமுமின்றி ருஜுப்படுத்தலாமென்று விளம்பரம் செய்தார்கள். இவர்களினபிப்பிராயம் யாதெனில் எப்படியாவது ஹேஸ்டிங்ஸைத் தொலைத்துவிட வேண்டுமென்பதே. இச் சமயத்தில் மகாராஜா நந்தகுமாரர் என்ற ஒரு செல்வந்தர் முன் வந்து தம்மிடம் ஹேஸ்டிங்ஸ் லஞ்சம் வாங்கியதாகத் தகுந்த ருஜு இருப்பதாகச் சொன்னார். உடனே பிரான்ஸிஸும், அவர் நண்பர்களும் ஹேஸ்டிங்ஸை வரவழைத்து லஞ்சம் வாங்கிய பணத்தை யெல்லாம் பொக்கிஷத்தில் செலுத்தும்படி சொன்னார்கள். ஹேஸ்டிங்ஸின் நிலைமை மிகவும் நிச்சய மில்லாமலிருந்தது. ஆனால் அவர் மட்டும் மனோ தைரியத்தை இழந்துவிட வில்லை. இலஞ்சம் வாங்கின குற்றத்தை அவர் மிகவும் ஊன்றிய உச்சரிப்புடன் மறுத்ததுமன்றி நந்தகுமாரரின் மீதே தப்புக் கையெழுத்துப் போட்டதாக இவர் ஓர் வழக்கை உண்டாக்கிவிட்டார். இந்தக் கேஸ் ஸுப்ரீம் கோர்டின் முன்பாக நடைபெற்றது. நந்தகுமாரர் இக் குற்றத்தைக் கம்பெனி மாகாணங்களுக்கு வெளியே செய்திருந்தும், இவரைக் கோர்ட்டார் குற்றவாளியெனத் தீர்மானஞ் செய்து, ஆங்கில சட்டப் பிரகாரம் இவரைத் தூக்கில் போட உத்தரவு செய்தார்கள். பிரான்ஸிஸ் முதலியவர்கள் தூக்கில் போடுவதை நிறுத்த எவ்வளவோ பிரயத்தனஞ் செய்தும் பலனில்லாமல்போயிற்று. ஹேஸ்டிங்ஸின் குற்றத்தை நந்தகுமாரர் நிலை நிறுத்துவதற்கு முன் ஹேஸ்டிங்ஸ் அவரைத் தூக்கில் போட ஏற்பாடு செய்துவிட்டார்.

**3. முதல் மஹாராஷ்டிர யுத்தம் :** ஹேஸ்டிங்ஸ் கவர்னர்-ஜெனரலா யிருந்த காலத்திற்குள் இரண்டு முக்கிய சண்டைகள் நடத்த வேண்டி யிருந்தது. அவைகளிலொன்று, பம்பாய் ராஜதானியில் மஹாராஷ்டிரர்களுடன் நடந்தது ; மற்றொன்று சென்னை ராஜதானியில் ஹைதராலியினுடன் நடந்தது. இவ்விடத்தில் மஹாராஷ்டிர யுத்தத்தைப்பற்றிப் படிப்போம்.

**4. காரணங்கள் :** மூன்ருவது பானிப்பட் யுத்தத்தில் மஹாராஷ்டிரர் தோல்வி யடைந்த சங்கதி முன் பீஷ்வா பாலாஜி விஸ்வநாத் என்பவர் கேள்விப்பட்டவுடன், மனத் தியரத்தால் மாண்டார். அவருடைய குமாரர், மாதுராவ் என்பவர் 17 வயதுள்ள வாலிபராயிருந்தும் பீஷ்வாவாக வந்தார். அவர் காலத்தில்தான் மஹாராஷ்டிரர் வட இந்தியாவில் ஷா ஆலமைத் தங்கள் கைவசம் போட்டுக்கொண்டார்கள் ; இவர் காலத்தில் மஹாராஷ்டிரர் தென்னிந்தியாவிலும் ஹைதர் அலியைத் தோற்கடித்தார்கள். இப்படிப் பற்பல வெற்றிகள் பெற்றுக்கொண்டிருக்கும்போது இப் பீஷ்வா திடீரென்றிறந்தார். இவருக்குப் பின் இவரின் தம்பி நாராயண ராவ் என்பவர் பீஷ்வா வானர். இவரும் இப் பதவிக்கு வந்த சிறிது காலத்திற்கெல்லாம் கொலையுண்டார். இக் கொலைக்குக் காரணம் பீஷ்வாவின் சிற்றப்பனுகிய **ரகோபா** அல்லது **ரகுநாத ராவே** என்று மஹாராஷ்டிரர் யாவரும் நம்பி யிருந்தார்கள். இதற்குத் தகுந்தபடி, நாராயண ராவ் கொலையுண்ட சிறிது காலத்திற்கெல்லாம், ரகோபாவே பீஷ்வாவாகப் பட்டஞ் சூட்டிக்கொண்டார். ஆனல், இவரிப்பதவியை வெகு காலம் அனுபவிக்கவில்லை. ஏனெனில், நாராயண ராவ் இறக்கும்போது அவர் மனைவி கர்ப்பமா யிருந்தாள். அம் மாது, இப்போது ஓர் மகனைப்

பெற்றாள். மஹாராஷ்டிர தேசமெங்கும் ரகோபா வெறுக்கப்பட்டமையால், இக் குழந்தையே பீஷ்வாவாக வருகிறதற்கு உரியது என்ற அபிப்பிராயம் முற்றியிருந்தது. இக் குழந்தையின் கட்சியைச் சார்ந்தவரில் மிகவும் முக்கியமானவர் **நானாபர்ணவிஸ்** என்பவர். இவர் மிகுந்த சாமர்த்தியம் பெற்றவர். தம் சக்தியினால் இவர் மிகுந்த உன்னத பதவியை யடைந்து, தாமிருக்கும் வரை யாவரையும், மஹாராஷ்டிரர் பெயரைக் கேட்ட மாத்திரத்திலே நடுநடுங்கும்படி செய்து வந்தார். கொல்லப்பட்ட பீஷ்வாவின் குழந்தையாகிய **மாதுராவ் நாராயண** என்பவரை ரகோபா பட்டம் பெற அங்கீகரிக்கமாட்டேனென்று சொன்னவுடன் நானாபர்ணவிஸ் தேச மெங்கும் பலத்த கிளர்ச்சியை யுண்டாக்கி, பிரஞ்சுக்காரரின் உதவியையும் நாடினார்.

5. இதை யறிந்த ரகோபா தனக் குதவி செய்யுமாறு ஆங்கிலேயரைக் கேட்டார். இச் சமயத்தை ஆங்கிலேயரும் மிகுந்த ஆவலுடன் எதிர்பார்த்திருந்தமையால் அவர்கள் உடனே சம்மதித்தார்கள். இவ்விருவருக்கும் சூரத் நகரத்தில் 1775-ம் வருஷத்தில் ஓர் உடன்படிக்கை நடந்தது. அதன்படி ரகோபா பம்பாய் துறைமுக வாயிலி லிருக்கும் **ஸால்செட், பாஸீன்** என்ற இருதீவுகளையும் ஆங்கிலேயருக்குக் கொடுப்பதாக ஒப்புக்கொண்டார். பம்பாய் கவர்னர் **கர்ணல் கீடிங்** என்பவரின் கீழ் ஒரு சேனையை ரகோபாவுக்கு உதவியாக அனுப்பினார். ரகோபா செய்த காரியம் மஹாராஷ்டிர தேசமெங்கும் எட்டியவுடன் ஜனங்கள் மிகுந்த கோபமடைந்து திடீரென்று கிளம்பி விட்டனர். ஆங்கிலசேனை வெகு சீக்கிரத்தில் மகாராஷ்டிர சேனையால் சூழப்பட்டது. ஆகையால் கீடிங் மிகவும் கேவலமானதோர் உடன்படிக்கைக்குக் கீழ்ப்படிய வேண்டி யிருந்தது.

6. இச்சமாசாரம் கல்கத்தாவிற் கெட்டியவுடன் கவர்னர்-ஜெனரலும், நிர்வாக சபையாரும் சூரத் உடன்படிக்கையை ஒப்புக்கொள்ளாது, தாங்களே கர்னல் அப்டன் என்ற பிரதிநிதியை நாணுபர்ணவிசுடன் விவகாரம் நடத்த புணவிற் கனுப்பினார்கள். இவ்விருவருக்கும் **புரண்தரபுரம்** என்னுமிடத்தில் 1776-ம் வருஷம் ஓர் சமாதானம் நடைபெற்றது. இதன்படி ரகோபாவுடன் முடித்த சூரத் சமாதானம் ரத்து செய்யப்பட்டது. ஆனால் அவருக்கு வருஷத்திற்கு 3 லக்ஷம் ரூபாய் கொடுப்பதாகவும், ஸால்ஸெட்டைப் பற்றிப் பின்பு பேசிக்கொள்வதாகவும் தீர்மானிக்கப்பட்டன.

7. இதையறிந்த பம்பாய் கவர்ன்மெண்டார், இங்கிலாந்திலுள்ள கம்பெனி டைரக்டர்களுக்குத் தங்களேற்பாட்டை அங்கீகரிக்குமாறு பிரார்த்தனை செய்தார்கள். அவர்களும் சூரத் ஏற்பாடு நல்லதென்று கருதி அதையே திடப்படுத்தினார்கள். இதற்கேற்ப, இச்சமயத்தில் புணவில் ஸெயின்ட் ல்யூபின் என்றோர் பிரஞ்சுக்காரர் வந்து ஆங்கிலேயரை இந்தியாவினின்றும் துரத்திவிடுவதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்வதாகப் பெருமை பாராட்டினார். இவர் சொன்னதை நாணுபர்ணவிஸ் நம்பாவிடினும் இவர் புணவிலிருப்பது ஆங்கிலேயருக்கும் மிகுந்த பயத்தைத் தந்தது. இதே காலத்தில் ஆங்கிலேயருக்கும், பிராஞ்சுக்காரருக்கும் ஐரோப்பாவில் யுத்தமும் தொடங்கிற்று. ஆகையால், பம்பாய் கவர்ன்மெண்டார் ரகோபாவின் சிநேகத்தை வற்புறுத்தி, புணவைப் பிடிப்பதற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்தார்கள். இம்முறை அனுப்பி வைத்த சேனைக்கும் அதேகதி உண்டாயிற்று. ஏனெனில் அது புணவுக்கு 18-மைல் தூரத்திலுள்ள தெலகாம் என்ற இடத்திற்கு வந்த

வுடன், மஹாராஷ்டிர சேனை அதைப் பின் நோக்கிச் செல்லுமாறு செய்தது. வார்காம் என்ற இடத்தில் ஆங்கிலேயர் வந்து சேர்ந்தவுடன், மஹாராஷ்டிரர்கள் அவர்களை முற்றிலுஞ் சுற்றிக்கொண்டு, ரகோபாவுடன் செய்துகொண்ட உடன்படிக்கைகளை யெல்லாம் ரத்து செய்யும்படி செய்தனர். கம்பெனி டைரக்டர்களுக்கு இச் சமாசாரம் எட்டியவுடன், அவர்கள் வார்காம் சங்கதிகளை ரத்து செய்து, ராணுவ உத்தியோகஸ்தர்களையும் வேலையை விட்டு நீக்கி விட்டார்கள். ஆகையால், பம்பாய் கவர்ன்மென்டார் செய்த இரண்டாவது முயற்சியும் வீணாகப்போனதுமன்றி ஆங்கிலேயருக்கே கெட்ட பெயரையுங் கொண்டு வந்து விட்டது.

8. ஆகையால், கல்கத்தா கவர்ன்மெண்டார், இங்கிலீஷ்காரரின் கௌரவத்தைக் காப்பாற்றும் பொருட்டு, கர்னல் காடார்ட் என்பவரின் கீழ் மற்றொரு சேனையை அனுப்ப வேண்டியிருந்தது. இச்சேனை முதலில் சில ஜெயங்களைப் பெற்று, ஆமதாபாத், கல்யாண், பஸ்ஸீன் முதலிய இடங்களைப் பிடித்தது. ஆனால் அது புனாவைமட்டும் பிடிக்க முடியவில்லை. அந்நகரின் சமீபத்திற் செல்லும்போது மஹாராஷ்டிரரின் எதிர்ப்பு மிகவும் பலமாயிருந்தபடியால் இச் சேனையும் முன் சேனையைப்போல பின் வாங்கவேண்டியிருந்தது.

9. இதற்குள் கம்பெனிக்குப் பணச்செலவு மிகவும் அதிகமாய்விட்டபடியால் மஹாராஷ்டிரர் சமாதானத்திற்கு வந்தால் போதுமென்றாய்விட்டது. 1782-ம் வருஷத்தில் புனா கவர்ன்மெண்டுக்கும் ஆங்கிலேயருக்கும் **சால்பேய்** என்றவிடத்தில் ஓர் சமாதான உடன்படிக்கை நடந்தது. அதன்படி (1) சால்ஸெட் தவிர ஆங்கிலேயர் ஜெயித்த

நாட்டை யெல்லாம் மஹாராஷ்டிராருக்குத் திருப்பிக் கொடுக்க வேண்டியது; (2) ஆங்கிலேயரைத் தவிர வேறெவ் வித ஐரோப்பியரையும் புனா சமஸ்தானத்தில் வரவேற்றல் கூடாது. ஆங்கிலேயரையும், போர்ச்சுகீசியரையுந் தவிர வேறு எவ்வித ஐரோப்பியரையும் மஹாராஷ்டிர தேசத் தில் வியாபாரஞ் செய்ய விடக்கூடாது; (3) பரோடாவில் ஆங்கிலேயருக்கு வேண்டியவ ரொருவரைக் கெய்க்வாராக அங்கீகரித்தல் வேண்டும்; (4) ரகோபாவுக்கு வருஷத்தில் மூன்று லக்ஷரூபாய் புனா கவர்ன்மெண்டார் பென்ஷனைக் கொடுத்தல் வேண்டும். இந்நிபந்தனைகளின் பேரில் நாராய ணராவின் மகனாகிய மாதுராவ் நாராயண என்பவரே முடி வில் பீஷ்வாவாக நியமிக்கப்பட்டார். ஆகையால் கம்பெனி யாருக்கு இந்த யுத்தத்தினின்று மிகுந்த லாபம் கிடைக்க வில்லை.

10. **முதல் மைசூர் யுத்தம்.** ஹேஸ்டிங்ஸ் கவர்னராக வருவதற்கு சில வருஷங்களுக்கு முன்பே, மைசூரில் ஹைத ர் அலி என்பவர், முதலில் சாதாரண யுத்த வீரராக ஆரம் பித்து, ராணுவத்தலைவராகி முடிவில் அரசரானார். இவர் அரசராக வராமற் போனால், மைசூரே சுற்றுப்புற மிருக் கும் மன்னர்களால் ஜெயிக்கப்படுந் தறுவாயிலிருந்திருக் கும். ஹைதர் படிப்பற்றவராயிருந்தும், மிகுந்த சரீர திடமும், சாமர்த்தியமும், யுத்த சாஸ்திரத்தில் பாண்டித்ய மும் பெற்றவர். இவருக்கு ராஜாங்க விஷயங்களில் சரியான உத்தியோகஸ்தர்களைத் தேர்ந்தெடுக்குந் திறமையும், அவர் களைத் தமக்குக் கீழ்ப்படியச் செய்யுஞ் சக்தியுமிருந்தன. ஆகையால் இவர் பட்டத்திற்கு வந்த சிறிதுகாலத்திற் கெல்லாம், மைசூர், தென்னிந்தியாவில் பிரதான ராஜ் ஜியமாயிற்று. ஆகவே, இக்காலத்தில் ஹைதர், மஹா

ராஷ்டிரர், நிஜாம், ஆங்கிலேயர் என்ற இந் நால்வரும் தென்னிந்தியாவில் பிரதானமானவர்களா யிருந்தார்கள். ஹைதருக்கு இந் நால்வரிலும் மிகுந்த பலமடையவேண்டு மென்ற ஆசையிருந்தது. ஆகையால் மற்ற மூவரும் ஒன்று சேர்ந்து ஹைதருடன் சண்டைசெய்வதாக 1766-ம் வருஷம்



ஹைதர்

ஓர் ஒப்பந்தம் செய்துகொண்டார்கள். ஆனால், ஹைதர் சாமர்த்தியமாக மஹாராஷ்டிரர்களையும், நிஜாமையும் இவ் வுடன்படிக்கையினின்றும் பிரித்து ஆங்கிலேயரை மட்டும் தனக்கு விரோதமாகச் சண்டை செய்யும்படி செய்துவிட்

டார். ஆங்கிலேயர்கள் முதலில் செங்கமா, திருவண்ணாமலை என்ற இடங்களில் வெற்றி பெற்றனர்; இருந்தாலும் அவர்கள் முடிவில் தோற்கடிக்கப் பட்டனர். ஹைதர் தம்மிஷ்டப்படி கர்னாடக தேசத்தை பழித்ததுமன்றி, 1769-ம் வருஷத்தில் அவர் திடீரென்று தம் குதிரைப்படையுடன் சென்னைப்பட்டணத்திற்கு முன் வந்து தோன்றினர். அப்போது அங்குள்ள கவர்னருக்கும், மற்றவருக்கும் பேயடித்தது போல் ஆயிற்று. ஆகவே, அவர்கள் ஹைதருடன் சமாதானம் செய்துகொண்டார்கள். அதன்படி இருதிறத்தாரும் தாம் தாம் பிடித்த இடங்களை விட்டுவிடுவதாகவும், பிற்பாடு ஏதாவது சண்டை ஏற்படும் விஷயத்தில் ஒருவருக்கொருவர் உதவிசெய்வதாகவும் ஒப்புக் கொண்டார்கள். இந்த யுத்தம் ஹேஸ்டிங்ஸ் வங்காள கவர்னராயிருந்தபோது நடைபெற்றது.

11. இரண்டாவது மைசூர் யுத்தம்: ஒருவருக்கொருவர் உதவிசெய்வதாக மதராஸ் கவர்ன்மெண்டும், ஹைதரும் ஒப்புக்கொண்டது மிகவும் விபத்தாக முடிந்தது. ஏனெனில் ஹேஸ்டிங்ஸ் கவர்னர்-ஜெனராலாக வந்த சிறிது காலத்திற்கெல்லாம் மஹாராஷ்டிரர் மைசூரின் மீது படையெடுத்தார்கள். அப்போது ஹைதர், சென்னை யுடன்படிக்கையின்படி ஆங்கிலேயரைத் தனக்குதவி செய்யும்படி வேண்டினர். ஆனால் அவர்கள் உதவி செய்ய மறுத்துவிட்டார்கள். அதனால், ஹைதர் மஹாராஷ்டிரரால் தோற்கடிக்கப் பட்டார். ஆனால் அவர் இங்கிலீஷ்காரர் செய்த மோசத்தை மட்டும் ஒரு நாளும் மறக்கவேயில்லை.

12. இப்படி யிருக்கும்போது, மஹாராஷ்டிர தேசத்தில் யார் பிஷ்வாவாக வருவது என்ற விஷயமாகப் பெருங் குழப்பமுண்டாகவே, அவர்கள் மற்ற சங்கதிகளைப்பற்றி

கவனிக்கமுடியவில்லை. இதுதான் சமயமென்று ஹைதரும் க்ருஷ்ணா நதிக்குத் தெற்கேயுள்ள தேசத்தை யெல்லாம் ஜெயித்துத் தன் சேனாபலத்தை மிகவும் அதிகமாக்கிக் கொண்டார்.

13. இச்சமயத்தில் ஐரோப்பாவில் ஆங்கிலேயருக்கும் பிரஞ்சுக்காரருக்கும் யுத்தம் மறுபடி தொடங்கியது. ஆகவே ஆங்கிலேயர்கள் இந்தியாவிலுள்ள பிரஞ்சுஸ்தலங்களை ஒன்றின்பின் ஒன்றாகப் பிடிக்கத் தலைப்பட்டு விட்டனர்; கடைசியில் **மாகி** மட்டுந்தான் பிடிக்கப்படவேண்டி யிருந்தது. ஆனால் அதைச் சுற்றியுள்ள இடமெல்லாம் ஹைதரைச் சேர்ந்திருந்தன. ஹைதரும் இங்கிலீஷ்காரரை நம்புவதினால் பிரயோஜன மில்லையென்று கருதிப் பிரஞ்சுக்காரருடன் நேசங்கொள்ள விரும்பினார். ஆகையால் அவர் தம் அனுமதியின்றி ஆங்கிலச் சேனையைத் தன் நாட்டினுட் செலுத்தி மாகியைப் பிடிக்கலாகாது என மதராஸ் கவர்னருக்கு எச்சரிக்கை கொடுத்தார். ஆனால் அவர்கள் அதைக் கேட்காததினால் சண்டை ஆரம்பித்தது.

14. ஹைதரும், அவரது குமாரருமாகிய திப்புவும் ஆங்கிலச் சேனையை 1780-ம் வருஷத்தில் **போலிலூர்** என்ற இடத்தில் சிதறுண்டு போகும்படி தோற்கடித்தார்கள். ஆங்கிலேயரி னதிகாரம் தென்னிந்தியாவில் முடிந்து போகுந்தறுவாயி லிருந்தது. ஆனால் இச் செய்தி கல்கத்தாவிற் கெட்டியவுடன், வாரன் ஹேஸ்டிங்ஸ் தம்மால் சேகரிக்க முடிந்த சேனையை உடனே சென்னைக் கனுப்பினார். மைசூர் சேனை **பறங்கிப்பேட்டை, சோளிங்கர்** என்ற இடங்களில் **ஸர் ஐர் கூட்** என்பவரால் தோற்கடிக்கப்பட்டது. எனினும், ஹைதரை அடக்கமட்டும் இங்கிலீஷ் காரரால் முடியவில்லை. பிரஞ்சு போர்க் கப்பற்படையினுத

வியால் அவர் ஆங்கிலேயரின் வியாபாரத்திற்கு மிகுந்த நஷ்டத்தை உண்டாக்கியது மன்றி, அவர் தம் சேனைகளை யனுப்பிக் கர்னாடக ராஜ்யத்தைத் தம் மிஷ்டப்படி அழித்துவந்தார்.

15. 1782-ம் வருஷம் டிசம்பர்மாதம் ஹைதரிறக்கவே அவர் குமாரராகிய திப்பு பட்டத்திற்கு வந்தார். பிரஞ்சுக்காரருக்கும், ஆங்கிலேயருக்கும் ஐரோப்பாவில் சமாதானம் நடந்தபடியால், இந்தியாவில் அவர்களின் போராட்டம் நின்றுவிட்டது. ஆனால் திப்பு சுல்தான்மட்டும் சமாதானத்திற்கு வரவில்லை. இவர் பம்பாயிலிருந்து அனுப்பப்பட்ட ஆங்கிலச் சேனையைத் தோற்கடித்துக் கைதிகளைத் தம் தலை நகராகிய ஸ்ரீரங்கபட்டணத்திற்கனுப்பினார். பிறகு, இவர் மங்களூரை முற்றுகைபோட்டு அதை ஆங்கிலேயர் கையினின்றும் பிடித்தார். இப்போது சமாதானத்திற்கு வரும்படி ஆங்கிலேயர் வேண்டவே, திப்புவும் சம்மதித்தார். இச்சமாதான உடன்படிக்கை மங்களூரில் 1784-ம் வருஷம், மார்ச்சு மாதம் முடிவு பெற்றது. இதன்படி இருதிறத்தாரும் தாம்தாம் ஜெயித்த இடங்களைத் திருப்பிக்கொடுப்பதாகவும், கைதிகளை விடுதலை செய்வதாகவும் ஒப்புக்கொண்டனர்.


திப்பு சுல்தான்.

**16. பணக்கஷ்டத்தால் ஹேஸ்டிங்ஸ் செய்த உபாயங்கள்** — மஹாராஷ்டிர யுத்தத்தாலும், மைசூர் யுத்தங்களாலும் கம்பெனிக்கு மிகுந்த கடன் உண்டாயிற்று. ஆகையால் எவ்விதத்திலாவது பணம் சம்பாதிக்கவேண்டியிருந்தது. காசி ராஜாவாகிய பலவந்தராஜா வென்பவர் முன்பு இங்கிலீஷ்காரருக்கு அனுகூலமாக இருந்தபடியால், அலகாபாத் சமாதானத்தின்போது, அவருடைய நாடு அவருக்கு ஊர்ஜிதம் செய்துகொடுக்கப்பட்டது. இவரிறந்தபின் இவர் குமாரர் **செயத்ஸிங்** என்பவர் காசிராஜாவாக வந்தார். ஹேஸ்டிங்ஸ் இவரை வருஷத்திற்கு ஐந்து லக்ஷ ரூபாய் கப்பமாகச் செலுத்தும்படி கேட்டார். செயத்சிங் இதற்கு சம்மதித்து, இரண்டு வருஷம் கப்பஞ் செலுத்திவந்தார். ஆனால் மூன்றாவதுவருஷம் கையிலில்லாத நிமித்தம் பணங் கொடுக்க முடியாதென்றனர். ஹேஸ்டிங்ஸ் இதையங்கீகரிக்காது காசிக்குச்சென்று ராஜாவைப் பிடித்து பந்தப்படுத்தினார். இதைக் கேட்ட காசி ஜனங்களெல்லாம் கோபமிகுதியால் கலகஞ்செய்து நான்கு ஆங்கிலச் சேனைப் பிரிவுகளைத் துண்டித் தெறிந்துவிட்டு ஹேஸ்டிங்ஸை சூனார் கோட்டையில் முற்றுகை போட்டார்கள். இப்போது ஹேஸ்டிங்ஸ் மிகுந்த அபாய நிலையிலிருந்தனர்; ஆனால் அவர் வெகு சாமர்த்தியத்துடன் கோட்டையை விட்டுத் தப்பியோடினார். செயத்ஸிங் காராக்கிருஹத்தினின்று தப்பியோடிக் கலகக்காரருடன் சேர்ந்துகொண்டார். ஆனால் அவர் ஆங்கிலச் சேனையால் தோற்கடிக்கப்பட்டு பட்டத்தினின்றும் நீக்கப்பட்டனர். அவருக்குப் பதிலாக அவருடைய மருமகன் ராஜாவாக்கப்பட்டார். இக் கலகத்தின் பலனாகக் காசிமன்னன் செலுத்தவேண்டிய கப்பத்தொகை அதிகமாக்கப்பட்டது; கிரிமினல் வழக்குகளை விசாரிக்கும் அதிகாரம் அவரிடமிருந்து நீக்கப்பட்டது.

**17. அயோத்தி சீமாட்டிகளைத் தொந்தரவு செய்து வாங்கிய பணம்** — அயோத்தி நவாபு செலுத்தவேண்டிய கப்பத்தில், ஐந்து கோடிக்குமேல் பாக்கி நின்றுவிட்டது. ஆகையால் ஹேஸ்டிங்ஸ் அவரைக் குறைப்பணத்தை நிலுவையில்லாது செலுத்திவிடும்படி சொன்னார். அதற்கு அவர் தம்மிடத்தில் பணமில்லையென்றும், தம் தாயாரிடத்தும், பாட்டியாரிடத்து மிருக்கும் பொக்கிஷத்தையும், ஜாகீர்களையும் பெற்றாலன்றிக் கடனைச் செலுத்த முடியாதென்றும் சொன்னார். பிரான்ஸிஸ் முதலியவர்கள் எவ்வளவோ மன்றாடியும் ஹேஸ்டிங்ஸ் அந்தச் சீமாட்டிகளின் மீது செயத்ஸிங்குடன் சேர்ந்திருப்பதாகப் பொய்க் குற்றஞ் சார்ட்டி அவர்களின் காரியஸ்தர்களைக் காவலில்வைத்து அவர்களைப் பலவாறு துன்பப்படுத்தி முழுத்தொகையையும் பெற்றனர்.

**18. ஹேஸ்டிங்ஸ் விசாரணைக்குக் கொண்டு வரப்பட்டது**—வாரன் ஹேஸ்டிங்ஸ் தம் உத்தியோகத்தை 1785-ம் வருஷத்தில் ராஜிநாமாசெய்து இங்கிலாந்திற்குச் சென்றார். இவருக்கு முன்பே இவருடைய விரோதிகளாகிய பிரான்ஸிஸ் முதலியவர்கள் இங்கிலாந்திற்குச் சென்று, இவர் செய்த அக்கிரமங்களை நாடெங்கும் பகிரங்கப்படுத்தி விட்டார்கள். ஆகையால் இவர் இங்கிலாந்து போய்ச் சேர்ந்த நிமிஷமே இவரை ரோஹில்லா யுத்தத்திற்காகவும், செயத்ஸிங்கைக் கொள்ளை யடித்ததற்காகவும், அயோத்திச் சீமாட்டிகளைத் துன்பப்படுத்தி பணம் பெற்றதற்காகவும், விசாரணை செய்யவேண்டுமென்று தேசமெங்கும் ஒரே கூக்குரலாயிருந்தது. பர்க், பாக்ஸ், ஷெரிடன் (Burke, Fox, Sheridan) என்ற கீர்த்திபெற்ற ஆங்கிலப் பிரசங்கிகள் இவருக்கு விரோதமாக வழக்கை நடத்தினார்கள். இவ்வழக்கு

ஏழுவருஷகாலம் நடந்து முடிவில் இவர் கௌரவத்துடன் விடுதலை செய்யப்பட்டார். இந்த வழக்கில் இவருக்குப் பணச் செலவு ஏராளமாக ஆயிற்று.

19. **ஹேஸ்டிங்ஸ் காலத்தில் இந்தியாவில் ஆங்கில ராஜ்ஜியத்தின் விஸ்தீரணம்** — ஹேஸ்டிங்ஸ், நமது தேசத்தை விட்டேகும்போது ஆங்கிலேயருக்கு வட இந்தியாவில் வங்காளமும், பீகாரும், காசியும், தென்னிந்தியாவில் வட சர்க்காரும், மதராஸ், பம்பாய், சூரத் நகரங்களும் ஸால்ஸெட், பாஸீன் தீவுகளும் சொந்தமாயிருந்தன.



## 10. இந்தியாவில் ஆங்கில அரசாட்சியின் ஸ்தாபனம்

1. சென்ற பாடத்தில் அங்கில அரசாட்சி வங்காளத்தில் நிலை நிறுத்தப்பட்ட விஷயத்தைப் பற்றியும், அங்கு ஹேஸ்டிங்ஸ் செய்த சீர்திருத்தங்களைப் பற்றியும் படித்தீர்கள். இப் பாடத்தில் ஆங்கிலேய அரசாட்சி தென்னிந்தியாவில் பரவிய விஷயத்தைப் பற்றிக் கூறுவோம்:

2. **பிட் இந்தியா சட்டம்** — ஹேஸ்டிங்ஸ் ராஜிநாமாச் செய்து இங்கிலாந்திற்குச் சென்றபின், ஸர் ஜான் மக்பர்ஸன் என்பவர் சுமார் 20 மாதகாலம் கவர்னர்-ஜெனரலாக இருந்தார். மைசூர் மஹாராஷ்டிர யுத்தங்களாலும், செயத்சிங், அயோத்தி சீமாட்டி முதலியவர்களைச் செய்த அக்கிரமங்களாலும், இங்கிலாந்தில் கம்பெனியின்மேல் கெட்ட எண்ணம் உண்டாயிற்று. ஆகையால், பார்லியமெண்ட் அதன்

அதிகாரத்தை ஒடுக்கத் தீர்மானங்கொண்டது. இதற்காக இங்கிலாந்தில் பிரதான மந்திரியாகிய வில்லியம் பிட் என்பவர் 1784-ம் வருஷத்தில் ஓர் சட்டத்தை உண்டாக்கி வைத்தார். இச் சட்டத்தின்படி, கம்பெனி விஷயங்களை மேற் பார்ப்பதற்காக ஒரு சபை ஏற்படுத்தப்பட்டது. கவர்னர்-ஜெனரலுக்கு முன்னைவிட அதிக அதிகாரங் கொடுக்கப்பட்டது. இதனுடன், தங்களுத்தரவின்றிக் கம்பெனியார் சுதேசமன்னர்களுடன் உடன்படிக்கை செய்து கொள்ளவாவது, சண்டை செய்யவாவது கூடாதென்று பார்லியமெண்டார் உத்தரவு செய்தார்கள். இது முதற்கொண்டு, கம்பெனி உத்தியோகத்தி லில்லாத பெரிய பிரபுக்களே கவர்னர்-ஜெனரல்களாக நியமிக்கப்படவேண்டுமென்றும் தீர்மானிக்கப்பட்டது.

3. **லார்ட் காரன்வாலிஸ்** — இந்தத் தீர்மானத்தின்படி, காரன்வாலிஸ் என்ற ஒரு பெரிய பிரபு கவர்னர்-ஜெனரலாக நியமிக்கப்பட்டனர். இவர் நமது தேசத்திற்கு வருவதற்கு முன்பே யுத்த சாஸ்திரத்திலும், ராஜ்ஜிய விஷயங்களிலும் நிபுணரென்ற பெயர் பெற்றவர். இவர் நல்ல யோக்கியதையும், சுத்த மனதும் உடையவராகையால், அரசாட்சியிற் பல சீர்திருத்தங்களைக் கொண்டு வரமுயன்றார். இவர் கம்பெனி உத்தியோகஸ்தர்களின் சம்பளத்தை அதிகப்படுத்தி, அவர்கள் ஒரு வித வெகுமானமும் பெறக் கூடாதென்று உத்தரவு செய்தார். இவர் காலத்தில் ஒவ்வொரு ஜில்லாவிலும் ஐரோப்பிய ஜட்ஜிகள் நியமிக்கப்பட்டனர். இதனால் நியாயஞ்செலுத்துவது, வரிவசூல் செய்வதினின்று பிரிக்கப்பட்டது; ஆகையால் இரண்டு டிபார்ட்மெண்டுகளும் செவ்வனே அரசாளப்பட்டு வந்தன. இவர் காலத்திலும் ஸிவில் வழக்குகளில் கல்கத்தாவிலிருந்து

ஸதர் திவானி அதாலத் என்பதே உயர்வான அப்பீல் கோர்ட்டாக இருந்தது. கிரிமினல் வழக்குகளில் ஸதர் நிஜாமத் அதாலத் உயர்ந்த கோர்ட்டாயிருந்தது. இவர் காலத்தில் போலீஸ் டிபார்ட்மெண்டும் சீர்திருத்தஞ்செய்யப் பட்டது. தேக பாகங்களைத் துண்டித்தலென்ற கடுமையான தண்டனைகள் இக்காலத்திற் சட்டமூலமாய் நீக்கப்பட்டன. இவை மட்டுமன்றி, லார்ட் காரன்வாலிஸ் வரிவசூல் செய் வதிலும் சில முக்கியமான சீர்திருத்தங்கள் செய்தனர். இதுவரை வங்காளத்தில் கவர்ன்மெண்டார் வரிவசூல் செய் வதை ஜமீன்தார்களுக்குச் சிலகாலத்திற் கொருதரம் ஏலத் தில் விட்டு வந்தார்கள். இதன் பயனாக, ஜமீன்தார்கள், வந்தது லாபமெனக் கருதி ஜனங்களைப் பலவிதத்திலும் துன்பப்படுத்தித் தங்களாலியன்ற தொகையை வசூலித்து வந்தார்கள். லார்ட் காரன்வாலிஸ் இந்த ஜமீன்தார்களையே நிலங்களுக்குச் சொந்தக்காரராக்கிவிட்டார். இதனால் அவர் களுக்கு நிலம் வேறுகை போய்விடுமென்ற பயம் நீங்கி அவர்கள் குடிகளைத் துன்பப்படுத்தாமல் இருந்தார்கள். அக் காலம் முதற்கொண்டு வங்காளத்திலுள்ள ஜமீன்தார்கள் ஒரே தொகையைத்தான் நிலவரியாகச் செலுத்தி வருகிறார் கள். இதனால் ஜமீன்தார்களுக்கும், குடிகளுக்கும் மிகுந்த நலமுண்டாயிற்று. இவ் வேற்பாட்டிற்கு **சாஸ்வத நிலவரித் தீர்மானம்** என்று பெயர்.

4. **மூன்றாவது மைசூர் யுத்தம்** (1790-1792).— லார்ட் காரன்வாலிஸ் இந்தியாவிற்கு வரும்போது சுதேச மன்னர் களுடன் சண்டை செய்கிறதில்லை யென்று சங்கற்பஞ் செய்துகொண்டார். ஆனால் அவர் அவ்வெண்ணத்தைக் காப்பாற்ற முடியவில்லை. ஏனெனில், மைசூர் சுல்தானுக் கும் ஆங்கிலேயருக்கும் ஹேஸ்டிங்ஸ் காலத்தில் நடந்த

சண்டை முடிவாகத் தீர்ந்து போகவில்லை. இருவரி லெவ ராவது முற்றிலும் தோகற்டிக்கப்பட்டாலன்றி, தென் னிந்தியாவில் ஒருநாளும் சமாதான மேற்படாதுபோ லிருந் தது. திப்பு இருக்கிறவரையில், ஆங்கிலேயர் தென்னிந்தி யாவில் அதிகாரத்துட னிருப்பதைப் பார்க்கச் சகிக்கார். ஆகவே, இருவருக்கும் சண்டை நடந்தே தீரவேண்டும். திப்பு தம் தகப்பனுரைக் காட்டிலும் மிகவும் சாமர்த்தியம் பெற்றவர். இவர், தந்நாட்டிலுள்ள இந்துக்களின்மீது பிரிய மாயிருந்த போதிலும், மகம்மதிய மதத்தின்மீது இவருக்கு விருப்பம் அதிகம். இவருடைய பிரதமமந்திரி **பூர்ணையா** என்ற ஓர் இந்து; திப்பு இந்துக்களின் கோயில்களுக்கு மானியங்களெல்லாம் கொடுத்தார். இருந்தாலும், இவருக் குத் திடீரென்று மதத்துவேஷம் வந்துவிடுவதுண்டு. அச் சமயங்களில் இவர் தம் மதத்தைப் பலாத்கார மார்க்கங் களாலும் பரவச்செய்பவரா யிருந்தனர்.

5. திருவாங்கூர் அரசர் ஆங்கிலேயருக்கு அத்தியந்த நண்பர். அவ்விருவருக்கும் திப்புவைக் கண்டால் பயம். வெகு நாளாக திப்பு திருவனந்தபுர அரசரைத் தேசத் துரோகியென வெறுத்து வந்தார். இக்காரணம் பற்றி 1789-ம் வருஷத்தில் திப்புசுல்தான் திருவாங்கூர் ராஜ்யத் தின்மீது படையெடுத்தார். அத்தேச அரசர் ஆங்கிலேய ரைத் தமக்கு உதவி செய்யும்படி வேண்டினர். திருவனந்த புர அரசன் தோற்கடிக்கப்பட்டால் திப்புவை அடக்குவதற் குத் தென்னிந்தியாவில் யாருங் கிடையாதென்பது கம் பெனியாருக்கு நன்ருகத் தெரியும். ஆகையால் இச் சமயத் தைக் கைவிடாது, லார்ட் காரன்வாலிஸ் அவருக்கு உதவி செய்ய ஒப்புக்கொண்டார். ஆகையால் கவர்னர்-ஜெனரல் உடனே நிஜாமுடனும், மஹாராஷ்டிரர்களுடனும் திப்பு

வுக்கு விரோதமாக, மூவர்கள் சேர்ந்த உடன்படிக்கை யொன்று செய்துகொண்டார்.

6. மதருஸ் கவர்ன்மெண்டார் யுத்தத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் சரியாகச் செய்யமாட்டா ரென்று காரன் வாலிஸ் நினைத்துத் தாமே நேரில் சென்னைக்கு வந்தார். இவர் யுத்த சாஸ்திரத்தில் மிகத் தேர்ச்சி பெற்றவர். ஆகையால் இவர் யுத்த ஏற்பாடுகளைச் செவ்வனே முடித்து மைசூர் மேல் படையெடுத்துச் சென்றார். ஆங்கில சேனை கிழக்கு மலைத் தொடரைக் கடந்து, 1791-ம் வருஷத்தில் பெங்க ளூரைத் தாக்கிப் பிடித்து, தலைநகராகிய ஸ்ரீரங்கபட்டணத் திற்கு முன் வந்து சேர்ந்தது. ஆனால் மஹாராஷ்டிரர்கள் தங்கள் வாக்குத்தத்தப்படி வந்து சேரவில்லை; அதுவு மன்றி, ஆங்கிலேயருக்குத் தேவையான ஆகாராதிகளும் மிகவுங் குறைந்து போயின. ஆகையால் லார்ட் காரன் வாலிஸ் பீரங்கிகளைப் புதைத்துவிட்டுப் பெங்களூருக்குச் சேனையுடன் பின்னிட்டார்.

7. இவ்விடத்தில் காரன்வாலிஸ் சேனையைப் பலப்படுத் திக்கொண்டு, மறுபடியும் ஸ்ரீரங்கபட்டணத்தின்மீது படையெடுத்தார். மைசூர் சேனை காவிரிக்கரையின் மீது பள்ளங்கள் வெட்டி அவைகளுக்குப் பின் பலமான இடத்தி லிருந்தது. ஆகையால் ஸ்ரீரங்கபட்டணத்தை முற்றுகை போடுவதற்கு வேண்டிய ஏற்பாடுகளைக் காரன்வாலிஸ் செய்ய ஆரம்பித்தார். இச்சமயத்தில் திப்பு அதைரிய மடைந்து விட்டார்; ஆகவே, அவர் சமாதானத்திற்கு உடன்பட்டார். அதன்படி திப்பு நேயக் கட்சிக்காரருக்கு யுத்தச் செலவாக மூன்றுகோடி ரூபாயும், தம்மாகாணத்தில் பாதியுங் கொடுப்பதாக ஒப்புக்கொண்டார். இம் மாகா ணத்தை ஆங்கிலேயரும், நிஜாமும், மஹாராஷ்டிரர்களும்

தமக்குள் பங்கிட்டுக் கொண்டார்கள். இதில் ஆங்கிலேய ருக்குத் தற்காலத்தில் **மதுரை, சேலம், மலையாளம்** என்று சொல்லக்கூடிய மூன்று ஜில்லாக்கள் கிடைத்தன.



## 11. கம்பெனி அதிபயத்தின் ஸ்தாபனம்

### மார்க்குவிஸ் ஆவ் வெல்லெஸ்லி

1. சென்ற பாடத்தில் காரன்வாலிஸ் கவர்னர்-ஜெனரலாயிருந்த காலத்தில் நடந்த விஷயங்களைப் பற்றி வாசித்தீர்கள். அவர் நம் நாட்டை விட்டுப் போகுங் காலத்து ஆங்கில ராஜ்யத்திற்கு முன்னிருந்த பிரதேசங்களோடு மற்றும் சில ஜில்லாக்களையும் சேர்த்தார். இப்பாடத்தில் மைசூர், கர்னுடகம், தஞ்சாவூர், 'ஒப்புக்கொடுத்த' ஜில்லாக்கள் முதலிய இடங்களில் கம்பெனி அதிகாரம் ஸ்தாபனம் செய்யப்பட்ட விஷயத்தைப் பற்றிச் சொல்வோம்:

2. **ஸர் ஜான் ஷோர்**—காரன்வாலிஸ் 1793-ம் வருஷத்தில் இந்தியாவை விட்டுச் சென்றார். இவருக்குப் பின் இவருக்கு வாங்காளத்தில் மிகவும் உதவியாயிருந்த ஸர் ஜான் ஷோர் என்பவர் கவர்னர்-ஜெனரல் ஆக்கப்பட்டார். மைசூர் யுத்தத்தில் மிகுந்தசெலவானபடியால் ஷோர் சுதேச மன்னரின் விஷயங்களில் தலையிடுகிறதில்லை என்ற பிரதிக்கினை செய்துகொண்டார். ஆகவே, 1795-ம் வருஷத்தில் மஹாராஷ்டிரர்கள் நிஜாமைத் தாக்கியபோது அவர், கவர்னர்-ஜெனரலை உதவி செய்யும்படி எவ்வளவோ மன்றாடிக் கேட்டுக்கொண்டும் ஷோர் உதவி செய்ய மறுத்துவிட்டார். நிஜாம் கம்பெனியாரின் நேயரென்பதும், அவர் தோற்கடிக்

கப்பட்டால் மஹாராஷ்டிரர் மிகுந்த பலாட்டியராகி ஆங்கில அதிகாரத்திற்கே கூடிய சீக்கிரத்தில் ஆபத்து விளைவித்து விடுவார்களென்பதும் இவருக்கு நன்றாகத் தெரியும்; எனினும், இவர் தம் பிரதிக்கினையே பிரதானமென்றிருந்து விட்டனர். ஆகையால் நிஜாம் **கர்ட்லா** (Kurdla) என்னுமிடத்தில் தோற்கடிக்கப்பட்டார்.

இவர் கவர்னர் - ஜெனரலாயிருந்த காலத்தில் தான் அலகபாத் கம்பெனியின் கைவசம் வந்தது.

3. **வெல்லெஸ்லி பிரபு** — ஸர் ஜான் ஷோர் ஐந்து வருஷகாலம் கவர்னர்-ஜெனரலாக இருந்து 1798-ம் வருஷம் இங்கிலாந்திற்குச் சென்றார். இவருக்குப் பின் இந்திய கவர்னர்-ஜெனரல்களின் சிரேஷ்டராகிய **மார்க்விஸ் ஆவ் வெல்லெஸ்லி** என்பவர் கவர்னர்-ஜெனரலானார். சாத்வீகம் பொருந்திய ஸர் ஜான் ஷோர் இச்சமயம் இவ்வுயர்ந்த பதவியை விட்டு நீங்கியதும் அவருக்குப்பதிலாக சாமர்த்தியம்பெற்ற வெல்லெஸ்லி கவர்னர்-ஜெனரலாக வந்தது ஆங்கிலேயருக்கு மிகவும் நல்லதே. ஏனெனில், இச்சமயத்தில் கம்பெனி அதிகாரத்திற்குப் பல அபாயங்கள் நேர்ந்தன. அவ்வபாயங்களினின்றும் வெல்லெஸ்லி ஒருவரே ஆங்கில அதிகாரத்தைக் காப்பாற்றக் கூடியவர். இவர் நமது தேசத்திற்கு வரும்போது ஐரோப்பாவில் ஆங்கிலேயருக்கும், பிரெஞ்சுக்காரருக்கும் மிகப்பெரிய யுத்தம் நடந்துகொண்டிருந்தது. அக்காலத்தில் **நெப்போலியன்** என்ற யுத்த நிபுணர் சாதாரண போர்வீர னிலைமையிலிருந்து தமது சாமர்த்தியத்தால் பிரான்சின் சக்கரவர்த்தியானார். இதுவரையிலும் யுத்த விஷயங்களில் அவரினும் சாமர்த்தியம் பெற்றவர் வேறு எவருங் கிடையார். ஆகையால், அவரைக் கண்டால் ஐரோப்பா வெங்கும் மிகுந்த நடுக்கம் உண்டு. அவருக்கு

ஆங்கிலேயரை இந்தியாவினின்றுந் துரத்திப் பிரெஞ்சுக் காரரின் அதிகாரத்தை முன்போல நிலைநிறுத்தவேண்டு மென்கிற எண்ணம் மிகுந்திருந்தது. இச்சமயத்தில் நம் தேசத்தில் பிரெஞ்சுக்காரருக்கும் மிகுந்த செல்வாக்கிருந் தது. சுதேச மன்னரிற் பெரும்பாலர் ஆங்கிலேயருக்கு விரோதிகளாயிருந்தனர். அவர்கள் பிரெஞ்சு உத்தியோகஸ் தர்களைத் தம் சேனையில் அமர்த்திக்கொண்டு அதைப் பல மடங்காகப் பலமாக்கிக்கொண்டனர். இதற்கு உதாரண மாகத் திப்பு சுல்தானை எடுத்துக்கொள்வோம். இவருக்கு ஆங்கிலேயர் மீதிருந்த துவேஷம் சொல்லிமுடியாது. அவர் களை எப்படியாவது தொலைத்துவிட வேண்டுமென்பதே இவரது அவா. இதற்காக இவர் ஆங்கில அதிகாரத்தை இந்தியாவில் ஒழித்து விடும்பொருட்டு பிரெஞ்சுக் கவர்ன் மெண்டோடு பகிரங்கமாகச் சேர்ந்துகொண்டார். ஆகை யால், ஆங்கில அதிகாரத்தை நிலைநிறுத்தவேண்டுமானுல், திப்பு சுல்தானது இச்செய்கைகளை நிறுத்திவிடவேண்டி யது மிகவும் அவசிய மென்று வெல்லெஸ்லி கண்டு கொண்டார்.

4. **உபகார நியமன உடன்படிக்கைகள்** — இத் தீர் மானத்தின்படி சுதேச மன்னர்களின் விஷயத்தில் தலையிடு வதில்லை யென்ற கொள்கையை வெல்லெஸ்லி அடியோடு விட்டுவிட்டு, அவர்களைக் கம்பெனியோடு உடன்படிக் கைகள் செய்யுமாறு கட்டாயப்படுத்த நிச்சயித்தார். இவ் வுடன்படிக்கைகளுக்குத்தான் உபகார நியமன உடன் படிக்கை என்று பெயர். இவ்வுடம்படிக்கையின் முக்கிய அம் சங்கள் யாதெனில்: இந்தியாவில் கம்பெனியாரே இதன் தேசாதிபதியாக இருத்தல் வேண்டும்; சுதேச மன்னரெல் லாம் இவ்வேகாதிபத்தியத்தை அங்கீகரித்தல் வேண்டும்.

இதை அங்கீகரித்துக் கம்பெனியுடன் உடன்படிக்கைசெய்து கொண்ட ஒவ்வொரு சுதேச மன்னரும், வேறு சுதேச மன்னருடனாவது, ஆங்கிலேயர் தவிர இதர ஐரோப்பியருடனாவது ஏகாதிபதியாகிய கம்பெனியாரின் அனுமதியின்றி யுத்தஞ் செய்யவாவது, அல்லது வேறுவித சமாதானஞ் செய்தலாவது கூடாது. ஒவ்வொரு சுதேசமன்னருடைய சமஸ்தானத்திலும் ஓர் ஆங்கிலப் பிரதிநிதியும் (Resident), ஆங்கில சேனையின் ஒரு தொகுதியு மிருத்தல் வேண்டும். இவைகளின் செலவைச் சுதேச மன்னரே தம் வரியினின்று கொடுத்து வரவேண்டும். இதற்குப் பதிலாகக் கம்பெனியார் சுதேச மன்னரின் உள்நாட்டு விஷயங்களில் தலையிடாது அவர்களை வெளி நாட்டு அபாயங்களினின்று காத்தல்வேண்டும் என்பவைகளே. இவ்வித நிபந்தனைகளடங்கிய உடன்படிக்கையை இந்திய மன்னரில் ஒவ்வொருவரும் அங்கீகரிக்குமாறு செய்யவேண்டுமென வெல்லெஸ்லி தீர்மானஞ் செய்துகொண்டார்.

5. **நிஜாம்** — இவ்வித உபகார நியமன உடன்படிக்கையை அங்கீகரித்து முதல் முதலில் கையொப்பமிட்டவர், நிஜாமே. கர்ட்லா என்னுமிடத்தில் அவர் தோல்வியடைந்த பின் தகுந்த உதவி கிடைக்காதாவென்று ஏங்கியிருந்தார். ஆகையால், அவர் இந்த உடன்படிக்கையை வெகு ஆவலுடன் ஏற்றுக்கொண்டார். இதன் பயனாக, ஆங்கிலேயருக்குத் தென்னிந்தியாவில் பல மதிகரித்துவிட்டது. இது அவர்களுக்கு மிகவும் சாதகமாகவே இருந்தது.

6. **நான்காவது மைசூர் யுத்தம்** — மூன்றாவது மைசூர் யுத்தத்தில் திப்பு சுல்தான் தோல்வி யடைந்து ஆங்கிலேயருக்கு மதுரை, சேலம், மலையாளம் முதலிய ஜில்லாக்களைக் கொடுக்கவேண்டி வந்ததென்று நீங்கள் படித்தீர்களல்லவா?

ஆனால், திப்புவுக்கு மட்டும் ஆங்கிலேயரிட மிருந்த துவேஷமும் வெறுப்புமட்டும் ஒரு சிறிதுங் குறையவில்லை. ஆகையால் இவர் மிகுந்த ஊக்கத்துடன் ஆங்கிலேயரை இந்தியாவினின்று துரத்திவிட வேண்டிப் பிரெஞ்சுக்கார ருடன் இரகசியமாக ஏற்பாடுகள் செய்துவந்தார். இதற் கேற்ப இச் சமயத்தில்தான் பிரெஞ்சுக்காரரின் பயம் இந்தி யாவில் மிகவும் அதிகமாயிருந்தது. நெப்போலியன் என்ற பிரெஞ்சு வீரர் நம் தேசத்தின்மீது படையெடுக்கும் பொருட்டு எகிப்து வரைக்கும் வந்துவிட்டார். திப்புசுல் தானுக்கும் அவருக்கும் ஆங்கிலேயரை இந்தியாவினின்று துரத்திவிடும் விஷயத்தைப்பற்றிக் கடிதப் போக்கு வரத் துகள் இருந்து வந்தன. ஸ்ரீரங்க பட்டணத்திலும் அனேக பிரஞ்சுக்காரர் வந்து சேர்ந்து மிகுந்த ஆரவாரஞ் செய்து வந்தனர். இந்தப் பிரெஞ்சு அபாயத்தைத் தீர்க்கவேண் டியே வெல்லெஸ்லி 'உபகார நியமன உடன்படிக்கைகள்' என்ற ஏற்பாட்டை உண்டுபண்ணினர். சாமர்த்தியமாக நிஜாமைத் தம் பக்கம் சேர்த்துக் கொண்டவுடன், வெல் லெஸ்லி, திப்புவையும் பிரெஞ்சுக்காரரின் சிநேகிதத்தை யொழித்து ஆங்கிலேயருடன் உடன்படிக்கை செய்யுமாறு வேண்டினர். அவர் அதை மறுக்கவே வெல்லெஸ்லி அவர் மீது யுத்தங் கூறினர். இச்சமயத்தில் நிஜாமும், மஹா ராஷ்டிரரும் சுல்தானுக்கு விரோதமாக, ஆங்கிலேயருடன் சேர்ந்துகொள்ளவே அவர், ஒருவராகவே இம் மூவருட னும் சண்டை செய்யவேண்டியிருந்தது. இதன் பயனை மஹாராஷ்டிரர் பின்பு அனுபவித்தார்கள்.

7. யுத்தத்தை நடத்தி வைக்குமாறு வெல்லெஸ்லி தாமே நேராக சென்னைக்கு 1798-ம் வருஷம், டிஸம்பர் மாதம் வந்து சேர்ந்தார். சென்னையிலிருந்து ஒரு பலத்த

சேனை **ஜெனரல் ஹாரிஸ்** என்பவரின் கீழ் அனுப்பப்பட்டது. அதே சமயத்தில் மற்றொரு சேனை பம்பாயிலிருந்து **ஜெனரல் ஸ்டூவர்ட்** என்பவரின் கீழ் குடகு மார்க்கமாய் ஸ்ரீரங்கபட்டணத்தின்மீது படையெடுத்து வரும்படி ஏற்பாடு செய்யப்பட்டது. முதல் முதலில் திப்பு பம்பாயினின்று வருஞ் சேனையைத் தடுக்க முயன்றார். அது முடியாமற் போகவே, அவர் சென்னையினின்று வருஞ் சேனையை, மால்வல்லி யென்னுமிடத்தில் தாக்கினார். இதிலும் இவர் தோற்கடிக்கப்படவே இவர் தம் சேனையுடன் ஸ்ரீரங்கபட்டணத்திற்கு விரைவாகப் பின் நோக்கிச் சென்றுவிட்டார். அவர் கோட்டை ஒருநாளும் பிடிபடாதென்று அவருக்கு நம்பிக்கை இருந்தது. எனினும் 1799-ம் வருஷம் மே மாதத்தில் ஸ்ரீரங்கபட்டணக் கோட்டை ஆங்கில சேனையால் தாக்கிப் பிடிக்கப்பட்டது. கடைசி நிமிஷம் வரை, திப்புவும், வீராதிவீரனென்று சொல்லும்படி, சாதாரண போர்வீரர்களின் மத்தியில் நின்று எதிரியுடன் வீராவேசத்துடன் போர்புரிந்து மாண்டார். தைரியத்திலும், சாமர்த்தியத்திலும், பிடிவாதத்திலும் ஹைதரையும், திப்புவையும் போல, வேறு இரண்டு அரசர்களைக் காண்பதரிது. திப்பு ஒவ்வொரு சமயத்தில் மதத் துவேஷியாயிருந்தும், தம் குடிகளின்மீது பாரபக்ஷமின்றி அன்பாயிருந்தார். அவர் பிரதான மந்திரி **பூர்ணையா** என்ற ஒரு பிராமணரேயாவர். அவர்தான் இந்த யுத்தத்தில் ஆங்கிலேயருக்கு மிகுந்த சாதகமாயிருந்தவர். சுல்தான் காலத்தில் இந்து தேவாலயங்களுக்கும் மானியங்கள் கொடுக்கப்பட்டன. ஆங்கிலேயர், திப்புவைவிட ராஜதந்திரத்தில் மிகவும் சாமர்த்தியமுள்ளவர். அவர்கள் மஹாராஷ்டிரரையும், நிஜாமையும் தம் பக்கம் சேர்த்துக் கொண்டதின் பயனாகத்தான் அவர்களுக்கு இவ்வளவு சுலபமாக, வெற்றி கிடைத்தது.

8. **மைசூர் அரசாங்க ஏற்பாடு** — திப்பு வம்சத்தில் பிறந்த ஒருவரும் மைசூர்ப் பட்டத்திற்கு வரக் கூடாதென்று நிச்சயித்து, ஏற்கெனவே அரசராயிருந்த **கிருஷ்ண ராஜ உடையார்** என்ற ஹிந்து வமிசத்துச் சிறு குழந்தையை அரசனாக்கி, அவர் பருவமடையு மட்டும் தேசத்தை யாண்டு வரும்படி பிரதிநிதித் துரைத்தன மொன்றை ஏற்பாடு செய்தார்கள். பூர்ணையா திவானாக்கப்பட்டார். திப்பு ஜெயித்த நாட்டை ஆங்கிலேயரும் நிஜாமும், பங்கிட்டுக்கொண்டார்கள். ஆங்கிலேயருக்குக் கோயம்புத்தூரும், மேற்குக் கடற்கரை யோரத்திலிருக்கும் மற்ற ஜில்லாக்களும் கிடைத்தன; நிஜாமுக்குக் கடப்பை கர்னூல் முதலிய ஜில்லாக்கள் கிடைத்தன. திப்புவின் குமாரர்கள் வேலூர் கோட்டையில் கைது செய்து வைக்கப்பட்டார்கள். இந்த யுத்தத்தின் பயனாகத் தென்னிந்தியாவில் ஆங்கில அதிகாரம் மிகுந்த உன்னத நிலையை அடைந்தது.

9. **தக்ஷிணத்திலும் சர்நாடகத்திலும் வெல்லெஸ்லி செய்த ஏற்பாடுகள்** — மைசூர் யுத்தம் முடிவு பெற்றவுடன், 1800-ம் வருஷத்தில் நிஜாமோடு மற்றோர் உடன்படிக்கை செய்யப்பட்டது. அதன்படி, ஐதராபாத்திலுள்ள ஆங்கிலச் சேனை முன்னைவிட அதிகரிக்கப்பட்டது. இச் சேனையைக் காப்பாற்றுஞ் செலவிற்காக, நிஜாம், மைசூர் ராஜ்யத்தினின்றும் நான்காவது யுத்தத்திற்குப் பின் பெற்ற **பல்லாரி, அனந்தபூர், கர்னூல், கடப்பை** முதலிய நான்கு ஜில்லாக்களையும் ஆங்கிலேயருக்கு அளித்துவிட்டார். ஆகவே, இந்த நான்கு ஜில்லாக்களுக்கும் 'அளிக்கப்பட்ட ஜில்லாக்கள்,' அல்லது 'ஒப்புக்கொடுக்கப்பட்ட ஜில்லாக்கள்' என்ற பெயர் வழங்கிவருகிறது.

10. **கர்னுடகம்** — தென்னிந்தியாவில் ஆங்கில அதிகாரம் பெருகப் பெருகக் கர்னுடக நவாபின் அதிகாரம் நிலையற்றுப்போகும் நிலையில் இருந்தது. மகம்மது அலி 1795-ம் வருஷத்தில் இறந்தார். அவருக்குப் பின் அவரது குமாரராகிய உம்தத்-அல்-அம்ரா என்பவர் நவாபாக வந்தார். அவருடைய தகப்பனார் காலம் முதற்கொண்டே கர்னுடகம் சரியாக அரசாளப் படவில்லை. காரன்வாலிஸ் பிரபுவும், ஸர் ஜான் ஷோரும் எவ்விதத்திலாவது கர்னுடகத்தைச் சேர்த்துவிட வேண்டுமென்கிற எண்ணங்கொண்டிருந்தார்கள். மைசூர் யுத்த நெருக்கடி அதிகரிக்கவே, கர்னுடகத்தின் ராஜாங்க விஷயங்கள் யாவையும் கம்பெனியாரே பார்த்து வந்தார்கள். இந்த யுத்தம் முடிவானவுடனே, கர்னுடக நவாபு, ஆங்கிலேயருக்கு விரோதமாகத் திப்புவுக்குக் கடிதங்கள் எழுதி யிருப்பதாகத் திடீரென்று கண்டுகொண்டார்கள். அவர்கள் இவ்விதம் ஆங்கிலேயர் தம்மை அதிகாரத்தினின்று நீக்கிவைத்திருப்பதினுல் நவாப் அவ்விதம் செய்திருக்கலாம். இருந்தாலும், கம்பெனியாருக்குச் சரியான சாக்கு ஏற்பட்டது. இதற்கேற்ப, 1801-ம் வருஷத்தில் நவாபும் இறந்தார். உடனே கவர்னர்-ஜெனரல், நவாபின் குமாரரை அழைத்து, தேசத்தை ஆங்கிலேயருக்கு விட்டுவிட்டால், அவருக்கு நவாபு என்கிற பட்டமும், உபகாரச் சம்பளமும் கொடுப்பதாகச் சொன்னார். இதை இவர் மிகுந்த கோபத்துடன் மறுக்கவே, இவர் பட்டத்தினின்று நீக்கப்பட்டு, பட்டமும், ஜீவனும்சமும் நவாப் வம்சத்தைச் சார்ந்த அஜிம்-அட்-டெளலா என்பவருக்குக் கொடுக்கப்பட்டன. அதனை அவர், வந்தது லாபமென அங்கீகரித்துக்கொண்டார். இவ்விதமாகக் கர்னுடக ராஜ்யம் முடிந்து ஆங்கிலேயர் கைவசம் சென்றது.

11. **தஞ்சாவூர்**—இதே சமயத்தில்தான் தஞ்சாவூரும் ஆங்கிலேயர்கைவசம் வந்தது. சிவாஜி காலமுதற்கொண்டு இச் சிறுராஜ்யம் மஹாராஷ்டிர அரசர்களால் ஆளப் பட்டு வந்தது. வெல்லெஸ்லி கவர்னர்-ஜெனரலாக வந்தவுடன், இரண்டுபேர்கள், பட்டத்தின் நிமித்தம் தர்க்கித்துக்கொண் டிருந்தார்கள். இவ் விருவரும் கவர்னர்-ஜெனரலின் மத்தி யஸ்தத்திற்குப் போகவே, அவர் இருவரையும் நீக்கிவிட்டுத் தஞ்சாவூரைக் கம்பெனி ராஜ்யத்துடன் சேர்த்துக்கொண் டார். இவ்விதமாகக் கம்பெனியாரே தென்னிந்தியாவின் ஏகாதிபத்தியத்தை யடைந்தார்கள்.

12. **அயோத்தி நவாபுடன் உடன்படிக்கை**— தென் னிந்திய விவகாரங்களை ஒருவிதமாகத் தீர்த்துவிட்டு, வெல் லெஸ்லி வடஇந்தியாவின் விஷயங்களைக் கவனிக்க ஆரம் பித்தார். இவர் கல்கத்தாவிற்கு வந்தவுடன், அயோத்தி நவாபுடன் தகுந்த உடன்படிக்கை செய்ய நிச்சயித்தார். ஸர் ஜான் ஷோரால் நியமிக்கப்பட்ட நவாப் தம் நாட்டை அரசாளச் சக்தியற்றவராயிருந்தனர். அதுவுமன்றி, அவர் தம் ராஜ்யத்திலிருக்கும் ஆங்கிலச் சேனையின் செலவுப் பணத்தைச் சரிவரக் கொடுத்து வரவில்லை. இதனுடன் இச் சமயத்தில் ஆப்கானியர்கள் இந்தியாவின்மீது வடமேற்குப் பிரதேச மார்க்கமாய்ப் படையெடுக்கப் போகிறார்க ளென்ற பயம் மிகுந்திருந்தது. ஆகையால் அயோத்தி ராஜ்யத்தில் தகுந்த ஆங்கிலச் சேனை வைத்திருக்க வேண்டியது மிகுந்த அவசியமாயிற்று. இதற்காக, கவர்னர்-ஜெனரல் நவாபை, கோரா, ரோஹில்கண்ட் என்ற இருமாகாணங்களடங்கிய தம் ராஜ்யத்தின் பாதியைக் கொடுத்துவிடும்படிக் கட்டாயம் செய்தார். இது முதற்கொண்டு அயோத்தி ராஜ்யத்தின் சேனைகளெல்லாம் ஆங்கிலேயர் கைவசமிருந்தது.

ROJA MUTHIAH
47, HOSPITAL STREET
KOTTAIYUR-623 106

## இரண்டாவது மஹாராஷ்டிர யுத்தம்

13. மேற்படி உடன்படிக்கைகள் முடிவானவுடன், ஆங்கிலேயரின் அதிகாரம் மேற்கே, மலையாளம்; கிழக்கில், கர்னாடகம்; வடசர்க்கார் ஜில்லாக்கள்; வடக்கே, வங்காளம், தென் அயோத்தி முதலிய இடங்களில் பரவி நன்றாக வேரூன்றி விட்டது. உபகார நியமன உடன்படிக்கைகளின்படி ஐதராபாத்தும், அயோத்தியும் இவர்களுக்குக் கீழ்ப்படிந்தவைக ளாய்விட்டன; மைசூரிலோ, இவர்கள் வைத்ததே சட்டமாயிருந்தது. படத்தைப் பாருங்கள். இச்சமயத்தில், இந்தியாவில் இவர்களை எதிர்க்கக் கூடியவர் மஹாராஷ்டிரர் ஒருவரே. ஆங்கிலேய அதிகாரம் இந்தியாவில் அபாயமற்றிருக்க வேண்டுமானால், மஹாராஷ்டிரரையும் கம்பெனியாருக்குக் கீழ்ப்படியச் செய்ய வேண்டிய தவசியமாயிற்று.

14. இதற்கேற்ப, ஆங்கிலேயருக்குச் சரியான சமயம் வாய்த்தது. 1800-ம் வருஷத்தில் அரசாங்க நிபுணராகிய நானபர்னவிஸ் இறந்தார். அவரிருக்கும் வரை, ஹோல்கார், ஸிந்தியா, கெய்க்வார், பான்ஸ்லே முதலிய மஹாராஷ்டிரத் தலைவர் அனைவரும் ஒன்று சேர்ந்து, மஹாராஷ்டிர அதிகாரத்தையே முன்னேற்ற மடையச் செய்வதில் விருப்பங் கொண்டவர்களா யிருந்தார்கள். இவர்கள் ஒன்று சேர்ந்திருந்தபடியால்தான், ஸர் ஜான் ஷோர் காலத்தில், நிஜாம் முற்றிலும் தோற்கடிக்கப் பட்டார். ஆனால், அவரிறந்த பின் இவர்களுக்குள் சண்டைகள் உண்டாயின. இக் கட்சிகளில் ஹோல்கார் ஒரு பக்கமும் ஸிந்தியா, பீஷ்வாவாகிய இரண்டாவது பாஜிராவ் என்பவர்கள் மற்றொரு பக்கமும் நின்றார்கள். இப் பீஷ்வா

ரகோபாவின் குமாரர். ரகோபாவின் குடும்பத்தின்மீது மஹாராஷ்டிரர் யாவருக்கும் வெறுப்பு மிகுந்திருந்தது. ஹோல்காரும், இவரைப் பீஷ்வா பட்டத்தினின்றும் நீக்கி விட எண்ணங்கொண்டார். ஆகவே, மஹாராஷ்டிர தேசமெங்கும் பெருத்த சண்டைகள் உண்டாய்விட்டன. இச் சண்டையில், முதலில் ஹோல்கார் தோற்கடிக்கப்பட, அவரது பட்டணமாகிய இந்தூரும் கொள்ளையடிக்கப் பட்டது. ஆனல், அவர் கூடிய சீக்கிரத்தில் தம் சேனையைத் திரும்பச் சேகரித்துக்கொண்டு, 1802-ம் வருஷத்தில் ஸிந்தியாவையும், பீஷ்வாவையும் புனு நகரினருகில் தோற்கடித்தார். உடனே, பீஷ்வா கம்பெனி ராஜ்யத்திற்குத் தப்பி யோடினர். இவர் வரவை ஆங்கிலேயர் மிக ஆவ லுடன் எதிர்பார்த் திருந்தமையால், இவரை அன்புடன் வரவேற்று உபசரித்தார்கள். பீஷ்வா ஆங்கிலேயர் கைவசம் நன்றுக அகப்பட்டுக் கொண்டார். இவருக்கும், ஆங்கிலேயருக்கும் பஸ்ஸீன் என்னுமிடத்தில் 1802-ம் வருஷம், டிஸம்பர்மீ 31-ந்தேதி யன்று ஓர் உடன்படிக்கை நடந்தது. இந்தப் பஸ்ஸீன் உடன்படிக்கை நடந்தவுடனே மஹாராஷ்டிர சங்கமுழுவதும் உபகார நியமன உடன் படிக்கையின் கீழ் வந்துவிட்டது. இதோடு, மஹாராஷ்டிர ராஜ்யத்தின் சுதந்தரம் ஒழிந்ததெனச் சொல்லலாம். மஹாராஷ்டிர தேசத்திற்குள் பீஷ்வாதான் மிகவு முயர்ந்த அதிகாரி. இவரே ஆங்கிலேயர் கைவசம் வந்து அவர் களுடன் உபகாரநியமன உடன்படிக்கை யொன்று செய்து கொண்டபோது, ஆங்கிலேயர் இவர் பெயரைச் சொல்லிக் கொண்டு மற்றவர்களை யெல்லாம் தமக்குக் கீழ்ப்படியும் படி செய்வது எளிதல்லவா? ஆயினும் இச் செய்தியைக் கேட்டவுடன் மஹாராஷ்டிர தேசமெங்கும் திடீரென்று ஒரே கோபம் கிளம்பிற்று.

15. தாம் செய்த உடன்படிக்கையின்படி, பாஜிராவ் கீழ்கண்ட நிபந்தனைகளுக் குட்பட்டார். அந் நிபந்தனைகளாவன:—(1) புனுவில் இவர் ஓர் ஆங்கிலச் சேனைப் பிரிவொன்றை வைத்துக்கொள்ள வேண்டியது; அதன் செலவிற்காக இவர் வருஷம் 26 லக்ஷ ரூபாய்கள் தம் வருமானத்திலிருந்து எடுத்து வைக்க வேண்டியது. (2) இவருக்கும் நிஜாமுக்கு மேற்படும் சண்டை சச்சரவுகளில் கம்பெனியார் மத்தியஸ்தர்களா யிருப்பார்கள். அவர்கள் சொல்லும் தீர்ப்பை இவர் அங்கீகரிக்க வேண்டியது. (நிஜாமின் ஆதரவு இங்கிலீஷ்காரருக்குத் தென்னிந்தியாவில் மிகவு மவசியமாக இருந்தபடியால் இந்த நிபந்தனை இங்கு சேர்க்கப்பட்டது). (3) ஆங்கிலேயரின் சம்மதமின்றி இவர் வேறு ஐரோப்பியர்களைத் தம் உத்தியோகத்தில் வைத்துக்கொள்ளக் கூடாது என்பவைகளே. இச்சமாதானம் முடிந்தவுடன், கவர்னர்-ஜெனரலின் தம்பியாகிய ஜெனரல் ஆர்தர் வெல்லெஸ்லி என்பவர், இவரை ஒரு சேனையுடன் புனுவுக்கு அழைத்துச் சென்று மறுபடியும் பீஷ்வாவாக்கினுர்.

16. இச் செய்திகளைக் கேட்டவுடன் ஸிந்தியாவிற்கும், ரகோஜி பான்ஸ்லேக்கும் வந்த கோபத்திற்கு அளவில்லை. பீஷ்வா செய்த காரியத்தால் நேரிடும் பயன்களை அவர்கள் நன்கறிந்துகொண்டார்கள். தேசமெங்கும் பரவிவரும் உபகார நியமன உடன்படிக்கை யென்ற விஷம் தம்மையும் கூடிய சீக்கிரத்தில் விழுங்கி, சுதந்தரத்தைப் பிடுங்கி ஆங்கிலேயருக்குக் கீழ்ப்பட்டவர்களாகச் செய்துவிடும் என்று இவர்கள் மிகவும் பயந்தார்கள். ஆகையால் இவர்களிருவரும் மஹாராஷ்டிரரின் குடுமியை இங்கிலீஷ்காரரினின்று விடுவித்துக் கொள்ளுமாறு யுத்தஞ்செய்ய வேண்டிய ஏற்பாடு

களைச் செய்தனர். ஹோல்கார் மட்டும் இவர்களுடன் சேர வில்லை; அதன் பயனை அவர் பின்பு அனுபவித்தார். சண்டை வரப்போகிற சங்கதிமட்டும் ஆங்கிலேயருக்கு நன்றாகத் தெரியும். அதற்காக, அவர்கள் வேண்டிய ஏற்பாடுகள் சரிவரச் செய்தார்கள். ஒரேசமயத்தில் மஹாராஷ்டிரதேசம் நான்கு பக்கமும் தாக்கப்பட்டது. ஜெனரல் ஸர் ஆர்தர் வெல்லெஸ்லி தக்ஷிணத்தினின்றும், ஜெனரல் லேக் என்பவர் வட இந்தியாப் பக்கத்தினின்றும், படையெடுத்து வந்தார்கள். ஆகையால் மஹாராஷ்டிரர், அவ் விருவருக்கு ஒரே சமயத்தில் ஈடு கொடுக்க முடியாமற் போயிற்று. வெல்லெஸ்லி **ஆமத்நகர்** என்னும் பட்டணத்தைப் பிடித்து **அஸ்ஸே** என்னுமிடத்தில் மஹாராஷ்டிர சேனையைத் தோற்கடித்தார். இதற்கடுத்தாற்போல், வெல்லெஸ்லி ஆர்காம் என்னுமிடத்தில் மற்றொரு வெற்றியும் பெற்றார். இதைப் போலவே வடக்கேயும் ஜெனரல் லேக் பல ஜெயங்களைப் பெற்றனர். இவர் **அலிகார்** கோட்டையைப் பிடித்து, மஹாராஷ்டிர சேனையை டில்லிக் கருகே முறியடித்தார். இதையொட்டி, **ஆக்ரா** கோட்டை ஆங்கிலேயரால் பிடிக்கப்பட்டது. மஹாராஷ்டிர சேனை மற்றொரு முறை **லாஸ்வாரி** என்னுமிடத்தில் துரத்தியடிக்கப்பட்டது. இவ்வெற்றிகளின்பயனாக ப்ரோச், ஒரிஸ்ஸா, பண்டல்கண்ட் முதலிய பிரதேசங்கள் ஆங்கிலேயரால் சேர்த்துக்கொள்ளப்பட்டன.

17. இனிமேல், யுத்தத்தை நடத்துவதில் பிரயோஜனமில்லை யென்று பான்ஸ்லேயும், ஸிந்தியாவும் சமாதானஞ் செய்துகொள்ளத் தீர்மானித்தனர். 1803-ம் வருஷம் டிஸம்பர் மாதம் பான்ஸ்லே **தேவகாம்** என்னு மிடத்தில் ஆங்கிலேயருடன் சமாதானஞ் செய்துகொண்டார். இவ்வுடன்படிக்கைப்படி, அவர், ஒரிஸ்ஸாவைக் கம்பெனிக்குக்

கொடுத்து விடுவதாகவும் நிஜாமிட மிருந்து இனிக் கப்பம் வாங்குவதில்லை யென்றும், ஆங்கிலேயரின் சம்மதமின்றி வேறு ஐரோப்பியர்களை உத்தியோகத்தில் வைத்துக்கொள்வதில்லை யென்றும், ஓர் இங்கிலீஷ் ரெஸிடெண்டை ஏற்றுக் கொள்வதாகவும் சம்மதித்தார். இதே மாதத்தில், ஸிந்தியாவும் **ஸிராஜி அஞ்சேங்காம்** என்னுமிடத்தில் சமாதானஞ் செய்துகொண்டனர். இதன்படி, கங்கை-யமுனை நதிகளுக்கு மத்தியிலுள்ள நாட்டை ஆங்கிலேயருக்குப் ப்ரோச் ஆமத் நகருடன் கொடுத்து விடுவதாகவும், கம்பெனி நேயர்களாகிய பாதுஷா, நிஜாம் முதலியவர்களிடமிருந்து பணம் வசூல் செய்வதில்லை யென்றும் இவர் ஒப்புக்கொண்டார். சிறிது காலங்கழித்து இவர் மற்ற மன்னர்களைப்போல் ஆங்கிலச் சேனை யொன்றைத் தம் ராஜ்யத்திற்குள் தம் செலவிலே வைத்துக்கொண்டார். ஆகவே, இவ்விரு மஹாராஷ்டிர மன்னரும் ஆங்கிலேயரின்வசம் நன்கு அகப்பட்டுக் கொண்டனர். சமாதானம் முடிவு பெற்றவுடன் நிஜாமுக்கும், பீஷ்வாவுக்கும் சில ஸ்தலங்கள் இனுமாகக் கொடுக்கப்பட்டன.

18. **மூன்றுவது மஹாராஷ்டிர யுத்தம்:—** பீஷ்வாவானவர் தம் தேசத்தோருக்கு விரோதமாக ஆங்கிலேயரின் உதவியை நாடின நிமிஷமே, மஹாராஷ்டிரரின் அதிகாரம் நிலைகுலைந்தது. இவரைத் தவிர, மற்ற நால்வரும், (ஹோல்கார், ஸிந்தியா, பான்ஸ்லே, கெய்க்வார்) ஒன்று சேர்ந்திருந்தாலும் ஒருவேளை ஆங்கிலேயரைச் சிரமப் பட்டாவது தோற்கடித்திருக்கலாம். 1803-ம் ௵ கெய்க்வார் ஆங்கிலேயருடன் சமாதானஞ் செய்துகொண்டார். ஹோல்கார்தான், இந் நால்வரில் மிகவும் பலிஷ்டர். அவர் நாம் முன் சொன்னவாறு, இரண்டாவது மஹாராஷ்டிர யுத்தம் நடக்

கும்போது தனித்து நின்றுவிட்டார். இப்போது வெற்றி யடைந்த ஆங்கிலேயர் தம்மைச் சும்மாவிட்டுவிடமாட்டார்க ளென்பது இவருக்கு இப்போது நன்ருகத் தெரியவந்தது. இவரது அதிகாரத்தையும் ஒரு விதம் ஒடுக்க நினைத்து, கவர்னர்-ஜெனரல் இவரைக் கம்பெனியுடன் உடன்படிக்கை செய்துகொள்ளுமாறு வற்புறுத்திஞர். இவர் மறுக்கவே, சண்டை யுண்டாயிற்று. இதற்குத்தான் மூன்ருவது மஹாராஷ்டிர யுத்தமென்று பெயர்.

19. மான்ஸன் என்பவர், இங்கிலீஷ் சேனையோடு மாளவ தேசத்தின்மீது படை யெடுத்தார். அவர் அங்குச் சிறிது தூரஞ் சென்றவுடன், ஹோல்காரின் சேனையோடு சண்டைசெய்ய முடியவில்லை. ஹோல்கார் இவரோடு எதிர்த்துப் போர் செய்யாது, இவர் செல்லும் வழியெல்லாம், ஆகாராதிகள் கிடைக்காமற் போகும் பொருட்டு நாசப் படுத்திவிட்டார். மான்ஸனுக்கு இன்னது செய்வதென்பது தெரியவில்லை. ஆகாராதிகள் கிடையா. மழைக்காலமோ ஆரம்பித்து விட்டது; சேனை யெங்கும் வியாதி பரவலாயிற்று. ஆகையால், அவர் பீரங்கிகளைப் புதைத்துவிட்டுப் பின்னேக்கிச் செல்ல ஆரம்பித்தார். இவர் ஆக்ரா நகர் வந்து சேருமுன் இவராட்களில் பலரிறந்தனர்; மீதியிருந்தவரும், சொல்ல முடியாத துன்பத்திற் குள்ளாக வேண்டியதாயிற்று.

ஆனல், இது முதற்கொண்டு ஹோல்காருக்கு வெற்றி கிடைப்பது துர்லபமாகிவிட்டது. அவர் டில்லிக்கோட்டையைப் பிடிப்பதற்குத் தம்மா லியன்றவரை முயன்றும் முடியாமற் போயிற்று. இது நடந்த சிறிது காலத்திற்கெல்லாம், ஆங்கிலேயர் டிக் என்னுமிடத்தில் வெற்றிபெற்று,

அவ்விடத்திலுள்ள கோட்டையையும் கைப்பற்றினார்கள். ஆனால், அவர்களால் பரதபுரி என்ற பெயர் பெற்ற புராதனக் கோட்டையை மட்டும் பிடிக்கமுடியவில்லை. இக் காரணம் பற்றி இக் கோட்டை வட இந்தியாவெங்கும் பிரசித்தி பெற்றதாயிற்று.

20. **கவர்னர்-ஜெனரலின் ராஜிநாமா** — ஹோல்கரின் யுத்தம் முடிவு பெறுவதற்கு முன்பே, வெல்லெஸ்லி தம் உயர்ந்த பதவியை ராஜிநாமா செய்துவிட வேண்டியிருந்தது. இவர் மிகவும் கஷ்டப்பட்டு உழைத்ததனால் இவருடம்பு மிகவும் சோர்வுற்றது. அதுவுமன்றி, இவருக்கும் கம்பெனி டைரெக்டர்களுக்கும் அடிக்கடி மனஸ்தாபமாயிருந்தது. இவர் செய்த யுத்த விருத்தியால் கம்பெனிக்கு வியாபாரம் குறைந்து போனதுமன்றி, செலவும் ஏராளமாகப் பெருக ஆரம்பித்தது. ஆகவே இவர் ராஜிநாமா கொடுத்தபோது கம்பெனியாரும் அதை அங்கீகரித்தனர்.

21. எனினும் இவர்தான் மைசூரையும், மஹாராஷ்டிரர் கூட்டத்தையும் தோற்கடித்து ஆங்கில அதிகாரத்தை இந்தியாவில் பிரதானமானதாக்கினவர். இவர் கவர்னர்-ஜெனரலாக வருவதற்கு முன்னிருந்த இந்தியாவின் படத்தையும், இவர் ராஜிநாமா செய்துவிட்டுச் சென்ற பின்னிருந்த இந்தியாவின் படத்தையும் ஒப்பிட்டுப் பாருங்கள்.



## 12. கம்பெனியின் ஆதிபத்ய பூர்த்தி

### மார்க்குவிஸ் ஆவ் ஹேஸ்டிங்ஸ்

1. வெல்லெஸ்லி இங்கிலாந்திற்குத் திரும்பிப் போன போது, அங்கே யாவரும் யுத்தத்தினல் மிகவும் அலுத்துப் போயிருந்தார்கள். ஐரோப்பாவில் இங்கிலீஷ்காரருக்கும், நெப்போலியனுக்கும் நடந்துவருஞ் சண்டை மிகவும் கடுமையாயிருந்தது. இதோடு, இந்தியாவிலுஞ் சண்டைகள் செய்தலாகாது என்று கம்பெனியார் நிச்சயித்து, காரன் வாலிஸ் பிரபுவை மறுபடியும் இந்தியாவிற்குக் கவர்னர்-ஜெனரலாகப் போகும்படி வேண்டிக் கொண்டார்கள். ஆனல் அவர் வந்து சேர்ந்த இரண்டு மாதங்களுக்கெல்லாம் காலஞ்சென்றார். இவருக்குப் பின் லார்ட் மிண்டோ என்பவர் வரும்வரைக்கும், ஸர் ஜார்ஜ் பார்லோ என்பவர் கவர்னர்-ஜெனரலாக வேலைபார்த்து வந்தார். இவர்காலத்தில் வேலூரிலிருந்த சிப்பாய்கள் தங்களைக் கம்பெனியார் நடத்துவது சரியாயில்லையென்று கலகஞ்செய்தனர். ஆனல் கலகம் அடக்கப்படவும், அவ் வூர்க் கோட்டையில் கைதிகளாயிருந்த திப்புசுல்தான் குமாரர்கள் கல்கத்தாவிற்கு மாற்றப்பட்டனர். மிண்டோ கவர்னர்-ஜெனராலாயிருந்த காலத்தில் இரண்டு முக்கியமான விஷயங்கள் நடந்தன. முதலாவது, இச்சமயத்தில் பஞ்சாப் பிரதேசத்தில் மிக பலிஷ்டராக இருந்த ரஞ்சித் சிங் என்ற சிக்கிய அரசருடன் மிண்டோ சிநேக உடன்படிக்கை செய்துகொண்டார். இரண்டாவது, வாரன் ஹேஸ்டிங்ஸ், காரன்வாலிஸ் முதலியவர்கள் காலத்தில் கம்பெனிக்குப்பார்லியமெண்டால்கொடுக்கப்பட்ட வியாபார சாஸனம் 1813-ம் வருஷத்தில் திரும்பச் சோதிக்கப்பட்டுச் சீர்திருத்தப்பட்டது. இப்புது

சாஸனத்தின்படி, கம்பெனியாருக்கு இந்தியாவோடு வியாபாரஞ் செய்யும் ஏகாதிகாரம் எடுத்துவிடப்பட்டது. சீனுவோடு செய்யும் தேயிலை வர்த்தகத்தின் சர்வ சுதந்திர மட்டும் கம்பெனியாருக்குக் கொடுக்கப்பட்டது.

2. லார்ட் மிண்டோ இந்தியாவை விட்டு 1813-ம் வருஷம் சென்றுர். இவருக்குப்பின் **மார்குவிஸ் ஆவ் ஹேஸ்டிங்ஸ்** என்பவர் கவர்னர்-ஜெனரலாக வந்தார். இவர் கவர்னர்-ஜெனரலாக வருவதற்கு வெகு காலத்திற்கு முன்பே, பெரிய தளகர்த்தரென இவர் பெயர் பெற்றவர். இவர் கவர்னர்-ஜெனரலாக வந்தது கம்பெனிக்கு மிகவும் நல்ல காலமே. ஏனெனில், இவர் வருவதற்குச் சற்று முன் நேபாளத்தில் வசிக்கும் கூர்க்கர்களும், மத்திய இந்தியாவிலுள்ள பிண்டாரிகளும், மஹாராஷ்டிரர்களும் மிகவும் பலிஷ்டர்களாகி, ஆங்கில அதிகாரத்திற்கே கேட்டை விளைவிக்கும் நிலைமையை உண்டாக்கினர். ஆகவே, இவர் நம் தேசத்திற்கு வந்த நிமிஷ முதற்கொண்டே, இவர்களையெல்லா மடக்கி, ஆங்கில அதிகாரத்தை இன்னும் பலத்த அஸ்திவாரத்தின் மீது நிலைநிறுத்த எண்ணங்கொண்டார். இவர் நமது தேசத்தை விட்டுப் போகும்போது, இந்தியாவின் பெரும்பாகமும் கம்பெனியாரின் ஏகாதிபத்யத்தை அங்கீகரித்த தென்று சொல்லலாம். ஆகையால், இவரை வெல்லெஸ்லி ஆரம்பித்த வேலையைப் பூர்த்தி செய்தவர் என்னலாம். இவர் காலத்தில் நேபாளத்தோடும், பிண்டாரிகளோடும், மஹாராஷ்டிரர்களோடும் மூன்று பெரிய யுத்தங்கள் நடந்தன. இந்த யுத்தங்களாற் கம்பெனிக்குப் பெருத்த பிரதேசங்கள் கைவசமாயின. ஆகையால், அவைகளைப் பற்றி, இங்கே சற்று கவனிப்போம்.

3. **நேபாள யுத்தம்.**—தற்காலத்தில் நேபாளமென்ற தேசம் ஹேஸ்டிங்ஸ் வருவதற்குச் சுமார் ஐம்பது வருஷத்துக்கு முன்பே **கூர்க்கர்கள்** என்னும் ஜாதியார் வசமிருந்து வருகிறது. நேபாளம் இமயமலைச் சாரலிலிருப்பதால் மலையும் காடும் நிறைந்ததோர் பிரதேசம். கூர்க்கர்கள் குட்டையாகவும், சரீரதிட முள்ளவர்களாகவு மிருப்பவர். தற்காலத்தில்கூட தைரியத்திலும், தேகபலத்திலும் அவர்களுக்கு மிஞ்சினவர் நமது தேசத்தில் கிடையாது. சமீபத்தில் நடந்த ஐரோப்பிய யுத்தத்திலும் அவர்கள் பெருங் கீர்த்திபெற்றூர்கள். ஹேஸ்டிங்ஸ் காலத்தில் அவர்கள் இமயமலை யடிவாரத்தினின்று கங்கைநதி வரையிலுள்ள பிரதேசத்தைக் கைப்பற்ற நினைத்து ஒன்றின்பின் ஒன்றுகக் கம்பெனிக் கிராமங்களைச் சேர்த்து வந்தார்கள். முடிவில், 1813-ம் வருஷத்தில் இவர்கள் பூத்வால், சிவராஜ் என்று இருகிராமங்களைக் கைப்பிடித்துக் கொண்டனர். இவ்விரு கிராமங்களும் ஆங்கிலேயருக்கு அயோத்தி நவாப்பால் கொடுக்கப்பட்டவை. அவைகளைத் திருப்பிக் கொடுக்கச் சொல்லிக் கவர்னர்-ஜெனரல் எவ்வளவு கேட்டும், அவர்கள் சரியான உத்தரம் சொல்லவில்லை. ஆகவே, இருவருக்கும் யுத்தம் தொடங்கிற்று.

4. ஆரம்பத்தில் இங்கிலீஷ்காரருக்கு மிகுந்த கஷ்டங்கள் உண்டாயின. அவர்கள் செல்லவேண்டிய பாதையோ மலையுங் காடுமாக இருந்தது. இக் காடுகளில் நுழைந்து செல்லுவதுடன், அவர்கள் பீரங்கிகளையும் சரிவான அம்மலைகளின் மீது இழுத்துச் செல்லவேண்டி வந்தது. இதற்காக, நேபாள ராஜாவும், இங்கிலீஷ்காரரைப் பார்த்து "நீங்கள் மனிதரால் கட்டப்பட்ட பரதபுரி கோட்டையைப் பிடிக்க முடியாமலிருக்கும்போது. கடவுளால் கட்டப்பட்

டிருக்கும் மலைக்கோட்டைகளை எவ்விதம் பிடிக்கப் போகிறீர்கள்'' என்று கேட்டார். இவர் சொன்னதற் கேற்ப இங்கிலீஷ் சேனையின் நான்கு பாகங்களில் மூன்று பாகம் நேபாள சேனையால் தோற்கடிக்கப்பட்டன. ஆனால், **ஸர் டேவிட் ஆக்டர்லோனி** என்பவர் தலைமையின் கீழிருந்த நான்காவது பிரிவு மட்டும் தோல்வியடையாது பல வெற்றிகளைப் பெற்றது. இச்சேனை ஒன்றின் பின் ஒன்றாக நேபாள கோட்டைகளை யெல்லாம் பிடித்து, முடிவில் தேசத்தின் தலைநகராகிய காட்மாண்டு எனுமிடத்திற்குச் சமீபத்தில் வந்துவிட்டது. ஆகையால், ராஜா கம்பெனியோடுகூடச் சமாதானத்திற்கு வரச் சம்மதித்தார். இச் சமாதானம் **சிகௌலி** என்னுமிடத்தில் நடைபெற்றது. (1816) இதன்படி கூர்க்கர்கள் ஆங்கிலேயரிட மிருந்து இதுவரை பிடித்துக் கொண்ட ஸ்தலங்களைத் திருப்பிக் கொடுத்துவிட்டார்கள். தற்காலத்தில் உதகமண்டலம், கோடைக்கானலைப்போல் வட இந்தியாவின் கோடை வாச ஸ்தலங்களாகிய **ஸிம்லா, முஸௌரி, நைனிடால்** முதலிய இடங்களும் இச் சமாதானத்தால் ஆங்கிலேயர் கைவசம் வந்தன. ஸிம்லாதான் இப்போது இந்தியாவின் கோடைகாலத் தலைநகர். இக்கால முதற்கொண்டு நேபாள ராஜ்யத்தின் தலைநகரில் ஓர் இங்கிலீஷ் ரெஸிடெண்ட் இருந்து வருகிறார். இப்போது கூர்க்கர்களால் இங்கிலீஷ்காரருக்கு மிகுந்த உதவி இருந்து வருகிறது. அவர்களி லனேகர் ஆங்கிலச் சேனையில் சேர்ந்திருக்கின்றனர். நமது தேசத்தின் உள்நாட்டுக் கலகங்களிலும் வெளிதேசத்துச் சண்டைகளிலும் அவர்கள் இங்கிலீஷ்காரருக்கு மிகவும் உதவியாயிருந்து வருகிறார்கள். நேபாள ராஜாவுக்கு நமது தேச ராஜாக்களைக் காட்டிலும் சுதந்திரம் அதிகம்.

5. **பிண்டாரி யுத்தம்.** மொகலாய அதிகாரம் தீர்ந்த பிறகு நமது தேசமெங்கும் அரசாங்கம் கெட்டு, தாறுமாருகிக் குழப்பம் மிகுந்திருந்தது. ஊரெங்கும் தடியெடுத்தவனெல்லாம் தண்டைக்காரனுகிவிட்டான். இச்சமயத்தில் கொள்ளைக்காரர்கள் கும்பல் கும்பலாக ஊரெல்லாந் திரிந்து கொள்ளையடித்து வந்தார்கள். இவர்களில் ஒரு கூட்டத்தார்க்குப் **பிண்டாரிக** ளென்று பெயர். இவர்கள் ஆப்கானியார், ஜாட்ஜாதியார், மஹாராஷ்டிரர் முதலிய பல ஜாதியார் சேர்ந்தக் கூட்டம். இவர்கள் ஜாதி மதங்களில் வேறுபட்டிருந்தும், கொள்ளை யடிக்குந் தொழிலில் ஒன்றுசேர்ந் திருந்தனர். தேசத்தில் அப்போது சரியான அரசாங்கமில்லாததால் இத் தனிக்காட்டு ராஜாக்கள் ஊரெங்குந் திரிந்து தங்களிஷ்டப்படி செய்துவந்தார்கள். இவர்களுக்குக் கொள்ளையடிப்பதே பிரதம ஜீவனம். இவர்கள் பெயரைக் கேட்டமாத்திரம் மத்திய இந்தியப் பிரதேசமெங்கும் நடுநடுக்கம். வருகிற செய்தி கேட்டபோதே அநேக குடும்பங்கள், பயமிகுதியால் இவர்கள்கையிலகப்பட்டுக் கஷ்டப்படுவதைவிட, சாவது நலமென்று, தற்கொலையால் மாண்டன. இவர்கள் இதோடு நிற்பதில்லை. சுதேசச் சிற்றரசர் சேனைகளில் இவர்கள் கூலிக்காகச் சேர்ந்துகொண்டு, தேசமெங்கும் சண்டை சச்சரவுகளை அதிகப்படுத்தி வந்தனர். இக் காரணம்பற்றி அநேக மஹாராஷ்டிரத் தலைவர்கள் இவர்களை ஆதரித்து வந்தார்கள். இவர்கள் வசம் 60,000 குதிரைவீரர்கள் பீரங்கிகள் சகிதமிருந்தன. ஆகையால், இக் கூட்டத்தை எப்படியாவது நீருக்கிவிட வேண்டியது மிகவும் அவசியமாயிற்று. இதற்காகக் கவர்னர்-ஜெனரல் ஜெய்ப்பூர், உதயபூர், ஜோத்பூர், ஸிந்தியா முதலிய மன்னர்களினுதவியுடன் 1,14,000

வீரர்களடங்கிய சேனையொன்று தயார் செய்தார். இவ்வளவு பெரிய சேனையை இதுவரை கம்பெனியார் பிரயோகித்தது கிடையாது. பிண்டாரிகள் நான்கு பக்கமும் சூழ்ந்துகொள்ளப் பட்டனர். இவர்களில் முக்கிய தலைவனாகிய **அமீர்கான்** என்பவன் தோற்கடிக்கப்பட்டுக் கீழ்ப்படிந்ததனால் அவனுக்கு **டான்க்** என்னும் சிறிய ராஜ்யம் இனாமாகக் கொடுக்கப்பட்டது. தற்காலத்திய டான்க் நவாபுகள் இவனுடைய சந்ததியார்கள்தான். மற்றொரு பிண்டாரித் தலைவனான **சித்து** என்ற கொடிய பாதகன், காட்டிற்குள் ஓடி அங்கு மாண்டான். கீழ்ப்படியாத மற்றத் தலைவர்களெல்லாம் பிடிக்கப்பட்டுத் தகுந்தபடி சிக்ஷைசெய்யப்பட்டனர். பிண்டாரிக் கூட்டம் இதோடு குலைந்தது. அக்கூட்டத்தார் அக்கிரம வழிகளை விட்டு யோக்கியதை வாய்ந்த வியவசாயிகளானார்கள். பிண்டாரிகள் பயம் நீங்கவே ஆயிரக்கணக்கான ஜனங்கள் தங்கள் ஊர்களுக்குத் திரும்பிவந்து க்ஷேமமாயிருந்தனர்.

6. **நான்காவது மஹாராஷ்டிர யுத்தம்:**—இரண்டாவது மஹாராஷ்டிர யுத்தத்தைப்பற்றிப் படிக்கும்போது பீஷ்வா, பாஜிராவின் செய்கையால் மஹாராஷ்டிர அதிகாரத்திற்குக் கேடு வந்ததென்று நீங்கள் படித்தீர்களல்லவா; ஹேஸ்டிங்ஸ் கவர்னர்-ஜெனரலாக வந்த பிறகுதான், பாஜிராவ் தாம் செய்த காரியத்தின் பலனை நன்கு அறிந்துகொண்டார். பஸ்ஸீன் உடன்படிக்கை, அவரை இங்கிலீஷ்காரருக்குக் கீழ்ப்பட்டவராகச் செய்துவிட்டது. இங்கிலீஷ் ரெஸிடெண்டு அவரைப் பலவழியிலும் கட்டுப்படுத்த ஆரம்பித்தார். இது காரணம் பற்றி அவருக்கு ரோஷமிகுந்தது. ஆனால், பழைய பீஷ்வாக்களைப் போல சர்வசுதந்திரமும் செல்வாக்கும் வேண்டுமென்கிற ஆசை அவ

ருக்கு இருந்ததே யொழிய, அவர்களிடமிருந்த மனோ தைரியமும் திடமும், பாஜி ராவுக்குச் சிறிதுமில்லை. தகப்பனைப்போலவே பிள்ளையும் கபடமும், கோழைத்தனமும் மிகுந்தவர். தனது குணத்திற்கேற்ப அவர் கம்பெனியார் நேபாள யுத்தத்தினாலும், பிண்டாரி யுத்தத்தினாலும் கஷ்டப்பட்டுக்கொண் டிருக்கும்போது, இரகசியமாக வேலை செய்ய ஆரம்பித்தார். அவரது அபிப்பிராயம் யாதெனில் எவ்விதத்திலாவது ஆங்கிலேயரின் கைப்பிடியினின்று தப்பிக்கொள்ள வேண்டுமென்பதே. அவருக்கும் கம்பெனியாருக்கும் கீழ்கண்டவிதம் சச்சரவு உண்டாயிற்று.

7. வெகு நாளாகக் கெயிக்வார் பீஷ்வாவுக்கு வரி கொடாத நிமித்தம் இருவருக்கும் பெருத்த மனஸ்தாபமாயிருந்தது. கம்பெனியார் இருவருக்கும் வேண்டியவராகையால், அவர்களின் ஆதரவின்மீது, கங்காதர சாஸ்திரி யென்பவர் கணக்கு வழக்குகளைத் தீர்க்குமாறு புனாவுக்கு அனுப்பப்பட்டார். ஆனால், அவர் பீஷ்வாவின் மந்திரியாகிய **திரிம்பக்டாங்ளி** என்பவரின் தூண்டுதலின்மீது கொலையுண்டார். இதையறிந்த இங்கிலீஷ் கவர்ன்மெண்ட் அந்த மந்திரியைக் கைதுசெய்து கொடுக்க வேண்டுமென்று பீஷ்வாவைக் கேட்க, அவர் மிக மனத்தயங்கலுடன் அவ்விதமே செய்தார். ஆனால், உடனே பீஷ்வா ஓர் உபாயத்தினால் அம் மந்திரி சிறையினின்று தப்பியோடச் செய்துவிட்டார். அதோடு நிற்காமல் அவர் மறைவாயிருக்கும் தன் மந்திரிக்கு, இங்கிலீஷ்காரருக்கு விரோதமாகக் கலகஞ் செய்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைப் பற்றி, இரகசியமாகக் கடிதங்கள் எழுதி வந்தார். இது கவர்னர்-ஜெனராலுக்குத் தெரிந்தவுடன், அவர் பீஷ்-

LIBRARY SERVICE INDIA
KOTTAIYUR-623106.

வாவைத் தகுந்த மேற்பார்வையில் வைக்கும் பொருட்டு மற்றொரு கடினமான உடன்படிக்கைக்கு உட்பட வேண்டு மென்று சொன்னார். அதன்படி பாஜிராவ் முன்னிருந் ததைவிடப் பெரியதொரு ஆங்கில சேனையைத் தம் ராஜ் யத்தில் வைத்திருக்க வேண்டும்; அதுவுமன்றி அவர் திரிம்பக்ஜியுடன் கூடவாவது வேறு மஹாராஷ்டிர மன்ன ருடனாவது கம்பெனிக்கு விரோதமான ஒரு வித சம்பந் தமும் வைத்திருக்கக் கூடாது. பாஜிராவ் இதற்குச் சரி யென்று சொல்லிவிட்டு, யுத்த ஏற்பாடுகளை இரகசியமாகச் செய்துவந்தார். பீஷ்வாவின் சேனை திடீரென்று கீர்த்தியி லிருந்த இங்கிலீஷ் சேனையைத் தாக்கிற்று. ஆனால், இந் திய சிப்பாய்க ளடங்கிய கம்பெனிச் சேனையே வெற்றி பெற்றது. ஆகையால், பாஜிராவ் இடம் விட்டு இடம் தப்பியோட வேண்டி வந்தது. ஆனால் 1818-ம் வருஷம் மே மாதம் அவர் இங்கிலீஷ் தளகர்த்தரால் பிடிபட்டார். கவர்னர்-ஜெனரல் அவரைப் பீஷ்வா பதவியினின்றுந் தள் ளிப் பென்ஷன் கொடுத்து கான்பூருக் கருகி லிருக்கும் பித்தூருக் கனுப்பிவிட்டார். அவர் ராஜ்யம் கம்பெனி ராஜ்யத்தோடு சேர்க்கப்பட்டது. பீஷ்வா வம்சம் எவ் விதமாகப் போனதென்று பார்த்தீர்களா?

8. முன் யுத்தங்களில் மஹாராஷ்டிரர் ஒன்று சேர்ந் திராதபடியால் தோற்கடிக்கப்பட்டார்க ளென்று நீங்கள் படித்தீர்கள். இந்த யுத்தத்திலும் பழைய கதை போலவே முடிந்தது. ஏனெனில், பீஷ்வா தோற்கடிக்கப்பட்ட சிறிது காலத்திற்கெல்லாம் நாகப்பூர் அரசராயிருந்த **அப்பாஸாகிப்** என்ற மஹாராஷ்டிர மன்னர் கம்பெனிக்கு விரோதமாகக் கிளம்பினார். ஆனால், அவர் தோற்கடிக்கப்பட்டு இருந்த இடந்தெரியாமல் ஓடிப்போகவேண்டி வந்தது. மற்றொரு

ராஜ குமாரன் அங்கே அரசனுக்கப்பட்டான். இச் சமயத்தில் இந்தூரில், ஹோல்காரின் குமாரனுகிய ஒரு பாலன் அரசனுக இருந்தபடியால் அங்கோர் பிரதிநிதித் துரைத்தன மிருந்தது. கம்பெனியார் நான்கு பக்கத்திலும் யுத்தத்தில் ஆழ்ந்திருக்கும்போது, இதுதான் தருந்த சமய மென்று இந்தூர் சேனை சண்டை துவக்குமாறு, துரைத் தனச் சபையைக் கட்டாயப்படுத்தியது. ஆனல், **மாகித்பூர்** என்னு மிடத்தில் மிகவும் சிரமப்பட்டுக் கம்பெனிச் சேனை அதைத் தோற்கடித்தது. இரு கட்சிக்காரருக்கும் சமா தானம் நடந்தது. அதன்படி ஹோல்கார் ராஜ்யம் மிகவும் குறுக்கப்பட்டது. ராஜாங்க நிர்வாகம் இங்கிலீஷ் ரெஸி டெண்ட் கையில் ஒப்புவிக்கப்பட்டது.

இவ்விதமாக மஹாராஷ்டிர ராஜ்ய முழுவதும் கம்பெ னியின் கைவசத்திலோ, ஆதீனத்திலோ வந்துவிட்டது.

9. **உள் நாட்டுச் சீர்திருத்தம்:—** ராணுவ வெற்றிகளி னல்மட்டு மன்று, வேறு பல விதத்திலும் ஹேஸ்டிங்ஸின் ராஜ்ய பரிபாலனம் சிறந்து விளங்கியது. வித்தியாபிவிருத் தியில் இவருக்கு மிகுந்த பிரிய முண்டு. இவர் காலத்தில் தான், 1817-ம் வருஷத்தில், தற்காலத்தில் வங்காள ராஜ தானி காலேஜ், (Presidency College) என்று வழங்கக் கூடிய கலாசாலை கல்கத்தாவில் ஏற்படுத்தப்பட்டது. இக் காலத்தே கிறிஸ்தவப் பாதிரிகள் நாடெங்கும் வித்தையைப் பரவச் செய்யுமாறு பல பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தி னர்கள்.



## 13. ஆங்கிலேயர் பர்மாவைத் தோற்கடித்தல்

### லார்ட் ஆம்ஹேர்ஸ்ட்

1. 1823-ம் வருஷம், ஜனவரி மாதம் ஹேஸ்டிங்ஸ் இந்தியாவை விட்டுச் சென்றார். அவர் நமது தேசத்தை விட்டுப் போகும்போது இந்தியாவில் ஆங்கில ராஜ்யத்தின் விஸ்தீரணத்தைப் பாருங்கள். இந்தியாவில் சேர்க்க வேண்டியது பஞ்சாப் ஒன்றுதான் பாக்கியிருக்கிறது. ஆனால் அங்கு ரஞ்சித்சிங் என்ற வீரம் பொருந்திய அரசர் இருக்கும் வரை இங்கிலீஷ்காரர் அங்குத் தலைகாட்ட முடியவில்லை. ஆகையால் அவர்களின் பராக்கிரமத்தைக் காட்டுவதற்கு ஒரே ஒரு பக்கந்தான் சாத்தியமா யிருந்தது. அதாவது கிழக்குப் புறமாகிய பர்மாப் பிரதேசந்தான். ஆம்ஹெர்ஸ்ட் காலத்தில் விசேஷ சம்பவம் யாதெனில் முதல் பர்மா யுத்தம் நடந்ததே. பர்மா தேசத்தரசர் கொஞ்சங் கொஞ்சமாகப் பெகு, அரக்கான், அஸ்ஸாம் முதலிய மாகாணங்களைக் கைப்பற்றிக்கொண்டு வங்காளம் வரைக்குமுள்ள ராஜ்யத்தை ஜெயித்துத் தம் ராஜ்யத்துடன் சேர்த்துக் கொள்ள எண்ணினார். இவர் செய்தது நேபாளர்கள் செய்தது போன்றதாகும். எல்லைகளைப் பற்றித்தான் உலகமெங்கும் பல சண்டைகள் உண்டா யிருக்கின்றன. கவர்னர்-ஜெனரல் பர்மா தேசத்தரசனைப் புதிதாக ஜெயித்த இடத்தை விட்டுவிடும்படிக் கேட்டார். அதற்கு அவர் மறுக்கவே, யுத்தம் தொடங்கிற்று. இந்த யுத்தம் இரண்டு வருஷத்திற்குமேல் நடந்தது. அதில் இங்கிலீஷ் சேனைக்கு மிகுந்த சேதமுண்டாயிற்று. 20,000 ஆட்களுக்குமேல் வியாதியாலும் பஞ்சத்தாலும் மாண்டார்கள். எனினும், முடிவில் ஆங்கிலேயரே வெற்றி யடைந்தனர். இங்கிலீஷ்

சேனைகள் அஸ்ஸாம், மர்டபான், ரங்கூன் முதலிய ஸ்தலங்களைப் பிடித்துத் தலை நகராகிய ஆவாவின்மீது படையெடுத்துச் சென்றன. இதற்குள் பர்மாவினரசர் சமாதானத்திற்குத் தயாரா யிருப்பதாகத் தெரிவித்தார். ஆவாவிலிருந்து நாற்பது மைல் தூரத்திலிருக்கும் **யாந்தபூ** என்னுமிடத்தில், இருதரத்தாருக்கும் சமாதான உடன்படிக்கை நடந்தது. அதன்படி பர்மா அரசர் கம்பெனிக்கு அஸ்ஸாம், அரக்கான், டெனஸரீம் என்ற நாடுகளையும், யுத்தச் செலவிற்காக ஒரு கோடி ரூபாய்களையும் கொடுப்பதாக ஒப்புக்கொண்டார். மோல்மீன் என்ற பெயர்போன துறைமுகப் பட்டணம், இங்கிலீஷ்காரர் கைவசம் வந்தபிறகுதான், முன்னேற்ற மடைந்தது.

2. **பரதபுரி கோட்டை பிடிபட்டது.** ஆம்ஹர்ஸ்ட் காலத்தில்தான் பிரசித்தி பெற்ற **பரதபுரி கோட்டை** ஆங்கிலேயரால் பிடிக்கப்பட்டது. 1825-ம் வருஷத்தில் பரதபுரி ராஜா இறந்தார். அவருடைய குமாரன் பால்யனாக இருந்தபடியால், அவருடைய சகோதரர் ராஜகுமாரனை நீக்கிவிட்டுத் தாமே அரசரானார். இதை யறிந்த கவர்னர்-ஜெனரல் ராஜகுமாரனே பட்டத்திற்கு வரவேண்டுமென உத்தேசித்து **லார்ட் கம்பர்மிர்** என்பவரின் கீழ் ஒரு சேனையை அனுப்பினார். அரசன் இணங்க மாட்டே னென்றபடியால், முற்றுகையிட வேண்டியிருந்தது. பரதபுரி கோட்டையைச் சுற்றிப் பெருத்த களிமண் சுவர்களிருந்தன. ஆகையால் எவ்வளவு பீரங்கி வெடி குண்டுகள் போட்டபோதும், கோட்டையை அசைக்க முடியவில்லை. இதே காரணத்தினால்தான் வெல்லெஸ்லி காலத்திற்கூட, இக் கோட்டையைப் பிடிக்க முடியவில்லை. முடிவில், ஆங்கில இஞ்சினீர்கள் சுவர்களின் அடிப் புறத்தில் ஆழமான சுரங்கங்கள் வெட்டி அதிகமான வெடி மருந்தை வைத்துத் தீ மூட்டி

ஞர்கள். கோட்டைச் சுவர்கள் கீழ் விழவே இங்கிலீஷ் சேனை கோட்டையைக் கைப்பற்றிக்கொண்டது. அங்கு கஜானுவி லிருந்த பணத்தை யெல்லாம் இங்கிலீஷ் சேனை அபகரித்துக்கொண்டது. கம்பெனியின் ஆதரவின் கீழ் ராஜகுமாரனே பரதபுரி அரசனுக்கப்பட்டான்.



## 14. லார்ட் வில்லியம் பெண்டிங்க் (1828 - 1834)

### (ஒரு தயாளமுள்ள கவர்னர்-ஜெனரல்)

1. மேற்கூறிய ஐந்து வருஷ ஆட்சிக்குப் பின் இந்து தேச சரித்திரத்தின் முக்கியமான ஒரு பாகத்தை வாசிக்கப் புகுவோம். இக் காலத்தில் வெல்லெஸ்லி, ஹேஸ்டிங்ஸ் முதலியவர்கள் காலத்தைப் போல் ராணுவ கீர்த்திகள் இல்லாமற் போயினும் பல வித நாகரீக முன்னேற்றங்கள் நிறைந்தன. இம் முன்னேற்றங்களுக்குக்காரணமாயிருந்தவர் **லார்ட் வில்லியம் பெண்டிங்க்** என்ற உத்தமரே. இவர் 1828-ம் வருஷத்தில் ஆம்ஹர்ஸ்ட் பிரபு இந்தியாவைவிட்டுச் சென்றவுடன், கவர்னர்-ஜெனரலாக வந்தவர். இவர் வேலூர்க் கலகத்தின்போது சென்னையில்



லார்ட் வில்லியம் பெண்டிங்க்

கவர்னரா யிருந்தார். இவரை ஆங்கில ரக்ஷகரில் ஒருவ ரென்றே சொல்லவேண்டும். இவரைப்போன்ற பெருந் தன்மையும், தயாள குணமும் பெற்ற கவர்னர்-ஜெனரல் கள் மிகச் சிலரே இருக்கின்றனர். நீங்கள் கல்கத்தா விற்குப் போனால், இப்படத்தில் காண்பதைப் போல, திவ்வியமான சிலை யொன்றைப் பார்ப்பீர்கள். இதுதான் பெண்டிங்க் சிலை. இதனடியில் ஒரு சிலாலேகம் செதுக்கி யிருக்கிறது. அதில் இவர் செய்த பெரும் வேலைகள் சுருக்கிச் சொல்லப்பட்டுள்ளன. அவை வருமாறு:—
"அவர் கொடிய சடங்குகளை அழித்தார்; அவர் மனதைப் புண்படுத்தும் வேற்றுமைகளைத் தீர்த்தார்; அவர் ஜனங் களுக்குத் தம் தம் குறைகளைப் பகிரங்கமாகத் தெரியப் படுத்தும் சுதந்திரத்தைக் கொடுத்தார். தம் பார்வையில் ஒப்படைக்கப்பட் டிருக்கும் ஜனங்களின் பகுத்தறி வையும், நீதி நெறி யோக்கியதையையும் அபிவிருத்தி செய்வதே எப்போதும் அவரின் விசாரமா யிருந்தது." இவர் பொதுஜன நன்மைக்காகப் பல சீர்திருத்தங்கள் செய்தார். அவைகளைப் பற்றி இங்கே சுருக்கிச் சொல்வோம்.

2. **தேசாசாரச் சீர்திருத்தங்கள், உடன்கட்டையேறலின் நிறுத்தம்.** உடன்கட்டையேற லென்பது நெடுங் காலத் திற்கு முன்பே நமது தேசத்தில் சில இந்துக்களால் அனு சரிக்கப்பட்டுவந்த ஓர் வழக்கமாகும். இந்து மதத்தின்படி, புருஷ னிருக்கும் வரையில்தான், ஒரு ஸ்திரீக்கு உலகவின் பங்களும், அனுபோகங்களும் உண்டு. அவள் விதவை யானல், அவளுக்கு உலகவின்பங்களும்அனுபவங்களுமிருத் தல் கூடாது. அவள் உலகவாழ்க்கையில் மனஞ் செலுத் தாது, விரதமுதலியவைகளை அனுஷ்டித்துக்கொண்டு, தன்

கணவன் ஆத்மாவும் தன்னுத்மாவும் நற்கதி பெறும் வழிகளையே தேடல் வேண்டும். முற்காலத்தில் சில ஸ்திரீகள் தம் கணவர்மீதுள்ள அன்பு மிகுதியால் அவர்களிறந்தபின் தாமிருப்பது தகுதியில்லை யென்று கருதித் தாமும் சந்தோஷமாகவே தீயில் விழுந்து மாண்டனர். இதற்கு உடன் கட்டையேற லென்று பெயர். இவர்கள் அன்பு மிகுதியாலும் கற்பு மிகுதியாலும் இவ்விதம் செய்துவந்ததால், இதற்கு ஒரு வித ஆக்ஷேபணையும் இருந்ததில்லை. ஆனுல், நாளடைவில் ஜனங்கள் இதன் உட்கருத்தறியாமல், இஷ்ட



முள்ளவர் இல்லாதவர் ஆகிய எல்லா விதவைகளையும் உடன் கட்டையேற வேண்டுமென்று கட்டாயப்படுத்த ஆரம்பித்து விட்டனர். ஆகவே, **கட்டாய** உடன்கட்டையேறலென்பது மிகக் கொடிய வழக்கமாயிற்று. அக்பர் சக்கரவர்த்தி இப் பயங்கரமான வழக்கத்தை நிறுத்தத் தம்மாலியன்றவரை முயன்ருர். ஆனுல் அவர் முயற்சி முற்றிலும் பயன்படவில்லை. ஆகையால், இக் கொடிய வழக்கம் தேசமெங்கும் மேன்மேலும் அதிசரித்து வந்தது. வங்காளத்தில் மட்டும்

ஒரு வருஷத்தில் சராசரியாக 800 விதவைகள் கட்டாய உடன்கட்டை யேறினார்கள். இக் கோரமான வழக்கத்தை நிறுத்தும்பொருட்டு வங்காளத்திலும் மற்ற மாகாணங்களிலும் ஓரியக்கம் ஆரம்பிக்கப்பட்டது. இதற்குத் தலைவர் ராஜாராம் மோஹன்ராய் என்ற பெரியோர். பெண்டிங்க் இவ் வியக்கத்தின்மீது மிகுந்த அனுதாபங் கொண்டு உடன் கட்டையேறலையே அடியோடு நிறுத்திவிடத் தீர்மானஞ் செய்தார். உடனே, தேசமெங்குமிருந்த குறுகிய எண்ணமுள்ளவருமான மத சாஸ்திரிகளும், பிறரும் இவர் முயற்சியைத் தடுத்து வந்தார்கள். ஆனால் இவர் சிறிதேனும் பயப்படாது ஒரு சட்டத்தை யுண்டாக்கினார் (1829). அச் சட்டத்தின்படி, உடன்கட்டை யேறலைத் தூண்டுபவர்கள் கொலை செய்வதற்குச் சமானமாவர்; அவர்களுக்குத் தகுந்த தண்டனை விதிக்கப்படும்.

மற்றோர் சட்டத்தின்படி, நரபலி கொடுத்தலாவது, குழந்தைகளைக் கொல்வதாவது கூடாதென்று அவர் மறுத்து விட்டார்.

3. **தக்கர் கொள்ளைக் கூட்டம்.** மொகலாய ராஜ்யம் சீர்குலைந்த நாள் முதற்கொண்டு, நமது தேசத்திலிருந்த பாதைகளி லெல்லாம் பரம்பரைத் திருடர் நிறைந் திருந்தனர். இவர்களுக்குத் **தக்கர்கள்** என்று பெயர். இவர்கள் பிண்டாரிகளைப் போல் ஊரூராய்த் திரிந்து கொள்ளைகளடித்து வந்தாலும், சுதேச ராஜாக்களுடன் சேர்ந்து சண்டை செய்வதில்லை. இவர்கள் வியாபாரிகள், அல்லது யாத்திரைக்காரரைப்போல் வேஷந்தரித்து யாத்திரைக்காரரின் கழுத்தைத் திருகியோ, விஷம் வைத்தோ கொன்று விட்டு அவர்களிட மிருந்த பொருளைத் திருடிச் செல்வது வழக்கம். இப் பாதகர்களை அடியோடு தீர்த்து விடும்படி

கவர்னர்-ஜெனரல் ஒரு தனி டிபார்ட்மென்ட் (இலாகா) உண்டாக்கினர். இது ஏற்பட்ட சில வருஷங்களுக்கெல்



லாம் தக்கரில் பெரும்பாலர் பிடிபட்டு ஜெயிலிலும் தூக்கிலும் போடப்பட்டனர்.

4. **நியாயஸ்தல சீர்திருத்தமும் வித்யா சீர்திருத்தங்களும்.** கம்பெனி அதிகாரத்திற் குட்பட்ட ராஜ்யங்கள் அதிகரிக்கவே, வெள்ளைக்கார உத்தியோகஸ்தர்கள் மட்டும் அரசாங்க விஷயங்களுக்குப் போதாமற் போயிற்று. ஆகையால், பெண்டிங்க் காலத்தில் இந்தியர்களுக்கு டிப்டி கலெக்டர், ஸப் ஜட்ஜ் போன்ற சில உயர்ந்த உத்தியோகங்கள் கொடுக்கப்பட்டன. ஆனல், அவர்கட்கு மொகலாயர் காலத்திற் போல மாகாண கவர்னர், சேனைத் தலைவர் முதலிய உயர்ந்த பதவிகள் கொடுக்கப்படவில்லை.

5. இதுவரையிலும் நமது தேசத்தில் சுதேச பாஷைகள் மூலமாகப் படிப்பு கற்பிக்கப்பட்டு வந்தது. ஆனல், இவர் காலத்தில் உயர்தர வித்தையைச் சுதேச பாஷைகள்

மூலமாகக் கற்பிப்பதா, அல்லது ஆங்கில மூலமாகக் கற்பிப்பதா என்கிற பெரும் விவகார மேற்பட்டது. இரண்டு கட்சிக்காரரும் தாம் சொல்லுவதே சரியென்று மிகவும் மூர்க்கமாக வாதித்தார்கள். ஆனால், கவர்னர்-ஜெனரலின் நிர்வாக சபையில், சட்ட மெம்பராயிருந்த **மேகாலே** என்ற இங்கிலீஷ் வித்வான் இந்தியர்களுக்கு இங்கிலீஷ் தெரிந்திருந்தால்தான், மேனாட்டு நாகரீகத்தையும், அரசாங்க முறைகளையும் நன்றாகத் தெரிந்துகொள்ளலாமென்று ஒரே பிடிவாதமாக வாதித்தார். ஆகையால், அவர் அபிப்பிராயமே மேற்பட்டது. அக்கால முதற்கொண்டு, நமது பள்ளிக்கூடங்களிலும், கல்லூரிகளிலும் படிப்பு இங்கிலீஷ் பாஷை மூலமாகக் கற்பிக்கப்பட்டு வருகிறது. இதன் பயனாக நமது தேசத்தாரிற் பலர் இங்கிலீஷ் பாஷையில் பாண்டித்யம் அடைந்திருக்கின்றனர். ஆனால், சுதேச பாஷைகள் கவனிப்பாரற்று க்ஷீண தசையை யடைந்தன; நமது நாகரீகமும் சிறப்பும் வலிமை குறைந்து போயின.

6. 1833-ம் **வருஷத்திய சாஸனம்.** இருபது வருஷங்களுக்குமுன், அதாவது 1813-ம் வருஷத்தில் பார்லியமெண்ட் கம்பெனியின் சாஸனத்தைச் சோதித்து புதுப்பித்த தென்று படித்தீர்களல்லவா? 1833-ம் வருஷம் மறுபடியும் பார்லியமெண்ட் ஷை சாஸனத்தைச் சோதித்தது. இந்தச் சாஸனங்களுக்கு ஆயுள் காலம் இருபது வருஷந்தான். ஆகையால் இருபது வருஷங்களுக் கொருமுறை பார்லியமெண்ட் கம்பெனியின் சாஸனத்தைப் புதுப்பிக்க வேண்டி யிருந்தது. இல்லாவிட்டால், கம்பெனிக்கு இந்தியாவில் அரசாங்கம் செய்ய அதிகார மில்லாமற் போய்விடும். 1833-ம் வருஷம் கொடுத்த சாஸனத்தின்படி, கம்பெனியார் வியாபாரத்தை முற்றிலும் விட்டு விட்டு, ராஜ்ய பரிபாலனத்தையே கவனிக்க வேண்டியதாயிற்று.

7. **சிறு மாகாணங்கள் சேர்க்கப்பட்டன.** இந்தக் கவர்னர்-ஜெனரல் காலத்தில் **குடகு, கச்சார்** என்ற இரண்டு ஸ்தலங்களே சேர்க்கப்பட்டன. கச்சார் ராஜா கொலையுண்டார்; அவருக்குச் சந்ததியில்லை. ஆகையால் அவர் ராஜ்யம் கம்பெனி ராஜ்யத்தோடு சேர்த்துக்கொள்ளப்பட்டது. 1834-ம் வருஷத்தில் குடகின் அரசராகிய வீரராஜ் என்பவர் ஆங்கிலர் மேல் அதிகாரத்தை அங்கீகரிக்க மாட்டேனென்று தம்மிஷ்டப்படி குடிகளை நிர்ப்பந்தித்து அரசாண்டார். இங்கிலீஷ்காரர் அவர் தேசத்தின் மீது ஓர் சேனையை யனுப்பி, அவரைப் பட்டத்தினின்று நீக்கி அவர் ராஜ்யத்தையுங் கைப்பற்றிக் கொண்டனர். ராஜா கைது செய்யப்பட்டுக் காசிக்கு அனுப்பப்பட்டார். பெண்டிங்க் மைசூர் விஷயத்திலும் தலையிட வேண்டியிருந்தது. வெல்லெஸ்லியால் பட்டஞ் சூட்டப்பட்ட அரசர் அரசாளச் சக்தியற்றவராகி, ஜனங்களை மிகுந்த துன்பத்திற் குள்ளாக்கிவிட்டார். ஆகையால் அவர் பட்டத்தினின்று நீக்கப்பட்டு அவர் ராஜ்யம் இங்கிலீஷ் ரெசிடெண்டால் ஆண்டுவரப்பட்டது. நாற்பது வருஷங் கழிந்தபின் மைசூர் இந்து ராஜாவுக்குத் திருப்பிக் கொடுக்கப்பட்டது.

8. பெண்டிங்க் 1835-ம் வருஷம் இந்தியாவை விட்டுச் சென்றார். அவர் சென்ற ஒரு வருஷம் வரைக்கும் **ஸர் சார்லஸ் மேட்காப்** என்பவர் கவர்னர் - ஜெனரலாக விருந்தார்.



## 15. இந்தியாவின் வடமேற்குப் பிரதேச அபாயம்

1. 1836-ம் வருஷம் **லார்ட் ஆக்லண்ட்** என்பவர் இந்தியாவிற்குக் கவர்னர்-ஜெனரலாக வந்தார். மூன்றுவது பானிப்பட் யுத்த முதல், நமது தேசத்தின் மீது கைபர் கணவாய் மார்க்கமாக எவரும் முன்போலப் படையெடுக்க வில்லை. இதற்கு முக்கியகாரணம் யாதெனில், இந்தியாவின் வடமேற்குப் பிரதேசத்தில் பலம் பெற்ற ராஜ்யங்களொன்று முண்டாகவில்லை. ஆனுல், லார்ட் ஆக்லண்ட் வருந்தருணத்தில் நமது நாட்டின்மீது வெளிநாட்டுப் படையெடுப் புண்டாகும் அபாயம் மிகுந்திருந்தது. ஐரோப்பாவில் வெல்லெஸ்லி, ஹேஸ்டிங்ஸ் காலத்தில் இங்கிலீஷ் காரருக்குப்பிரெஞ்சுக்காரர் விரோதிகளா யிருந்தனர். ஆனுல் இச்சமயத்திலோ **ரஷ்யாதேசத்தோர்** இங்கிலீஷ்காரருக்கு முக்கிய சத்துருக்களாய்விட்டார்கள். படத்தைப்பாருங்கள். சென்ற பல வருஷங்களாக அவர்கள் மெதுவாகத் தங்களதிகாரத்தை மத்திய ஆசியா முழுவதும் பரவச் செய்துவிட்டார்கள். ஆங்கிலேயருக்கிருந்த பயமென்னவென்றுல், அவர்கள் கூடிய சீக்கிரத்தில் ஆப்கானிஸ்தானத்



**லார்ட் ஆக்லண்ட்**

தையுங் கைப்பற்றிக் கைபர் கணவாய் மார்க்கமாக இந்தியாவிற்கு வந்து விடுவார்களே என்பதே. இந்தியாவிற்கும், ரஷ்யராஜ்யத்திற்கும் மத்தியில் ஒன்று இரண்டு சிறு ராஜ்யங்களிருந்தால், ஆங்கிலேயருக்கும் ரஷ்யருக்கும் அவ்வளவு சீக்கிரமாகவும், எளிதாகவும் சண்டைகள் உண்டாகா. இப்பேர்ப்பட்ட ராஜ்யங்கள் பாரசீகமும், ஆப்கானிஸ்தானமுமே. முக்கியமாக ஆப்கானிஸ்தானம் இந்தியாவிற்கு வாயில் காப்போனைப் போன்றது. இவ்விரு ராஜ்யங்களும் எவர் பக்கத்திலிருக்கின்றனவோ அப்பக்கத்திற்கு மிகுந்த சாதகம் உண்டு. ஆகையால், இங்கிலீஷ்காரரும், ரஷ்யர்களும் தங்கள் தங்கள் பக்கத்திற்கு ஆப்கனிஸ்தானத்தைச் சேர்த்துக்கொள்ளுவதற்காகத் தூதர்களை அமீர் சமஸ்தானத்திற்கு அனுப்பிவந்தார்கள். ரஷ்யர்கள் வசம் ஆப்கனிஸ்தானஞ் சென்றுவிட்டால், இந்தியாவில் இங்கிலீஷ்காரரின் கதி அதோகதிதான். 'ஆகையால், இங்கிலீஷ்காரர்கள் எவ்விதத்திலாவது ஆப்கானிஸ்தானத்தைத் தம்வசத்தில் சேர்த்துக்கொள்ள வேண்டியது அவசியமென்று தீர்மானஞ் செய்துகொண்டார்கள்.

2. இச் சமயத்தில் ஆப்கானிஸ்தானத்தில் **தோஸ்த் முகம்மது** என்பவர் அமீர் (அரசன்) ஆக இருந்தார். இவருக்கு முன் **ஷா ஷூஜா** என்பவர் அமீராக இருந்தனர். 1826-ம் வருஷம் இவரைப் பட்டத்தினின்று துரத்திவிட்டுத்தான் தோஸ்த்முகம்மது அமீராக வந்தவர். ஷா ஷூஜா, கம்பெனி ராஜ்யத்திற்கு ஓடிவந்து, பாஜிராவைப் போல, இங்கிலீஷ்காரர் உதவியை நாடினார். இங்கிலீஷ்காரரும் தோஸ்த்முகம்மது தங்களுக்கு அனுசரணையாய் வராவிட்டால், அவர் விரோதிக்கு உதவி செய்யலாமென்று நினைத்து ஷாஷூஜாவுக்கு ஆசைவார்த்தை சொல்லி வந்

தார்கள். ரஷ்யரின் பய மதிகரிக்கவே, ஆமீர் இங்கிலீஷ்காரருக்கு அனுகூலமாக உடன்படிக்கை செய்துகொள்ள வேண்டுமென்று லார்ட் ஆக்லண்ட், காப்டன் பர்ன்ஸ் என்ற தூதரைக் காபூலுக்கு அனுப்பினர். இங்கிலீஷ்காரரும், ரஷ்யர்களும் இவ்விதம் தம் உதவியை நாடவே, தோஸ்த் முகம்மதுச்கு, தன் மதிப்பும்,மமதையும் அதிசரித்தன. இங்கிலீஷ்காரரும், ரஷ்யர்களும் எக்கேடு கெட்டாலும் அவருக் கொன்றுமில்லை; அவர் தம் சங்கதியையே முற்றிலுங் கவனித்தார். ஆகையால், அவர் ஆங்கில தூதரைப் பார்த்து ஆங்கிலேயர் பிஷாவர் என்னு மிடத்தை பஞ்சாப் அரசராகிய ரஞ்சித்ஸிங்கிட மிருந்து தமக்குத் திரும்ப வாங்கிக்கொடுத்தால், அவர்களுடன் நேச உடன்படிக்கை செய்வதாகச் சொன்னர். இதைச் செய்வது அசாத்தியமான காரியம்; ஏனெனில், ரஞ்சித் ஸிங் மிக பலிஷ்டர். அவர் பிஷாவரைப் போன்ற முக்கியமான இடத்தை ஒருபோதும் கைவிடார். ஆகையால் இங்கிலீஷ்காரர் அவருடைய விரோதத்தைச் சம்பாதிக்க மனங்கொள்ள வில்லை. இதனுடன்கூட, பஞ்சாப் அரசருக்கும், கம்பெனியாருக்கும் லார்ட் மிண்டோ காலம் முதற்கொண்டே நேய உடன்படிக்கையொன்று இருந்து வந்தது. மேலும், ரஞ்சித்ஸிங் மனஸ்தாபத்தைக் கூட மதிக்காமல் பிஷாவரைப் பிடுங்கித் தோஸ்த் முகம்மதுக்குக் கொடுத்தாலுங்கூட அவர் ரஷ்யருக்கு உதவி செய்யமாட்டாரென்பது என்ன நிச்சயம்? ரஞ்சித்ஸிங்கின் வீண்விரோதத்தைச் சம்பாதிப்பதைவிட, ஆப்கானியரைப் பலாத்காரமாக வந்து ஆங்கிலேயரின் பக்கத்தி லிருக்கச் செய்வதே மேலென்று கவர்னர்-ஜெனாலுக்குத் தோன்றிற்று. இதற் கேற்ப, இச்சமயத்தில் தோஸ்த் முகம்மது இங்கிலீஷ் தூதரைத் தம் சமஸ்தானத்திற்கு அனுப்பிவிட்டு, அங்கிருந்த ரஷ்ய பிரதி

நிதியின்மீது மரியாதைகளையும், வெகுமதிகளையுஞ் சொரிந்தார். இவ்விடத்தில் தோஸ்த் முகம்மது செய்தது சரியா தப்பாவென்று நாம் சொல்வது கஷ்டம். எனினும், இது தான், இக்கிலீஷ்காரருக்கும் ஆப்கானியருக்கும் இச் சமயம் நடந்த சண்டையின் முக்கிய காரணம்.

3. **யுத்த வர்த்தமானங்கள்** (1839-1843). இந்த யுத்தத்திற்கு **முதல் ஆப்கானிய யுத்தம்** என்று பெயர். தோஸ்த் முகம்மதைப் பட்டத்தினின்று நீக்கி அவருக்குப் பதிலாக ஷாஷுஜா என்பவரை அமீராக்க வேண்டுமென்று நிச்சயஞ் செய்து, கவர்னர்-ஜெனரல் 1838-ம் வருஷம் யுத்தங் கூறினார். இரண்டு சேனைகள் ஸிந்து தேசமார்க்கமாகவும், பலுசிஸ்தான் மார்க்கமாகவும் ஆப்கானிஸ்தானத்தின்மீது படையெடுத்தன. இவ்விரண்டு சேனைகளும் **காண்டகார்** என்னுமிடத்தைப் பிடித்தன. அங்கு ஷாஷுஜா அமீராகப் பட்டஞ் சூட்டப்பட்டார். (1839) சிறிது காலத்திற்கெல்லாம், **கஜினியும், காபூலும்** இங்கிலீஷ்காரர் கைவசம் வந்தன. தோஸ்த் முகம்மது, மத்திய ஆசியாவை நோக்கி ஓட்டம் பிடித்தார்; பிறகு, அவர் தன் நம்பிக்கை யிழந்து, தாமாகவே இங்கிலீஷ்காரருக் கிணங்கித் தம் சரீரத்தை ஒப்படைத்துவிட்டார். அவர் அங்கிருந்து ராஜ கைதியாகக் கல்கத்தாவிற்கு அனுப்பப்பட்டனர். இங்கிலீஷ்காரரின் நேயராகிய ஷாஷுஜாவும் காபூல் பட்டத்தில் அமர்ந்தார். இக்காரியம் முடிந்தவுடன் உள்நாட்டுக் கலகத்தைத் தடுப்பதற்கு வேண்டிய பிரிவைத்தவிர, மற்ற ஆங்கிலச் சேனையெல்லாம் இந்தியாவிற்குத் திரும்பிற்று.

4. ஒரு வருஷகாலம் வரைக்கும் யாவும் குழப்ப மற்றுச் சாந்தமாய் நடந்தன. ஆனால் 1841-ம் வருஷத்துக் கடைசியில் வீரரும், சுதந்திர பிரியருமான ஆப்கானியர்கள்,

தோஸ்த் முகம்மதின் மூத்த குமாரராகிய **அக்பர் கான்** என்பவரின் தலைமையின் கீழ் திடீரென்று தேச மெங்கும் கலகஞ் செய்துகொண்டு கிளம்பிவிட்டனர். காபூலிலிருந்த பிரதம ஆங்கில உத்தியோகஸ்தர்கள் கொலை செய்யப்பட்டனர். இங்கிலீஷ் சேனையே காபூலி லிருப்பது மிகவும் கடினமாயிற்று. ஆகையால், மொத்தத்தில் சுமார் 16,000 பேரடங்கிய அச் சேனை இந்தியாவை நோக்கிப் பின் வாங்க வேண்டிய தவசியமா யிருந்தது. வழியில் அச் சேனையி லுள்ளோர் பட்ட பாடு சொல்லி முடியா. காலமோ பனிக் காலம், நடக்கும் வழியெல்லாம் பனிக் கட்டியால் நிறைந் திருந்தன. தங்குவதற்குச் சிறிதேனும் இடமில்லை. இவற் றுடன், ஆப்கானியர்கள் மலை யுச்சியினின்றும், மறைவுகளினின்றும் இவர்களைச் சுட்டுக் கொன்றார்கள். ஆகையால், பனியினாலும், எதிரியின் குண்டுகளாலும் **டாக்டர் பிறைடன்** என்ற ஒருவர் நீங்கலாக, யாவரும், மடிந்தனர். ஷாஷுஜாவும் கலகக்காரரால் கொலையுண்டார். ஜலாலாபாத், காண்டகார் என்னு மிடங்களி லிருந்த இங்கிலீஷ் சேனைகள், ஆப்கானியரால்மிகுந்த நெருக்கடியோடு முற்றுகை போடப்பட்டன. இச் செய்தியைக்கேட்ட இங்கிலாந்தி லிருக்கும் அதிகாரிகள், லார்ட் ஆக்லண்டைத் திரும்ப அழைத்துவிட்டார்கள்.


லார்ட் எல்லன்பரோ

5. **லார்ட் எல்லன்பரோவும், யுத்த முடிவும்:**—ஆக்லண்டுக்குப் பின் **லார்ட் எல்லன்பரோ** என்பவர் 1842-ம் வருஷம் கவர்னர்-ஜெனரலாக வந்தார். காண்டகாரிலும், ஜலாலாபாத்திலுமுள்ள சேனைகளை முற்றுகையினின்றும் விடுவித்து, இங்கிலீஷ்காரருக்கு நேர்ந்த அவமானத்தை நிவர்த்திக்க வேண்டியது மிகவும் அவசியமாயிற்று. ஆகையால் அவர் மிகுந்த யோசனையின்மேல், **ஜெனரல் போலக்** என்பவரின் கீழ் கைபர் கணவாய் மார்க்கமாக ஆப்கானிஸ்தானத்தின்மீது படையெடுக்கும்படி ஓர் சேனையை யனுப்பினர். போலக், முற்றுகை போடப்பட்டிருந்த இரண்டிடங்களையும் விடுவித்து, காபூலையுங் கைப்பற்றினர். அங்கே கைதிகளாக அடைபட்டிருந்த இங்கிலீஷ்காரரும் விடுவிக்கப்பட்டனர். காபூல் கடைத் தெரு முழுவதும் துவம்சமாக்கப்பட்டது. தோஸ்த் முகம்மது கைது நிலையினின்று விடுவிக்கப்பட்டனர். அவரே மறுபடியும் ஆப்கானிஸ்தானத்திற்கு அமீரானர்.

6. **ஸிந்து மாகாணம் ஆங்கிலேயரால் சேர்த்துக்கொள்ளப்பட்டது.** அநேக வருஷ காலமாக, ஸிந்து மாகாணம், பெலூசி அமீர்கள் வசமிருந்தது. முதல் ஆப்கானிய யுத்தம் நடக்கும்போது, அம் மாகாண மார்க்கமாகச் சேனைகள் ஆப்கானிஸ்தானத்திற்குச் செல்வதைத் தடுக்கக்கூடா தென்றும், இங்கிலீஷ் சேனைக்கு வேண்டிய சாமான்களை அவர்கள் கொடுக்க வேண்டு மென்றும், கவர்னர்-ஜெனரல் பெலூசி அமீர்களைக் கேட்டார். அதற்கு அவர்கள், சாமான்கள் கொடுக்க மாட்டோ மென்று சொன்னதுமல்லாமல், தங்கள் நாட்டிற்குள் ஆங்கிலச் சேனை செல்லக்கூடாதென்றும் மறுத்தனர். இதற்காக 1843-ம் வருஷத்தில் **ஸர் சார்லஸ் நேப்பியர்** என்பவரது தலைமையின் கீழ், ஒரு

சேனை அம் மாகாணத்திற்கு அனுப்பப்பட்டது. 1843-ம் வருஷம் **மியாணி**, **ஐதராபாத்** என்னு மிடங்களில் நடந்த சண்டைகளில், அவர் மிகவும் சிரமப்பட்டு, ஸிந்துவின் அமீர்களைத் தோற்கடித்தார். அதே வருஷம் ஸிந்து மாகாணம் கம்பெனி ராஜ்யத்தோடு சேர்க்கப்பட்டது. இக் காரியம் மிகுந்த அநியாயமென்பது நேப்பியருக்கே தெரியும். அதைப் பற்றி அவர் பின்பு மிகவும் வருத்தப்பட்டனர்.

அடுத்த வருஷத்தில் எல்லன்பரோ இந்தியாவினின்று திரும்பியழைக்கப்பட்டார்.



## 16. சீக்கியர் சிங்கம்

1. சென்ற பாடத்திலும், 12-ம் பாடத்திலும் ரஞ்சித் ஸிங் என்ற அரசனைப்பற்றிக் குறிக்கப்பட்ட தல்லவா? அவரைப் பற்றி இங்கு சற்று விவரமாகச் சொல்லுவோம். இவர் பஞ்சாபி லுள்ள சீக்கியர் ஜாதியைச் சேர்ந்தவர். இவருக்கு சீக்கியர் சிங்கமென்றும், பஞ்சாப் சிங்கமென்றும் வேறு பெயர்களுமுண்டு. சீக்கிய ஜாதியாரே மிகவும் சிரேஷ்டர்; அவர்களில் இவரே மிகவுஞ் சிறந்தவர்.

**2.** சீக்கியர் என்பவர், தற்காலத்தில் நமது தேசத்தி லுள்ள ஜனங்களுள் மிகுந்த திடசரீரமும், தைரியமுள்ள வர்கள். இவர்கள் பஞ்சாப் மாகாண வாசிகள். இவர்களின் ஜாதி ஏற்பட்டது, மொகலாய ராஜ்ய ஆரம்பமுதற்கொண்டு தான். சீக்கியர்களென்ற பதத்திற்கு, சீஷர்க ளென்பது பொருள். இவர்கள் ஜாதி, **நானக்** என்பவரால் பாபர் காலத்தில் ஆரம்பிக்கப்பட்டது. அவர் இந்துக்களையும், மகம் மதியரையும் ஒன்று சேர்த்து வைக்குமாறு மிகுந்த பிரயா

சைப்பட்டு, சிக்கிய மதமென்பதை உண்டாக்கினர். இவர் தான் சிக்கியர்களின் முதல் குரு. இவருக்குப் பின் பல குருக்கள் வந்தனர். மத விஷயத்திலும், ராஜ்ய விஷயத்திலும் சிக்கியர்களுக்கு இந்தக் குருக்களைவிட வேறு தலைவர்கள் கிடையாது. சிக்கியர்களிடம் இக் குருக்களுக்கு மிகுந்த செல்வாக்கிருந்தது. அக்பர் காலத்திற்குப் பின் மொகலாய சக்கரவர்த்திகள் (முக்கியமாக அவுரங்கசீப்) இவர்களைத் துன்பப்படுத்தி வந்தனர். குரு அர்ஜுனர், குரு கோவிந்த், குரு பந்தர் முதலியவர்கள் மொகலாய அரசர்களால் கொல்லப்பட்டனர். முகம்மதியரின் பலாத்கார முறைகளை எதிர்க்குமாறு, இவர்கள் தங்கள் குருக்களையே தலைமையாகக் கொண்டு சிறந்த வீரர்களாயினர். மஹாராஷ்டிரர்களைப் போல, இவர்களும், நாளடைவில் மொகலாய ராஜ்யத்திற்கு ஜென்மத்துவேஷிகளாய்விட்டார்கள். தாமெல்லாம் ஒன்று என்பதைத் தெரிவிக்க வேண்டி சிக்கியர் யாவரும் நீண்ட கூந்தலும், தாடியும், நீல வஸ்திரமும், ஸிங் என்ற ஜாதிப் பட்டப்பெயரும் வைத்திருந்தார்கள். இந்த ஜாதியில் பல உட்பிரிவுகளிருந்தன வாயினும், இவர்கள் யாவரும் ஒன்று சேர்ந்து முகம்மதியரைப் பஞ்சாபினின்றுந் துரத்திவிட்டுத் தங்களதிகாரத்தை ஸ்தாபனஞ் செய்துகொண்டார்கள். ஆனல் முகம்மதிய அபாயம் நீங்கிய பின்னர், இவர்களே தமக்குள் சண்டை செய்ய ஆரம்பித்துவிட்டனர். இவர்களையெல்லாம் அடக்கி சிக்கிய ராஜ்யத்தையே ஒழுங்குபடுத்திப் பன்மடங்கு பலப்படுத்தியவர், **ரஞ்ஜித் ஸிங்** என்பவர்.

3. இவர் ஒரு சிக்கியத் தலைவரின் குமாரர்; 1780-ம் வருஷத்தில் பிறந்தவர். பன்னிரண்டாவது வயதிலேயே இவர் தம் பிதிரார்ஜிதசொத்தை யடைந்தார். சிவாஜியைப்

போலவே, இவருக்கு எழுதப் படிக்கத் தெரியாது. அக்பரும் இதே மாதிரிதான். ஆனால் இம் மூவருக்கு முள்ள சாமர்த்தியமும், புத்திநுட்பமும் வேறு எவருக்கும் இருந்ததில்லை. இவர் ராஜாங்க தஸ்தவேஜ்களில் கையொப்பமிடுவதற்குப் பதிலாகத் தம் கை விரலை மஞ்சளில் தொட்டு இரேகைக் குறியை வைத்து வந்தார். மிகப் பெரியதாயிருந்த இவரது ராஜ்யத்தின் வருமானம் ஏராளமாக இருந்தும், அவ் வருமானக் கணக்குகளை ஒரு கழியின் மீது சிறு கத்தியால் அடையாளமிட்டுத் தெரிந்துகொள்வார். இவரை ஒரு விதத்திலேனும் ஏமாற்றுவது துர்லபமான காரியம்.

4. இக்காலத்தில் ஆப்கனிஸ்தானம் அகமத்ஷா அப்தலியின் குமாரராகிய ஜாமான்ஷா என்பவரின் கைவசமிருந்தது. ரஞ்சித் ஸிங்கின் சாமர்த்தியத்தைக் கண்டு மெச்சி அமீர் அவரை லாகூர் கவர்னராக்கினர். அவருக்கு அப்போது வயது பதினறுதான்! மூன்று வருஷகாலமாக ஆப்கானியர் உள்நாட்டுச் சமாசாரத்தில் ஆழ்ந்திருந்தமையால், ரஞ்சித் ஸிங் இதற்குள் தம் சுதந்திரத்தைப் பெற்று அரசராகிவிட்டார். தகுந்த சேனை இருந்தால்தான் ஆங்கிலேயரிட மிருந்தும், ஆப்கானியரிடமிருந்தும் தம் ராஜ்ய சுதந்திரத்தைக் காப்பாற்றக் கூடுமென்பது அவருக்கு நன்ருகத் தெரியும். இதற்காக அவர் பல ஐரோப்பிய தளகர்த்தர்களையும், இஞ்சினீர்களையும், தன் சேனையிலமர்த்தி, அதைப் பலப்படுத்தி உன்னத ஸ்தானத்திற்குக் கொண்டு வந்தார். இவ்வளவு திவ்வியமான சேனையைக் கொண்டு அவர் ஸத்லெஜ் நதி வரையிலுள்ள சிறு ஸீக் தேசங்களை அடக்கி அவைகளைத் தம் ராஜ்யத்தோடு சேர்த்துக்கொண்டார். அந்நதிக்குத் தெற்கேயுள்ள சிற்றரசர்களெல்லாம் பயந்து, தமக்குதவி செய்யும்படி இங்கிலீஷ்காரரை வேண்டினர்கள். அப்

போது, மிண்டோ, கவர்னர்-ஜெனரலாக இருந்தார். அவர் வெகு சாமர்த்தியமாக, ரஞ்சித் ஸிங்கைக் கம்பெனியோடு உடன்படிக்கை யொன்று செய்யுமாறு ஏற்பாடு செய்துவிட்டார். (9-வது பாடம் பார்க்க) அதன்படி அவர் ஸத்லெஜ் நதிதான் தம் ராஜ்யத்தின் தென்எல்லை யென்றும் அதற்குத் தெற்கேயுள்ள சிற்றரசர் நாடுகளைத் தம் தேசத்துடன் சேர்த்துக்கொள்வ தில்லையென்றும் அவர் ஒப்புக்கொண்டார். அவரிருக்கும் வரை இந்த நிபந்தனைகளை மிகுந்த விசுவாசத்துடன் ஆதரித்து வந்தனர். ஆயினும், அவர் மூல்டான், காஸ்மீரம், பிஷாவர் முதலிய பிரதேசங்களை ஜெயித்துத் தம் ராஜ்யத்துடன் சேர்த்துக்கொண்டார். ரஞ்சித் ஸிங் ஆயுளுடனிருந்த வரை, அவருக்கும் ஆங்கிலேயருக்கும் நேசமாகவே யிருந்தது. 1839-ம் வருஷம் அவரிறந்த பின் ராஜ்யம் நிலையற்று, குழப்பம் நிறைந்ததாகி விட்டது. கம்பெனி ராஜ்யத்திற் கபாய மதிகரிக்கவே ஸீக்கியருக்கும், இங்கிலீஷ்காரருக்கும் பின்பு சண்டை கட்டாயம் வந்து தீரவேண்டியிருந்தது. இதைப்பற்றி அடுத்த பாடத்தில் படிப்போம்.



## 17. ஸீக் யுத்தங்கள் : பஞ்சாப் சேர்க்கப்பட்டது

### முதல் ஸீக்கியர் யுத்தம்

1. லார்ட் எல்லன்பரோ இந்தியாவினின்று சென்ற பின் ஸர் **ஹேன்றி ஹார்டிஞ்** என்பவர் கவர்னர் - ஜெனரலாக வந்தார். அவர் இந்தியாவிற்கு வருமுன்னரே காரன்வாலிஸைப்போல் பெரிய யுத்த வீரரெனப் பெயர் வாங்கினவர். ஐரோப்பாவில் நெப்போலியனோடு நடந்த யுத்தத்தில் இவர் ஒரு பெரிய ராணுவ உத்தியோகம் வகித்துச்

சண்டை செய்தார். அதில் இவருக்கு ஒரு கைகூடச் சேதமாயிற்று. இச் சமயத்தில் இது போன்ற வீரர் இந்தியாவிற்குக் கவர்னர் - ஜெனரலாக வந்தது கம்பெனிக்குப் பெரும் பாக்கியமே. ஏனெனில், இப்போதுதான் இங்கிலீஷ்காரருக்கும் ஸீக்கியருக்கும் மிகப் பெரிய போர் ஏற்பட்டது. இதுவரையிலும் இந்தியாவில் ஆங்கிலேயருக் கேற்பட்ட விரோதிகளுக்குள் ஸீக்கியர்களே மிகவும் பயங்கரமானவர்கள். ஆகையால் இவர்களை வெல்வதற்கு மிகவு முயர்ந்த ராணுவத்திறமை இருந்தா லன்றி இங்கிலீஷ்காரருக்கு வெற்றி கிடைப்பது மிகவுமரிது.



ஹென்றி ஹார்டிஞ்

2. இந்த யுத்தத்திற்குக் காரணமென்ன? 1839-ம் வருஷத்தில் ரஞ்சித் ஸிங் இறந்த பின், பாஞ்சால ராஜ்யத்தில் அவர் பட்டத்தை அபேக்ஷித்து நின்றவர் பலராயிருந்தபடியால் குழப்பமதிகமாகி உள்நாட்டுக் கலகம் வருந்தறுவாயி லிருந்தது. ஐந்து வருஷ காலத்திற்குள் நான்கு பேர் அரசரெனப் பேருக்குப் பட்டம் வகித்து முறையாக ஆண்டனர். இவ்விதமாகக் கலகங்களும், கொலைகளும், போர் வதைகளுமான பின்பு கடைசியாக 1844-ம் வருஷம் ரஞ்சித் ஸிங்கின் சிறு குழந்தையாகிய **தலீப்ஸிங்** என்பவர் அரசராக்கப்பட்டு, அவருக்கு ஸீக் ஸர்தார்களெல்லாம் துரைத்தனச் சபையாராக இருந்து, தேசத்தை யாண்டு

வந்தனர். ஆனால் ரஞ்சித் ஸிங்கால் சேர்க்கப்பட்ட பலத்த சேனையை எவரும் அடக்கி யாளுவோர் இல்லாமல் போயிற்று. ஆகையால் அதன் உபத்திரவம் பொறுக்க முடியவில்லை. இராஜ்யத்தில் ராணியும், மந்திரிகளும், ராஜாங்கசபையுமிருந்த போதிலும் தேசத்திலுள்ள சர்வாதிகாரமும், ராணுவத் தலைவர்களடங்கிய **பஞ்ச்** என்ற சபைகளிடத்தி லிருந்தது. இந்த ராணுவத் தலைவர் இட்டதுதான் சட்டம்; இவர்களைத் தடுப்பவர் ராஜ்யத்தில் எவருமே இல்லை. இவர்கள் எப்போதும் யுத்தக் கீர்த்தியையே நாடினவர்கள். இன்னோர் உபத்திரவத்தைப் பொறுக்காது, ராஜாங்க சபையார், ஸத்லெஜ் நதிக்குக் கிழக்கே படையெடுத்துச் செல்லும்படி அனுமதி கொடுத்தார்கள். ரஞ்சித்ஸிங்கோடு நடந்த உடன்படிக்கையின்படி ஸத்லெஜ் நதிதான் ஸீக்கிய நாட்டின் கிழக்கெல்லை என்பது உங்களுக்குத் தெரியும். இந் நதிக்கப்புறம் படையெடுத்தால், மேற்சொன்ன உடன்படிக்கையை மீறிக் கம்பெனியார்மீது சண்டை கூறினதுபோலாகும்.

3. எனினும், உடன்படிக்கையைச் சற்றேனும் மதிக்காமல் 1845-ம் வருஷம் டிஸெம்பர் மாதம் 60,000 பேர்களடங்கிய ஸீக் சேனையொன்று ஸத்லெஜைக் கடந்து பிரோஜ்பூர் நகரைப் பிடித்துக்கொண்டது. இதுதான் யுத்த ஆரம்பம். **ஸர் ஹ்யூ கவ்** என்பவரின் கீழ் ஒரு இங்கிலீஷ் சேனை எதிர்க்கச் சென்றது. அதில் கவர்னர்-ஜெனரலே தளகர்த்தருக் கடுத்த உத்தியோகத்தை வகித்தார். இரண்டு மாதத்திற்குள் **முட்கி, பிரேஸ் ஷா, அலிவால், சோப்ரயான்** என்ற நான்கிடங்களில் பெருத்த யுத்தங்கள் நடந்தன. இவைகளில் இரத்த வெள்ளம் ஆறாக ஓடினது. இவை ஒவ்வொன்றிலும் ஸீக்கியர் தங்கள் ஜாதிக்கேற்ப

மிகுந்த தைரியத்துடனும், வீரத்தனத்துடனும் போர் புரிந்தனர். முக்கியமாகச் சொப்ரயான் என்னுமிடத்தில் அவர்கள் சொல்ல முடியாத வீராவேசத்துடன் சண்டை செய்து, புறங்கொடுத் தோடாது நின்ற இடத்திலேயே ஆயிரக்கணக்காக மாண்டனர். இந் நான்கு சண்டைகளிலும் அவர்களே தோற்கடிக்கப் பட்டனர்; எனினும், ஆங்கிலேயருக் குண்டான சேதத்தையுங் கணக்கிட முடியாது.

4. **லாகூர் உடன்படிக்கை (1846).** இங்கிலீஷ் சேனை பஞ்சாபினுட் பிரவேசித்து லாகூர் வரையிலுஞ் சென்றுவிட்டது. ஆகையால் ஸீக்கியர் சமாதானத்திற்கு வர வேண்டியிருந்தது. இச் சமாதானத்தின்படி, ஸீக்கியர்கள் யுத்தச் செலவிற்காகக் கம்பெனியாருக்கு ஒன்றரைகோடி ரூபாய் கொடுக்க வேண்டி யிருந்தது; தலீப் ஸிங் பஞ்சாப் மகாராஜாவாக அங்கீகரிக்கப்பட்டார்; ஸத்லெஜ்க்கும் ராவி உபநதிக்கும் மத்தியிலுள்ள நாடு கம்பெனி ராஜ்யத்தோடு சேர்த்துக்கொள்ளப்பட்டது; ஸீக் சேனையின் அளவு மிகவுங் குறைக்கப்பட்டது; ஸீக் மஹாராஜா தம் சமஸ்தானத்தில் ஓர் ஆங்கில ரெஸிடென்டையும், தம் தலைநகரில் ஓர் ஆங்கிலச் சேனையையும் வைத்துக்கொள்ளவேண்டி வந்தன.

5. யுத்தச் செலவிற்காகக் கொடுக்க வேண்டிய பணம் லாகூர் பொக்கிஷத்தில் இல்லை. ஆகையால் தலீப் ஸிங் காஸ்மீர ராஜ்யத்தைக் **கோலாப் ஸிங்** என்பவருக்கு 15 லக்ஷ ரூபாய்க்கு விற்றுவிட்டார்.

6. இந்த யுத்தத்தின் வெற்றிக்காகக் கவர்னர்-ஜெனரலுக்கும், தளகர்த்தருக்கும் 'லார்ட்' பட்டங்கள் கொடுக்கப்பட்டன.

---

## இரண்டாவது ஸீக்கியர் யுத்தம்

7. **இரண்டாவது ஸீக்கியர் யுத்தம்.** லாகூர் சமாதானம் நடந்த இரண்டு வருஷத்திற்கெல்லாம் ஹார்டிஞ் இந்தியாவை விட்டுப் போனார். இவருக்குப் பின் **லார்ட் டல்ஹௌஸி** என்பவர் கவர்னர் - ஜெனரலாக வந்தார். இவர் வந்த வருஷமே ஸீக்கியருடன் மற்றொரு முறை சண்டை தொடங்க வேண்டியதாயிற்று.

8. **காரணங்கள்.** முதல் யுத்தத்தில் தோல்வி யடைந்த கால முதற்கொண்டு, ஸீக்கியர்களுக்கு ரோஷமும், கோபமும் நிறைந்திருந்தன. ஸீக்கியர்கள் வீரமிக்க ஜாதியாராகையால் இத் தோல்வியை ஒருபோதும் மறக்கவில்லை; சரியான சமயம் வரும்வரைக்கும் பற்களை நெறித்துக் கொண்டிருந்தார்கள். ஆகையால், லாகூர் சமாதானம் நடந்த நாள் முதற்கொண்டு பஞ்சாப் அரசாங்கத்திற்காக லார்ட் ஹார்டிங் செய்த ஏற்பாடுகள் சரியாகவே நடந்தேற வில்லை. **மூல்டான்** என்னுமிடத்தில்தான் முதல் முதலில் குழப்பம் ஆரம்பமாயிற்று. அவ்விடத்தில் ஸீக் கவர்னராயிருந்த **மூல்ராஜ்** என்பவர், லாகூர் சமஸ்தானத்திற்குச் செலுத்த வேண்டிய கப்பத்தைக் கொடுக்க மாட்டேன் என்றார். இதற்குக் காரணம் யாதெனில், லாகூரில் இங்கிலீஷ்காரரின் அதிகாரம் பெருகிக்கொண்டு வந்ததுதான். அவரிடம் கப்பங் கேட்டபோது அவர் தம் வேலையை ராஜிநாமா செய்து விடுவதாகச் சொன்னார். உடனே அவருடைய ராஜிநாமாவை அங்கீகரித்து, அவருக்குப் பிரதி வேறு கவர்னரை நியமிப்பதற்காக, இரண்டு ஆங்கில உத்தியோகஸ்தர்கள் அவ்விடத்திற்கு அனுப்பப் பட்டனர். ஆனால் அவர்க ளங்கு சென்ற நிமிஷமே கொலையுண்டனர். இக் கொலைக்கு மூல்ராஜ்தான் காரண மென்பதற்குச் சற்றும் ஐயமில்லை; ஆகை

யால் அவரைக் கண்டிக்கும் பொருட்டு, ஸீக்கியர்களும், ஆங்கிலேயருங் கலந்ததோர் சேனை மூல்டானுக்கு அனுப்பப்பட்டது. இச்சேனை அந்நகர் சேர்ந்தவுடனே ஸீக்கியர்கள் மூல்ராஜ் பக்கஞ் சென்றுவிட்டார்கள். மூல்ராஜின் கலகம் மண்ணெண்ணெய் சொரிந்த கூரையில் தீப்பந்தம் நீட்டினது போலாயிற்று. தேசமெங்கும் குபீரென்று இங்கிலீஷ்காரருக்கு விரோதமாகக் கலகங்கள் கிளம்பிவிட்டன. (முதல் மஹாராஷ்டிரர் யுத்தத்தையும், ஆப்கானிய யுத்தத்தையும் பார்க்க) இதற்கேற்பக் காலமுங் கோடைகாலமாயிருந்தபடியால், இங்கிலீஷ் சேனையை உடனே அனுப்ப முடியவில்லை. இக்கால தாமதத்திற்குள் கலகம் தேசமெங்கும் பரவிவிட்டது; பஞ்சாப் மாகாணமெங்கும் ஸீக்கியர்கள் ஆயுதபாணிகளாய்விட்டார்கள். ஸீக் ஸர்தார்களுள் மிகுந்த செல்வாக்குடைய **ஷேர் ஸிங்** என்பவர் இப்பெருங் கலகத்திற்குத் தலைவராகிப் பெருத்த சேனைகளைச் சேர்த்துவிட்டார்.

9. டல்ஹௌஸி இக்கலகத்தின் அபாயத்தை முற்றிலுமறிந்தவராகி யுத்தத்திற்கு வேண்டிய ஏற்பாடுகள் செய்ய வேண்டி 1848-ம் வருஷம் அக்டோபர் மாதம் தாமே நேரில் பஞ்சாபுக்குச் சென்றார். அடுத்த வருஷம் ஆரம்பத்தில் **சிலியன் வாலா** என்னுமிடத்தில் மிகுந்த கோரமான யுத்தமொன்று நடந்தது. ஸீக்கியர்கள் யுத்தகளத்தினின்று துரத்தப்படுமுன், 2400 இங்கிலீஷ் வீரர்களும் உத்தியோகஸ்தர்களும் மாண்டனர். ஆனால், ஸீக்கியர் களைத்துப் போகாததால் யுத்தத்திற்குத் தயாராயிருந்தார். ஆகையால் இச்சண்டையில் ஒருவரும் வெற்றியடையவில்லை. இது நடந்த ஒரு மாதத்திற்கெல்லாம் **குஜரத்** என்னுமிடத்தில் மற்றொரு பெரிய சண்டை நடந்தது. சண்டை ஆரம்பமாகி வெகு காலம் வரை ஜெயம் யாருக்கென்று தெரியாமலிருந்தது.

ஆனால், முடிவில் இங்கிலீஷ்காரரே முழுவெற்றி பெற்றனர். இதில் ஸீக்கியர் முற்றிலுந் தோற்கப்பட்டபடியால், அவர்களின் நம்பிக்கை முற்றிலுந் தீர்ந்துவிட்டது. இதனோடு ஸீக்கியர் யுத்தம் ஒழிந்ததெனச் சொல்லலாம்.

10. இது முடிந்ததும், டல்ஹௌஸி பஞ்சாபின் ராஜ்ய பரிபாலனத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்தார். இவ்வளவு முக்கியமான பஞ்சாப் மாகாணத்தையும், இவ்வளவு தைரியமான ஸீக்கியர்களையும் விட்டுவைப்பது உசிதமில்லையென்று, டல்ஹௌஸி பஞ்சாபைக் கம்பெனி ராஜ்யத்தோடு சேர்த்துக்கொள்ள நிச்சயித்துவிட்டார். தலீப் ஸிங்குக்கு ஐந்து லக்ஷ ரூபாய் பென்ஷன் கொடுத்து அவரைக் கவர்னர்-ஜெனரல் பட்டத்தினின்று நீக்கிவிட்டார். மூல்ராஜ், ஆயுள்வரை சிறைச்சாலையி லிருக்கும்படி தண்டனை விதிக்கப்பட்டார். டல்ஹௌஸி ராஜ தந்திரத்தில் மிகவும் சாமர்த்திய முடையவராகையால், பஞ்சாப் ஜனங்களுக்கு மனம் நோவாமலிருக்கும்படியான கவர்ன்மெண்டை அவர் அம்மாகாணத்திற்கு ஏற்பாடு செய்தனர். ஸீக் வீரரில் அனேகர் கம்பெனி சேனையில் எடுத்துக்கொள்ளப்பட்டனர். ஸர்தார்களிலனேகருக்கு அவர்களின் பூஸ்திதிகள் திருப்பிக்கொடுக்கப்பட்டன; ஆனால் அவர்களின் அதிகாரம் மிகவும் குறைக்கப்பட்டது. பஞ்சாபின் பரிபாலனத்திற்காக அனுபோகமும் சாமர்த்தியமும் மிகுந்த உத்தியோகஸ்தர்கள் தேர்ந்தெடுக்கப் பட்டார்கள். இவர்களில் முக்கியமானவர்கள் **ஹென்றி லாரேன்ஸ், ஜான் லாரேன்ஸ்** என்ற இரு சகோதரர்கள். இவர்கள் ஜனங்களின் மனங் கோணாமல் நிர்வாகஞ் செய்தமையாலும், ராணுவ ஏற்பாடுகள் சரிவரச் செய்தமையாலும் ஆங்கிலேயருக்கு விரோதமாகப் பஞ்சாபில் கலகங்கள் உண்டாகவில்லை. இதோடு நிற்காமல், பத்துவருஷத்

திற்கப்புறம் வட இந்தியாவெங்கும் பலத்த கலகம் கிளம்பியபோது, ஸீக்கியர்களே இங்கிலீஷ் கவர்ன்மெண்டுக்கு மிகவுஞ் சாதகமா யிருந்தார்கள். இந்தியாவை ஆப்கானியர்களினின்றுங் காக்கும்பொருட்டு, வடமேற்குப் பிரதேசத்தில் அநேகங் கோட்டைகள் கட்டப்பட்டன. தேசமெங்கும் ரஸ்தாக்களும், பாசன சாதகங்களும் அமைக்கப்பட்டன.



## 18. தற்கால இந்தியா ஆரம்பம்

### லார்ட் டல்ஹௌஸி

1. இப் பாடத்தில், நாம் பிரத்தியக்ஷமாகப் பார்ப்பதுபோல ரெயில்வேக்களும், தந்திகளும், நல்ல ரஸ்தாக்களும், விவசாயக் கால்வாய்களும், தபாலாபீஸ்களும், ஆஸ்பத்திரிகளும், கல்விக் கழகங்களும், சர்வகலாசாலைகளும் நிறைந்த நவீன இந்திய சரித்திர ஆரம்பத்தைப் பற்றி நாம் படிப்போம். இக் காலத்தில் பிஷாவர் முதல் கன்னியாகுமரி வரையிலும், வங்காள முதல் கூர்ஜர தேசம் வரையிலும் இந்தியா முழுவதும் ஒன்று சேர்க்கப்பட்டது. இவ்வளவு முக்கிய மாறுபாடுகளையும், சீர்திருத்தங்களையும் ஆரம்பித்த இராஜ நீதி நிபுணர் **லார்ட் டல்ஹௌஸி** என்பவர். இவர் நமது தேசத்திற்குக் கவர்னர்-ஜெனரலாக வரும்போது இவருக்கு வயது முப்பத்தைந்தே. எனினும், இவரைப் போன்ற பகுத்தறிவும், புத்தி நுட்பமும், சாமர்த்தியமும் சில கவர்னர்-ஜெனரல்களுக்குத்தான் இருந்தன. இவர் இந்தியாவிற்கு வரு முன்னரே, இங்கிலாந்தில் ராஜீய விஷயங்களில் மிகுந்த அனுபோகங் கொண்டவர்.

2. இவர் உத்தியோகத்திலிருந்தபோது நடந்த வர்த்தமானத்தை இரு பிரிவாகப் பிரிக்கலாம்: முதலாவது, ராஜ்யங்களைச் சேர்த்தது; இரண்டாவது, உள் நாட்டுச் சீர்திருத்தங்கள். முதலில் ராஜ்ய அபிவிருத்தியைப் பற்றி நோக்குவோம். கம்பெனி ராஜ்யத்தை விருத்தி செய்யும் விஷயத்தில் இவர் க்ளைவ், வெல்லெஸ்லி, ஹேஸ்டிங்ஸ் முதலியவர்களைப் போன்றவர். இவர் உத்தியோகத்தை வகித்தவுடன் நடந்த இரண்டாவது ஸீக்யுத்தத்தைப் பற்றியும், பஞ்சாப் கம்பெனி ராஜ்யத்தோடு சேர்க்கப்பட்ட விஷயத்தைப்பற்றியும் நீங்கள் சென்ற பாடத்தில் படித்தீர்கள்.

3. **இரண்டாவ்து பர்மா யுத்தம்.**— ரங்கூனிலிருந்த ஆங்கில வியாபாரிகள் தூண்டுதலின் மேல், டல்ஹௌஸி, பர்மா அரசன் மீது யுத்தங் கூறினர் (1852). இதற்கு இரண்டாவது பர்மா யுத்தம் என்று பெயர். இங்கிலீஷ் சேனை வெகு இலகுவாக **ரங்கூன், மர்டபான், ப்ரோம், பேகு** முதலிய இடங்களைப் பிடித்துவிட்டது. பர்மா அரசர் இங்கிலீஷ்காரர் இஷ்டப்படி சமாதானத்திற்கு வர மாட்டே னென்றதற்குப் பலனாக அவர் பட்டத்தினின்று நீக்கப்பட்டு மீதி யுள்ள அவர் தேசமும் கம்பெனி ராஜ்யத்தோடு சேர்க்கப்பட்டது.

4. **சந்ததியற்ற ராஜ்யங்களைச் சேர்க்கும் விதி:**—புத்திரனில்லாதவர்கள், சுவீகாரமாவது எடுத்துக்கொள்ளுவது வழக்கம். ஆனால், டல்ஹௌஸி சுதேச ராஜ்யங்கள் மிகக் கெட்டவை என்ற அபிப்பிராயம் மேற்கொண்டவராகி அவைகளைக் கூடுமானவரை ஆங்கில ராஜ்யத்தோடு சேர்த்துக்கொள்ள எண்ணங் கொண்டனர். இக் காரணத்தால் அவர் புத்திர ரில்லாமலிருக்கும் சுதேச அரசர் ராஜ்யங்கள் அவர்கள் இறந்தபின் “ கம்பெனிக்குச் சேரவேண்டிய

தென்று உத்தரவிட்டார். அப்படியும் மன்னர்கள் ஸ்வீகாரஞ் செய்துகொண்டால் அப்புத்திரர் ராஜ்யத்தை அடையும் உரிமையைப் பெறார். இவ்விதமாக **சதாரா, நாகப்பூர், ஜான்ஸி, ஜபல்பூர், உதயபூர்** முதலிய சிற்றரசர்கள் சந்ததியற்று இறக்கவே அவர்களுடைய ராஜ்யங்கள் ஆங்கில ராஜ்யத்தோடு சேர்க்கப்பட்டன.

5. **பட்டங்களும் பென்ஷன்களும் நிறுத்தப்பட்டன.** கர்னாடக ராஜாவுக்கும், தஞ்சாவூர் ராஜாவுக்கும் பென்ஷன் கொடுத்துவிட்டு, அவர்கள் ராஜ்யங்களை வெல்லெஸ்லி கம்பெனி ராஜ்யத்தோடு சேர்த்து விட்டாரென நீங்கள் படித்தீர்களல்லவா? இந்தப் பென்ஷனோடு கூட அவர்களுக்கு, நவாப், ராஜா என்ற பட்டங்கள் முறைப்படியே இருந்தன. டல்ஹௌஸி கவர்னர்-ஜெனரலாக வந்தவுடன், அவர்களுக்கிருந்த பட்டங்களையும் உபகாரச் சம்பளத்தையும் நிறுத்தி விட்டார். இதேமாதிரி 1853-ம் வருஷம் பாஜிராவ் சந்ததியற்று இறந்தவுடன், அவருக்குக் கொடுத்துவந்த எட்டு லக்ஷ ரூபாய் பென்ஷனும் அவரது ஸ்வீகார புத்திரராகிய **நானா ஸாகிப்** என்பவருக்குக் கொடாமல் கவர்னர்-ஜெனரலால் நிறுத்தி விடப்பட்டது. இச்சமயத்தில் டில்லியில் **பகதூர் ஷா** என்ற மொகலாய சந்ததியைச் சார்ந்தவர் பெயருக்குச் சக்கரவர்த்தியாக இருந்தார். அவர் இறந்தபின், அவருடைய குடும்பம் டில்லி அரண்மனையில் இருக்கக் கூடாதென்று டல்ஹௌஸி அறிக்கை செய்தனர். இவர்களின் வயிற்றெரிச்சல் எவ்வாறிருக்குமென்று நீங்கள் நினைத்துப் பாருங்கள்.

6. **பீரார் சேர்க்கப்பட்டது.** 1801-ம் வருஷ உடன்படிக்கையின்படி, ஐதராபாத்தில் ஓர் இங்கிலீஷ் சேனை வைத்துக்கொள்வதாக நிஜாம் ஒப்புக்கொண்டார்; அதன்

செலவிற்காக அவர் கம்பெனிக்குப் பணம் செலுத்த வேண்டியிருந்தது. சில வருஷங்களாக இப்பணம் செலுத்தப்படாமலிருந்தபடியால், தொகை அதிகமாயிற்று. இதற்காகப் **பீரார்** மாகாணத்தைக் கொடுத்துவிடும்படி, கவர்னர்-ஜெனரல் நிஜாமை ஏற்பாடுசெய்துவிட்டார். இதன் வரும்படியினின்று சேனைச்செலவைக் கொடுக்கலாயிற்று.

7. **அயோத்தி சேர்க்கப்பட்டது.** வெல்லெஸ்லி காலத்தில் அயோத்தி நவாப் கம்பெனியோடுகூட உபகார நியமன உடன்படிக்கையொன்று செய்துகொண்டாரென்று நீங்கள் படித்திர்கள்ளல்லவா? அதன்படி வெளிநாட்டு சத்துருக்களினின்றும், உள்நாட்டுக் கலகங்களினின்றும் நவாபைக் காப்பதற்காக இங்கிலீஷ் சேனையொன்று வைக்கப்பட்டிருந்தது. தம் சமஸ்தானத்தை எவராலும் அசைக்க முடியாதென்ற தைரிய மிகுதியால் இவர் தம் இஷ்டப்படி அரசாண்டுவந்தார். சாதாரண ஜனங்கள் இவரது உபத்திரவத்தாலும், இவரைச் சூழ்ந்த பிரபுக்களினுபத்திரவத்தாலும் மிகவுங் கஷ்டப்பட்டனர். இதுநிமித்தம், இவருக்குத் தம் ராஜ்யத்தைச் சரியாய் ஆளவேண்டுமென்று பன்முறை எச்சரிக்கை கொடுக்கப்பட்டது. ஆனால், இவர் அதைச் சற்றுங் கவனியாது முன்போலவேநடந்துவந்தார். இக்காரணம்பற்றி டல்ஹௌஸி இவரைப் பட்டத்தினின்றும் விலக்கி உபசாரச் சம்பளங் கொடுத்து, கல்கத்தாவுக்கு அனுப்பிவிட்டு, அயோத்தியைக் கம்பெனி ராஜ்யத்தோடு சேர்த்துக் கொண்டார். அயோத்தி மாகாணம் இந்தியாவில் மிகுந்த செழிப்பான இடங்களிலொன்று; இம் மாகாணந்தான் கடைசியாக டல்ஹௌஸியால் சேர்க்கப்பட்ட பிரதேசம்.

8. **தேச முன்னேற்றம்.** டல்ஹௌஸி காலத்தில்தான் தற்காலத்தில் நமது தேசத்தில் உள்ள ஆங்கில ராஜ்யத்தின்

முழு விஸ்தீரணமும் அனேகமாய் ஏற்பட்டது. ஆனால் அவருடைய சாமர்த்தியத்தை ராஜ்யங்களைச் சேர்த்ததி னின்று மட்டும் அளவிடல் கூடாது. தற்காலத்தில் தேச மெங்கும் ஒரே வலையை விரித்தாற்போ லிருக்கும் ரெயில் வேக்கள் டல்ஹௌஸி கவர்னர்-ஜெனரலா யிருக்கும்போது தான் ஆரம்பிக்கப்பட்டவை. நொடி நேரத்திற்குள் ஆயிரக் கணக்கான மைல்கள் பறக்கும் மின்சாரத் தந்திகளும் இவர் காலத்தில்தான் தொடங்கப்பட்டன. ரஸ்தாக்கள் போடுவ தற்கும், பாலங்கள் கட்டுவதற்கும், கால்வாய்கள் வெட்டு வதற்கும் வியாபாரத்தையும், வியவசாயத்தையும் அபி விருத்தி செய்வதற்கும் தனித் தனி இலாக்காக்கள் இவரால் ஏற்படுத்தப்பட்டன. இவர் நாளிலேதான் தபால்வசதி தேசத்தின் ஒவ்வொரு பாகத்திற்கும் அமைக்கப்பட்டது. இவர்தான், தேசத்தின் எப்பாகமா யிருந்தாலுஞ் சரி, எவ்வளவு தூரமாயிருந்தாலுஞ் சரி, காலணா கார்டு அரையணா கவர்களே போதுமானவை என்று ஏற்பாடு செய்தவர்.

9. இந்திய ஸிவில் ஸெர்விஸ் உத்தியோகங்களுக்காக அபேக்ஷகர்களைத் தேர்ந்தெடுக்கும் பரீக்ஷைக்கு ஐரோப் பியரோடு இந்தியர்களும் போட்டி போடலாமென்று இவர் சட்ட மூலமாக அனுமதி கொடுத்தார். இவர் காலத்தில் தான் முதல் முதலாகச் சட்டசபை ஏற்படுத்தப்பட்டது. வித்தியா அபிவிருத்திக்காகவும் இவர் வேண்டிய முயற்சி கள் செய்தார்; ஒவ்வொரு முக்கிய மாகாணத்திலும் சர்வ கலாசாலையும், காலேஜ்களும் ஏற்படுத்தினர். எலிமென்டரி பாடசாலைகளுக்கு சர்க்கார் கிராண்ட் கொடுக்கும் வழக்கம் இவர் காலத்தில்தான் ஆரம்பிக்கப்பட்டது.

10. சுதேச விசுவாசத்திலும், உத்தியோக விஷயங் களில் உழைப்பதிலும் டல்ஹௌஸிக்கு மிஞ்சினவர் எவருங்

கிடையார். இவர் நமது தேசத்திற்கு வரும்போது பலமும் உற்சாகமும் நிறைந்த வாலிபரா யிருந்தார். இவர் எட்டு வருஷகாலம் ஓய்வு சாய்வு இல்லாமல் வேலை செய்தமையால் இவருடம்பு மிகவும் இளைத்துக் கெட்டுப் போயிற்று. இக் காரணத்தால் இவர் வேலைவிட்டு நீங்கிய நான்கு வருஷத்திற் கெல்லாம் இறந்தனர். இவர் இறக்கும்போது இவருக்கு வயது நாற்பத்தெட்டே.



## 19. ஆங்கில ஆட்சிக்கோர் கண்டம்

1. லார்ட் க்ளைவ காலமுதற்கொண்டு, டல்ஹௌஸி காலம் வரை, இங்கிலீஷ்காரருக்கு ஜயபேரிகை யடித்த வாறே இருந்தது. சிறிது சிறிதாகத் தேசமெங்கும் தங்கள் அதிகாரத்தைப் பரவச்செய்து, அநேகமாய்த் தேச முழுவதையுமே தங்களாட்சிக்குள் கொண்டுவந்து விட்டனர். இந்தியாவில் ஆங்கிலேயர் ஜெயித்த யுத்தங்களும் சண்டைகளும் அவர்களது பராக்கிரமத்தால் மட்டும் நடந்தவையல்ல. ஒவ்வொரு ஆங்கில சேனையிலும் எப்போதும் ஐந்தில் நான்கு பங்கு நம் தேசத்து சிப்பாய்க ளிருந்து வந்தனர்; ஐந்தில் ஒரு பங்குதான் ஐரோப்பியர். இதோடு, நமது தேசத்தில் இங்கிலீஷ்காரராகத் தனி நின்று செய்த யுத்தங்கள் மிகவும் சொல்பமே. அநேகமாய் ஒவ்வொரு யுத்தத்திலும் எவராவது ஒரு சுதேச மன்னர் மற்றொருவருக்கு விரோதமாக ஆங்கிலேயருக்கு உதவி செய்து வந்தனர். ஆகவே இங்கிலீஷ்காரரின் நோக்கம் மிகவும் எளிதாகவே கைகூடிற்று. இக் காலங்களி லெல்லாம் தேசமெங்கும் சமாதானம் கொடுக்கக் கூடிய வேறு சுதேச ஆட்சி இல்லாமற்போனதால், சாதாரண ஜனங்களும் ஆங்

கில அரசாட்சியையே போற்றி வந்தனர். இக் காரணத்தினுல்தான், இதுகால பரியந்தம் கம்பெனி ராஜ்யத்தில் உள்நாட்டுக் கலகங்க ளொன்றும் ஏற்பட வில்லை. ஆனுல், டல்ஹௌஸி இந்தியாவை விட்டுப் போன வருஷமே வட இந்தியாவெங்கும் திடீரென்று ஒரு பெருத்த கலகம் கிளம்பிவிட்டது. இதுதான், ஆங்கில அரசாட்சிக்கு இந்தியாவிலேற்பட்ட பெருங் கண்டம். இதற்கு 'இந்தியப் பெருங் கலகம்' என்று பெயர்.

2. **கலகத்திற்குக் காரணங்கள் :—** இப் பெருங் கலகம் நேர்ந்ததற்குக் காரணங்க ளென்ன ? இவைகள் பலவுள. இவைகளை முக்கியமாக இரண்டு பிரிவுகளாக வகுக்கலாம் : (1) இராஜாங்க காரணங்கள் ; (2) இராணுவ காரணங்கள்.

3. **இராஜாங்க காரணங்கள் :—** ஆங்கிலேயர் நமது தேசத்திற்கு வந்து இராஜ்யங்களைக் கைக்கொள்ள ஆரம்பித்த தினமுதல், அவர்களை எப்படியாவது தேசத்தினின்றும் துரத்திவிட வேண்டுமென்று, பல சுதேச மன்னர்கள் எண்ணங்கொண்டிருந்தார்கள். ஆனுல் அவர்கள் ஒற்றுமையில்லா திருந்தபடியால், ஒருவர் பின் ஒருவராகத் தோற்கடிக்கப்பட்டு இராஜ்யங்களையு மிழக்க வேண்டி யிருந்தது. ஆனுல் இவர்களுக்கும், இவர்கள் சந்ததியாருக்கும் ஆங்கிலேயர் மீதிருந்த துவேஷமும், வெறுப்பும் சொல்லிமுடியா. இதனுடன்கூட, டல்ஹௌஸி செய்த செய்கைகள் தேசமெங்கும் அச்சத்தையும், அருவருப்பையும் உண்டாக்கிவிட்டன. "சந்ததி யற்ற காரணத்தினுல் மட்டும் இங்கிலீஷ் கவர்ன்மெண்டார் சுதேச இராஜ்யங்களைச் சேர்த்துவிடுவ தென்ருல், நமது கதி என்னுவது ?" என்று ஒவ்வொரு சுதேச அரசரும் யோசிக்கலானுர்கள். டல்ஹௌஸியின் கொள்கைக்கு இலக்கான நாகப்பூர், ஸதாரா முதலிய

இடங்களின் இராஜ சந்ததிகள் ஆங்கிலேயருக்கு ஜென்ம துவேஷிகளாயினர். இவர்களில் முக்கியமானவர் **நாஞ ஸாகிப்** என்பவர். இவரைப்பற்றி நீங்கள் சென்ற பாடத்தில் படித்தீர்கள். இவரே கலகத்தில் மிகுந்த முக்கிய பாகமெடுத்துக்கொண்டார்.

4. சாதாரண ஜனங்களுக்கும் வர வர இங்கிலீஷ்காரர் மீது அதிருப்தி விழ ஆரம்பித்தது. பரம்பரையாக டில்லியினின்று பாதுஷாக்கள் தேசமெங்கும் அரசாங்கம் செய்வதற்குப் பதிலாக இப்போது வெகு தூரத்தினின்று வந்த அன்னியர்கள் அரசாங்கம் செய்வது அவர்களுக்குப் பிடிக்கவில்லை. டில்லியி லிருந்த பாதுஷாவி னதிகாரம் மிகவும் அற்பமா யிருந்தபோதும் வட இந்திய ஜனங்களுக்கு டில்லியின் மீதும், டில்லி பாதுஷாவின் மீது மிருந்த பற்றுதல் விடவில்லை. ஆகையால், டல்ஹௌஸி, கடைசிப் பாதுஷாவாகிய **பகதூர்ஷா**வின் சந்ததிகள் டில்லி அரண்மனையி லிருக்கக் கூடாதென்று அறிக்கை செய்தவுடன், தேசமெங்கும் (முக்கியமாக மகம்மதியருள்) ஒரு வித நடுநடுக்கமும், கோபமும் உண்டாயின.

5. இது தவிர, நமது தேசத்து ஜனங்களுக்கு ஐரோப்பிய நாகரிகமே விளங்க வில்லை. அவர்கள் சட்ட திட்டங்களும், பழக்க வழக்கங்களும் நம் நாட்டாருக்குப் பொருந்தவுமில்லை. இதற்கேற்றாற்போல், சில கிறிஸ்தவப் பாதிரிகளும் இந்தியரைக் கிறிஸ்தவர்களாக்கிவிட வேண்டுமென்று இங்கும், இங்கிலாந்திலும் பகிரங்கமாகச் சொல்லி வந்தனர். அப் பாதிரிகள் ஆங்கிலேயரா யிருந்தபடியால், ஆங்கிலேய அரசாட்சியேஇந்து, மகம்மதிய மதங்களைக்கெடுத்து, தமது நாகரிகத்திற்கே தீங்கு விளைவிக்க வந்ததாகச் சாதாரண ஜனங்கள் எண்ணினார்கள். இதற்கேற்ப, ஆங்கில அரசாங்

கத்தின் மேற் கூறிய விரோதிகள், தேச மெங்குஞ் சென்று இங்கிலீஷ்காரருக்கு விரோதமாகப் பிரசங்கங்கள் செய்து, ஜனங்களின் மனதைக் குழப்பிவிட்டனர். இதே சமயத்தில், சிலர், பிளாஸி யுத்தம் நடந்த 100 வருஷ காலந்தான் ஆங்கில அரசாங்கம் இந்தியாவி லிருக்கும் என்று ஜோஸ்ய புஸ்தகங்களி லிருப்பதாக வதந்தி கட்டிவிட்டனர். இன்ன தினத்தில் கலக வாரம்பஞ் செய்யப்பட வேண்டு மென்கிற அடையாளமாக, ஊரெங்கும் பரம ரகசியமாக ரொட்டித் துண்டுகள் பங்கிட்டுக் கொடுக்கப்பட்டன. ஆகையால் கல கத்திற்கு யாவரும் சித்தமாயிருந்தனர்.

6. **இராணுவ காரணங்கள்:—** இங்கிலீஷ்காரரின் துர் அதிர்ஷ்டமாக இச் சமயம் சிப்பாய்களும் கலகஞ் செய்ய சித்த முடையவர்களா யிருந்தார்கள். சிப்பாய்களுக்குள் மனக் குறைவு வைத்ததுதான், இங்கிலீஷ்காரர் செய்த பெருந் தவறு. அவர்களுக்குச் சம்பளம் மிகவும் குறைவு; வேலையோ அதிகம். அவர்களை அதிகாரிகள் நடத்தி வந்த விதமும் சரியானவை யல்ல. அவர்கள், பர்மா யுத்தம் முதலிய சமயங்களில் கடலைத் தாண்டிச் சண்டை செய்ய வேண்டியிருந்தது. இது இராணுவத்தி லிருக்கும் மேல் ஜாதி சிப்பாய்களுக்குச் சற்றேனும் பிடிக்கவில்லை. இதற் குக் காரணம் யாதெனில், நம் நாட்டுப் பழைய வழக்கத் தின்படி, மேல் ஜாதியார் கடற்பிரயாணஞ் செய்தால் ஜாதி விட்டு நீக்கப்படுவாரென்ற பயமே. இதற்கேற்ப, சிப்பாய் களுக்குக் கொடுக்கப்பட் டிருக்கும் தோட்டாக்களில் கொழுப்புத் தடவப்பட் டிருந்தது. அதைக் கலகக்காரர், இந்து சிப்பாய்களிடஞ் சென்று பசுவின் கொழுப்பெனவும், மகம்மதிய சிப்பாய்களிடம் போய் அது பன்றியின் கொழுப் பெனவுஞ் சொல்லிவிட்டனர். பசு என்பது, இந்துக்

களுக்குத் தெய்வத்திற் கொப்பானது. ஆகையால் அதன் கொழுப்பைத் தடவுவதற்காக அது கொல்லப்படுகின்றது என்பதைக் கேட்டவுடன், அவர்களுக்குக் கடுங் கோப முண்டாகிவிட்டது. மகம்மதியருக்குப் பன்றி யென்றால் போதும்; வெறி பிடித்தவர்கள்போ லாய்விடுவார்கள். ஆகவே, வட இந்திய சிப்பாய்கள் யாவரும் யுத்தஞ் செய்யச் சித்தமாய்விட்டனர். இச் சமயத்தில், இங்கிலீஷ் இராணுவத்தில் ஐந்திலொரு மடங்குகூட வெள்ளைக்காரர்களில்லை. இவர்களை ஒரு நிமிஷம் நசுக்கிவிடலா மென்ற தைரியம் சிப்பாய்களுக்கு அதிகமாயிருந்தது.

**7. கலகத்தின் ஆரம்பம் :—** 1857 - ம் வருஷம் மே மாதம், இதுவரை கனிந்துகொண் டிருந்த கலகம் திடீரென்று **மீரட்** என்னும் நகரில் ஆரம்பித்தது. சில சிப்பாய்கள் கொழுப்பு தடவிய தோட்டாக்களைத் தொட மாட்டோ மென்று மறுத்தனர். அவர்களை ஜெயிலுக்குக் கொண்டுபோகப் படும்போது, பக்கத்தில் சும்மா யிருந்த சிப்பாய்களைப் பார்த்து அவர்கள் பயங்காளிக ளென்றும் பெண்களென்றும் கேலி பண்ணினார்கள். மறுநாட் காலை, மற்றச் சிப்பாய்கள் குபீரென்று கலகத்தில் கிளம்பி விட்டார்கள். கலகக்காரர்கள் இங்கிலீஷ்காரர் வீடுகளைக் கொளுத்தி, அவர்களைக் கொன்று, கைதிகளை விடுவித்தனர். இவ் வேலை முடிந்தவுடன், சிப்பாய்கள் நேரில் டில்லிக்குச் சென்றனர். இவர்கள் அங்குச் சேர்ந்தவுடன், அங்குள்ள சிப்பாய்களும், போக்கிரிகளும் இவர்களுடன் சேர்ந்து கொண்டு ஐரோப்பியர்களையும், கிறிஸ்தவர்களையுங் கொன்று **பகதூர்ஷாவைப் பாதுஷாவெனப் பறைசாற்றி வாழ்த்தினார்கள்.** இது நடந்த சிறிது காலத்திற் கெல்லாம், வங்காளம், அயோத்தி, வடமேற்கு மாகாணங்கள் முதலிய வட இந்

தியப் பிரதேசமெல்லாம் கலகம் பரவிவிட்டது. கலகம் பரவிய இடங்களிலிருந்த சிப்பாய்க ளெல்லாம், மீரட்டில் போலவே கிளம்பி, கைதிகளை விடுவித்து, ஐரோப்பியர் களைக் கொன்று, பொக்கிஷ சாலைகளையும், களஞ்சியங்களை யுங் கொள்ளையிட்டு, வெடிமருந்துக் கிடங்குகளிலும், படை வீடுகளிலுமுள்ள துப்பாக்கிகளையும், வெடி மருந்தையும் அபகரித்துக்கொண்டார்கள்.

8. இங்கிலீஷ்காரரின் நிலைமை அப்போது எவ்வா றிருந்ததென்று நீங்கள் யோசித்துப் பாருங்கள். யுத்தப் பயிற்சியில் சிறந்த சிப்பாய்களை எதிர்ப்பதற்குக் கொஞ்சம் இங்கிலீஷ்வீரரே இருந்தனர். இவர்களையும் இலகுவாக ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்குக் கொண்டுபோவது மிகவும் கஷ்டம். தேசமெங்கும் யாவரும் பகையாயிருந் தனர். அக்காலத்தில் சிறிது தூரத்திற்கே ரெயில்பாதைகள் போடப்பட்டிருந்தன. ஆகையால், இச்சமயத்தில் கவர்னர்-ஜெனராலாயிருந்த லார்ட் கானிங் மிகவும் கஷ்டப்பட வேண் டியிருந்தது. ஆனால் அவர், அந்த நெருக்கடியான காலத்தும் மிகுந்த தைரியத்தையும், முன் யோசனையையும், சாந்த குணத்தையும் மட்டும் விட்டுவிட வில்லை. இவரின் மேன்மையான குணங்கள்தான் கலகத்தை அடக்கின.

9. **சான்பூரில் கலகம்:— டில்லி, லக்ஷ்மணபுரம்,** கான் **பூர்** என்ற மூன்று இடங்களே கலகத்தின் பிரதான இடங்க ளென்று சொல்லலாம். கான்பூருக் கடுத்துள்ள பிதூர் என்னு மிடத்தில்தான், நானாஸாகிப் வசித்து வந்தார். கான்பூரில் நடந்த கலகத்திற்கு இவரே முக்கிய தலைவரா யிருந்தார். இவ்விடத்தில் சுமார் 500 இங்கிலீஷ் வீரர்கள் இருந்தனர். அவர்க ளிருந்த இடம் இருபது நாள் முற்றுகை யிடப்பட்டது. அதற்குப் பின் அவர்களால்

சகிக்க முடியவில்லை. இச் சமயத்தில் நானுஸாகிபும் அவர்களைப் பத்திரமாய்க் கங்கை நதியைத் தோணியாற் கடத்திக் கொண்டுபோய் அலகபாத்தில் சேர்த்துவிடுவதாகச் சொன்னதின்மேல், அவர்களும் சம்மதித்து ஆயுதங்களையெல்லாம் அவரிடமே கொடுத்துவிட்டார்கள். ஆனல் அவர்கள் படகுகளின் மீதேறியவுடன், உதிர வெறி கொண்ட சிப்பாய்கள், நானுஸாகிபின் ஆக்ஞையை மீறிப் படகின் மீதுள்ள ஐரோப்பியரின் மீது சுட ஆரம்பித்துவிட்டனர். அனேகமாய் ஆண்களெல்லாம் கொல்லப்பட்டனர். மீதியிருந்த பெண்டீர்களையும், குழந்தைகளையும் கைது செய்துவிட்டு நானுஸாகிப் தம்மைப் பீஷ்வாவென அறிவிக்கை செய்துகொண்டார்.

10. **டில்லி முற்றுகை யிடப்பட்டது**:—வட இந்தியாவெங்கும் கலகமாயிருந்தபோதும், பஞ்சாபிலுள்ள சீக்கியர் மட்டும் ஆங்கிலேயருக்கு விசுவாசமாயிருந்தார்கள். சீக்கியர்களின் உதவியால்தான், இக் கலகம் அடக்கப்பட்டதென்று சொல்லலாம். டில்லியிலிருந்த ஆங்கிலச் சேனையை விடுவிப்பதற்காகச் சீக்கியரும், இங்கிலீஷ்காரரும் கலந்த சேனையொன்று அனுப்பப்பட்டது. அடைபட்டிருந்த சேனையை விடுவிப்பது சாதாரண காரியமன்று. டில்லி முழுவதும் கலகக்காரர் கைவசமிருந்தது. ஆனல், ஆறுநாள்வரைக்கும் முற்றுகையிடப்பட்டபின், அப் புராதன பட்டணம் ஆங்கிலேயர் கைவசஞ் சென்றது. பகதூர்ஷா கைதிசெய்யப்பட்டு ரங்கூனுக்கு அனுப்பப்பட்டார். அவருடைய புத்திரர் இருவரும், பேரனும் இங்கிலீஷ்காரரால் சுட்டுக் கொல்லப்பட்டனர். இவ்விதமாகப் பாபர், அக்பர் முதலியவர்களின் சந்ததி முடிவுக்கு வந்தது.

11. **லக்ஷ்மணபுரம் விடுதலை செய்யப்பட்டது**:—லக்ஷ்மணபுரத்தில் இச்சமயத்தில் அனேக ஐரோப்பியர் இருந்

தனர். அவர்களிற் பிரதானமானவர் **ஸர் ஹென்றி லாரென்ஸ்** என்பவர். இவருக்குக் கலகம் வருமென்கிற செய்தி முன்னமே தெரியும். இதற்காக இவர் வெள்ளையர்களை யெல்லாம் கோட்டைக்குள் ளிருக்கச் செய்து ஆகாராதிகளை யெல்லாம் சரிவரச் சித்தஞ் செய்துவைத்தார். கலகக்காரர் இவ்விடத்தைத் தாக்கினார்கள். முற்றுகை ஆரம்பத்திலேயே, லாரென்ஸ் குண்டால் மாண்டார். ஆனால், மற்ற இங்கிலீஷ்காரர்மட்டும் நான்கு மாத காலம்வரை மிகுந்த தைரியத்துடன் தளர்ந்துவிடாமல் இருந்தார்கள். இக்காலத்தில் இவர்கள் பட்ட கஷ்டம் சொல்லிமுடியாது. முடிவில், வெகுநாள் கழித்து ஓர் உதவிச் சேனை வந்து சேர்ந்து மிகுந்த கஷ்டத்துடன் இங்கிலீஷ்காரரை விடுதலை செய்தது.

12. **கான்பூர் பிடிபட்டது:** இதேவிதமாக, ஸர் ஹென்றி ஹாவ்லக் என்பவர் நானாஸாகிபைக் கான்பூரி னருகில் தோற்கடித்தார். இச்சமயத்தில், கலகக்காரர்கள் தங்கள் வசம் கைதியாக இருந்த இங்கிலீஷ் பெண்டீர்களையும், குழந்தைகளையும் கொலைசெய்து ஒரு கிணற்றில் போட்டுவிட்டனர். முடிவில் கான்பூர் இங்கிலீஷ் சேனையால் பிடிபட்டது. இதற்குப் பின் இங்கிலீஷ்காரர், கான்பூரில் பழிக்குப் பழியாகச் செய்தகாரியங்கள் சொல்லிமுடியாது. இதில் கொடும் பாவியெனப் பெயர் வாங்கியவன் ஜெனரல் நீல் என்பவன்.

13. **அயோத்தியிலும், ரோஹில்கண்டிலும் கலகம் அடக்கப்பட்டது:**—டில்லியும், லக்ஷ்மணபுரமும் பிடிபட்ட பின்பு, அயோத்தியிலும், ரோஹில்கண்டிலு மிருந்த கலகக்காரர்கள் அடக்கப்பட்டார்கள். இவ்விரு பிரதேசங்களிலும் கலகம் மிகவும் அதிகமாக இருந்தது. லார்ட் டல்ஹௌஸியால் அயோத்தி சேர்க்கப்பட்ட நாள் முதற்கொண்டு, அங்கிருந்த

ஜனங்களுக்கும், மிராசுதாரர்களுக்கும் மிகுந்த துவேஷ மிருந்தது. ஆகையால், கலக ஆரம்பத்திலேயே, அவர்கள் பட்டத்தினின்று நீக்கப்பட்ட நவாபோடும், நாஜுலாகி போடும் சேர்ந்துகொண்டார்கள். இக் கலகம் அடக்கும் வேலையை ஸர் காலின் காம்பெல் என்பவர் செய்துவந்தார். இவ்வேலையில் நேபாள அரசாங்கத்தார் இங்கிலீஷ்காரருக்கு மிகுந்த உதவிசெய்தார்கள். இக் கலகத்தை அடக்குவது மிகுந்த கஷ்டமான காரியமா யிருந்தபோதிலும், இரண்டு வருஷகாலத்திற்குள் கலகக்காரர் முற்றிலும் ஒடுக்கப்பட்டனர். 1858-ம் வருஷ முடிவிற்குள், இப் பிரதேசங்களில் கலகங்கள் முற்றிலும் அடக்கப்பட்டன.

**14. மத்திய இந்தியாவில் கலகம் அடக்கப்பட்டது :—** மத்திய இந்தியப் பிரதேசத்தில், முக்கியமாக ஜான்ஸி என்னுமிடத்தில், கலகக்காரர்கள் மிகவும் பலிஷ்டர்களாக இருந்தார்கள். இவர்களை அடக்குவதற்காக இதே சமயத்தில் ஸர் ஹ்யூ ரோஸ் என்பவரின் கீழ் ஒரு சேனை பம்பாயினின்றும் அனுப்பப்பட்டது. இச்சேனை ஜான்ஸி நகரை முற்றுகையிடும்போது, டாண்ட்யாதோபி என்பவரின் கீழ் ஒரு கலகச் சேனைவந் தெதிர்த்தது; அதில் ஜான்ஸி ராணியே ஆணுடை தரித்து சாதாரண போர் வீரருடன் சண்டைசெய்து காயத்திலிறந்தார்! டாண்ட்யாதோபியும் தோற்றுப்போய், கைதி யாக்கப்பட்டு தூக்கில் போடப்பட்டனர். இதைக்கேட்ட நாஜுஸாகிப், இனிமேல் எதிர்ப்பதில் பிரயோஜன மில்லையென்று கண்ணிற்குத் தென்படாத இடத்திற்கு ஓடிவிட்டார்.

ஆகவே 1859-ம் வருஷ ஆரம்பத்தில் தேச மெங்கும் கலகம் முற்றிலும் ஒழிந்தது.



## 20. விக்டோரியா மஹாராணியாரின் அறிக்கைப் பத்திரம்

இராஜ்ய பரிபாலனம் கம்பெனியினின்று மாற்றப்பட்டது.

சென்ற பாடத்தில் நமது தேசத்தில் நடந்த பெருங் கலகத்தைப்பற்றி நீங்கள் படித்தீர்கள். அக் கலகம் தேசத்திற்கு மிகுந்த சேதத்தையும், துன்பத்தையும் விளைவித்தது எனினும், அது நேர்ந்தது ஒரு விஷயத்தில் நல்லதே. ஏனெனில், இதற் கப்புறந்தான், இங்கிலீஷ்காரர் கண்களை விழித்துக்கொண்டனர் என்று சொல்லலாம். இவ்வளவு பெரிய இராஜ்யத்தை ஒரு வியாபாரக் கம்பெனியாரிடம் ஒப்புவித்தல், தகாததென்று அவர்கள் நிச்சயமாய்க் கண்டுகொண்டார்கள். இதுவரையிலும், இந்தியாவின் உள் நாட்டு விவகாரங்களை, இங்கிலாந்தி லிருக்கும் கிழக் கிந்தியா கம்பெனி டைரக்டர்களே கவனித்து வந்தார்கள். பார்லியமெண்டாருக்கு மேலதிகாரம் இருந்தபோதிலும் சாதாரணமாக இந்தியாவின் விஷயங்களில் அவர்கள் தலையிடுவதில்லை. ஆனால் இப் பெருங் கலகத்திற்குப் பின், அவர்கள் நமது தேச துரைத்தன விஷயங்கள் யாவையும் நேரில் நடத்த உத்தேசித்து; 1858 ம் வருஷத்தில் ஒரு சட்டமுண்டாக்கினார்கள். இச் சட்டத்தின்படி, இந்தியாவின் அரசாங்க நிர்வாகம் கம்பெனியாரிடமிருந்து இங்கிலீஷ் துரைத்தனத்தாருக்கு மாற்றப்பட்டது. நமது தேசவிஷயங்களைக் கவனிப்பதற்காக, பிரத்தியேகமாக ஒரு மந்திரி, இந்திய காரியதரிசி (Secretary of State for India) என்ற பட்டத்துடன் நியமிக்கப்பட்டார். அவருக்கு உதவியாக நமது தேச விஷயங்களில் தேர்ச்சி பெற்றவர்களடங்கிய ஒரு சிறு சபையு மேற்பட்டது. இந்தியாவிலிருந்த கவர்னர்-ஜெனரல், வைஸ்ராய், அல்லது ராஜப்

பிரதிநிதி யென்ற வேறுபெயரை உடையவரானர். ராய் என்பதற்கு 'ராஜா' என்பதும் வைஸ் என்பதற்குப் 'பிரதி' என்பதும் பொருள். ஆகவே, வைஸ்ராய் என்பவர் நமது தேசத்தில் ராஜப்பிரதிநிதியாக இருந்து அரசாட்சி செய்பவர். இவரும், மற்ற மாகாணக் கவர்னர்களும் இங்கிலாந்தின் அரசரால் தேர்ந்தெடுக்கப்படவேண்டும். லார்ட் கானிங் என்பவரே, நமது தேசத்தின் முதல் இராஜப் பிரதிநிதியானர்.

**2. அறிக்கைப்பத்திரம் :—** 1858-ம் வருஷம் நவம்பர் மாதம் முதல் தினத்தில் இவர் அலகாபாத்தில் ஒரு பெரிய தர்பார் சபையொன்று கூட்டினர். அதில் அவர் மஹாராணியாரால் அனுப்பப்பட்ட இராஜவிளம்பரத்தைப் பகிரங்கப்படுத்தினர். அப் பத்திரம், இக்காலமுதற்கொண்டு நியாயவிதிகளையும், மதவிஷயத்தில் உதாரகுணத்தையுமே இங்கிலீஷ்காரர் இந்திய அரசாட்சியின் மூலதத்துவமாக அனுசரிப்பார்களென்று கூறிற்று. அது, கலகத்தில் சம்பந்தப்பட்டவர்களை மன்னித்ததுமன்றி, இதுவரையிருந்து வந்த உடன்படிக்கைகளையும், பட்டங்களையும், சுதந்தரங்களையும், வழக்கங்களையும் ஊர்ஜிதப்படுத்தியது. அதின் முக்கியமான பாகத்தின்படி படிப்பும், சாமர்த்தியமும், யோக்கியதையும் நிறைந்த தேசவாசிகள் யாவரும் எப்பதவிக்கும் வரத் தகுதியுள்ளவர். இவ்விதம் அறிக்கை செய்யப்பட்ட திவ்விய விளம்பரத்தை ஆதாரவாகக் கொண்டே, இராஜ்ய பரிபாலனம் செய்துவருவதாக ஒவ்வொரு இராஜப் பிரதிநிதியும் சொல்லி வந்திருக்கின்றனர். மஹாராராணியா ரெண்ணம், கொஞ்சங் கொஞ்சமாக நிறைவேற்றப்பட்டு வருகிறது.



## 21. வைஸ்ராய்களின் ஆட்சியில் உள்நாட்டு முன்னேற்றம்

1. **லார்ட் கானிங்:**— இவர் காலத்தில்தான், நியாயஸ்தலங்களில் வழக்குகள் நடத்தும் முறைகளைக் கற்பிக்கும் ஸிவில் ப்ரொஸீஜர் கோடும், க்ரிமினல் ப்ரொஸீஜர் கோடும் உண்டாக்கப்பட்டன. இவர் காலத்திலே, பலவித குற்றங்களுக்கும் தண்டனைகள் விதிக்கப்பட்டிருக்கும் இந்தியன் பினல் கோட் என்ற சட்டத் தொகுதி அமைக்கப்பட்டது. மேலும், இப்போதுதான் கல்கத்தா, பம்பாய், சென்னை முதலிய இந்தியாவின் முக்கிய பட்டணங்களில் ஹைகோர்ட்டுகள் ஸ்தாபனஞ் செய்யப்பட்டன. இவர் இந்திய மன்னர் ஸ்வீகாரம் எடுத்துக்கொள்ளலாமென்று அனுமதி கொடுத்தார். இவர் காலத்தில் ஜேம்ஸ் வில்ஸன் என்ற பெயர் போனவர் வைஸ்ராய் சபையின் மெம்பராக இருந்தனர். இவரே, நமது தேசத்தில் வருமானவரியையும், பண நோட்டுகளையும் உண்டாக்கினவர். இவர் செய்த சீர்திருத்தங்களினால்தான், கலகக் காலத்தில் இங்கிலீஷ்காரருக்கு ஏற்பட்ட கடனைத் தீர்க்க முடிந்தது.

2. **லார்ட் எல்கின்:** இவர், கானிங்குக்குப் பின் வைஸ்ராயாக வந்தனர். இவர்காலத்தில் ஒன்றும் விசேஷமாக நடக்கவில்லை; இந்தியாவிற்கு வந்த இரண்டு வருஷங்களுக்கெல்லாம் இவர் இறந்தனர் (1863).

3. **ஸர் ஜான் லாரேன்ஸ்:**—இவர், சாதாரண உத்தியோகத்திலிருந்து தம் சாமர்த்தியத்தால் இவ் வுயர்ந்த பதவிக்கு வந்தவர். கலகம் நடந்தபோது, இவர் பஞ்சாபில் உத்தியோகம் வகித்து, ஆங்கில அதிகாரத்தை நிலைநிறுத்துவதில் மிகவும் சாதகமாயிருந்தார். இவர்காலத்தில்

நேபாளத்திற் கடுத்த பூட்டானோடு ஒரு சிறுசண்டை நடந்தது. அதில், இங்கிலீஷ்காரரே வெற்றியடைந்தார்கள். 1866-ம் வருஷத்தில் ஒரிஸ்ஸா மாகாணத்தில் மிகக் கொடியதொரு பஞ்சம் உண்டாயிற்று. அக் காலத்தில், இப்போதைப்போல் ரெயில்வேக்க ளில்லாதபடியால், ஆகாராதிகள் அனுப்புவது மிகவும் பிரயாசையாயிருந்தது. ஆகையால் ஜனங்கள் மிகுந்த கஷ்டத்திற்குள்ளாகி 15-லக்ஷம் பேருக்கு மேல் மாண்டனர். ஆனால், கவர்ன்மெண்டாரும் தங்களாலியன்றவரை உதவிசெய்து வந்தார்கள். இனிமேல், தேசத்தில் பஞ்சமுண்டானால், கவர்ன்மெண்டார், இன்னின்ன காரியங்கள் செய்யவேண்டுமென்று இவர்காலத்தில் நிச்சயிக்கப்பட்டது. பஞ்சத்தைத் தடுக்க உத்தேசித்து, கவர்ன்மெண்டில் ஒவ்வொரு வருஷமும் கோடிக்கணக்கான ரூபா ரெயில்வேக்கள் போடுவதிலும், கால்வாய்கள் வெட்டுவதிலும், ரஸ்தாக்களை விருத்தி செய்வதிலும் செலவு செய்து வருகின்றனர்.

4. லார்ட் மேயோ :— இவர் மிகவும் தயாளகுணமுடைய வைஸ்ராய். இவர் இராஜாங்க விஷயங்களில் அனேக சீர்திருத்தங்களைச் செய்தார். இவர் காலத்தில் விவசாய இலாகா ஒன்று தனியாக ஏற்படுத்தப்பட்டது. படிப்பு விஷயத்தில் இவர் மிகுந்த சிரத்தை யெடுத்துக் கொண்டு பெருந்தொகைகளைக் கொடுத்து உதவிசெய்தார். குற்றவாளிகளைச் சரியாக நடத்தி அவர்களைச் சீர்திருத்தஞ் செய்யவேண்டு மென்பது இவர் அபிப்பிராயம். இதற்காக இவர் தேசமெங்கும் பிரயாணஞ்செய்து வந்தனர். அந்தமான் தீவுகளுக்குத் தீவாந்தர சிக்ஷை விதிக்கப்பட்டு அனுப்பப்படுவோர் எவ்விதம் நடத்தப்படுகின்றார்க ளென்பதைப் பார்த்து வர இவர் அங்கு சென்றார். அப்போது

அங்கிருந்த கைதிகளி லொருவன் இவரைக் குத்திக் கொன்ருன்.

5. **லார்ட் நார்த்ப்ருக் :—** இவர் காலத்தில் இளவரசரா யிருந்த ஏழாவது எட்வர்ட் என்பவர், நமது தேசத்திற்கு வந்தார். அப்போது நமது தேசத்தோர் யாவரும் அவருக்கு மிகுந்த அன்புடன் வரவேற்பு கூறினர். ஆனுல் இவர் சென்ற மறுவருஷம், நமது மாகாணத்தில் மிகக் கொடியதொரு பஞ்சம் உண்டாயிற்று. இதற்குத் தாது வருஷப் பஞ்ச மென்று பெயர். இது இரண்டு வருஷ கால மிருந்தது. இக்காலத்தில், ஜனங்கள் பட்டபாடு உங்கள் வீட்டு விருத்தர்களைக் கேட்டால் தெரியும். பசியினுலும், நோயாலும் ஜனங்கள் எறும்பு ஈக்களைப் போல் மடிந்தார்கள், இந்த இரண்டு வருஷத்தில் சுமார் 50 லக்ஷம் பேர் இறந்தனர். கவர்ன்மெண்டாரும் தம்மால் இயன்ற உதவி புரிந்தனர் எனலாம். கூலி வேலைக்கு வேண்டிய சாதகங்கள் செய்து தேசமெங்கும் கஞ்சித்தொட்டிகள் வைத்து சக்தியற்றவர்களுக்கு ஆகாரமுங் கொடுத்தார்கள். இருந்தாலும், தகுந்த உதவி செய்யச் சாத்தியப்படவில்லை.

இவர்காலத்தி லிருந்த பரோடா ராஜாவாகிய கெயிக்வார் ரெஸிடெண்டை விஷம் வைத்துக் கொல்ல முயன்றதாகக் குற்றஞ்சாற்றப்பட்டுப் பட்டத்தினின்றும் நீக்கப் பட்டார். அவருக்குப் பதிலாக இப்போதுள்ள அரசர் கெயிக்வாராக்கப்பட்டனர்.

6. **லார்ட் லிட்டன் :—** இவர் அவ்வளவு தயாள குண முடையவர் அல்லர். இவர்காலத்தில் ஆயுதச் சட்டமும் அச்சுச் சட்டமும் உண்டாக்கப்பட்டன. ஆயுதச் சட்டத் தின்படி நமது தேசத்தோர் லைசென்ஸ் இல்லாமல் துப்பாக்கி முதலிய அபாயமான கருவிகள் வைத்திருக்கக்

கூடாது. அச்சுச் சட்டம் சுதேச பத்திரிகைகளின் சுதந்திரத்தை மிகவுங் குறைத்துவிட்டது. இவர்காலத்தில் ஆப்சானிய யுத்தமும் நடைபெற்றது. ஆயுதச் சட்டம் நம்மைப் பேடிகளாக்கிவிட்டது.

7. **லார்ட் ரிப்பன்**:— இவர், மேயோவைப் போல, மிகுந்த தயாளமனதும், முன்னேக்கமும் உடையவர். இவர்காலத்தில் ஜனங்களுக்குச் சில முக்கியமான சுதந்திரங்கள் கொடுக்கப்பட்டன. இப்போதுதான், நமது தேசமெங்கும் ஜில்லா போர்டுகளும், தாலுக்கா போர்டுகளும், முனிஸிபாலிடிகளும் ஏற்படுத்தப்பட்டன. இவற்றின் மூலமாக ஜனங்கள் தங்கள் நகரத்திலும், ஜில்லாக்களிலும் தமக்கு வேண்டிய சௌகரியங்களைச் செய்துகொள்ளலாம். இவர் படிப்பு விஷயங்கட்கும் மிகுந்த உதவிசெய்தார். இவர்காலத்தில் கல்கத்தாவில் ஒரு பெரிய கண்காட்சிக் கூட்டமொன்று கூட்டப்பட்டது. 1881-ம் வருஷத்தில் இவர் மைசூரை ஹிந்து இராஜாவுக்குத் திருப்பிக் கொடுத்தார். அந்த இராஜ்யம் லார்ட் பெண்டின்க் காலம் முதற்கொண்டு இங்கிலீஷ்காரர் கைவசமிருந்து வந்தது உங்களுக்கு ஞாபக மிருக்கலாம்.

8. **லார்ட் டப்ரின்**:—இவர்காலத்தில்தான் மூன்றுவது பர்மாயுத்தம் நடைபெற்றது. 1887 ம் வருஷத்தில் விக்டோரியா மஹாராணியார் 50 வருஷம் ஆண்ட திருநாள் தேசமெங்கும் கொண்டாடப்பட்டது. இந்திய கலகம் முதற்கொண்டு இங்கிலீஷ்காரர் கைவசமிருந்து வந்த குவாலியர் கோட்டை அந்த இராஜாவுக்குத் திருப்பிக் கொடுக்கப்பட்டது.

இவர்காலத்தில் மிக முக்கியமானதொரு விஷயமும் நடந்தது. இப்போது, வருஷந்தோறும் டிசம்பர் மாதம்

நமது தேசத்தில் கூடும் காங்கிரஸ் மகாசபை (Indian National Congress), இவர் வைஸ்ராயாக இருந்தபோது தான் ஆரம்பிக்கப்பட்டது. இம் மகாசபை மூலமாகவே, நமது தேசாபிமானிகளும், தலைவர்களும் நமது தேசத்தோருக்குச் சர்வ சுதந்திரங்களும் கொடுக்க வேண்டுமென்று கவர்ன்மெண்டைக் கேட்டு வருகின்றனர்.



## 22. இந்தியாவும் இராஜப் பிரதிநிதிகளின் அரசாட்சியும்

1. இந்திய வைஸ்ராய்களின் ஜாப்தா :—

| | | | |
|---|---|---|---|
| (1) | லார்ட் | கானிங் | 1858-1862 |
| (2) | ,, | எல்கின் | 1862-1863 |
| (3) | ,, | லாரென்ஸ் | 1863-1869 |
| (4) | ,, | மேயோ | 1869-1872 |
| (5) | ,, | நார்த்ப்ரூக் | 1872-1876 |
| (6) | ,, | லிட்டன் | 1877-1880 |
| (7) | ,, | ரிப்பன் | 1880-1884 |
| (8) | ,, | டப்ரின் | 1884-1887 |
| (9) | ,, | லான்ஸ்டௌன் | 1888-1893 |
| (10) | ,, | எல்கின் | 1894-1898 |
| (11) | ,, | கர்ஸன் | 1898-1905 |
| (12) | ,, | மிண்டோ | 1905-1909 |
| (13) | ,, | ஹார்டிங் | 1910-1916 |
| (14) | ,, | செம்ஸ்போர்ட் | 1916-1921 |
| (15) | ,, | ரீடிங் | 1921-1926 |
| (16) | ,, | இர்வின் | 1926-1931 |
| (17) | ,, | வில்லிங்டன் | 1931 |

2. சென்ற பாடத்தில் நமது தேசத்தில் நடந்த பெருங் கலகத்தின் பலனாக, இந்தியாவின்ராஜ்யபரிபாலனம் ஆங்கில துரைத்தனத்தாரால் நேராக வகிக்கப்பட்டதும், லார்ட் கானிங் முதல் லார்டு டப்ரின் வரையிலுமுள்ள ராஜப்பிரதிநிதிகளின் ஆட்சியைப் பற்றியும் படித்தீர்கள். இவர்கள் காலத்தில், கவர்னர்-ஜெனரல்கள் காலத்தைப் போல, விசேஷமான யுத்தங்களும் நாடுகளைச் சேர்ப்பதும் நடந்தேறவில்லை. ஆனால், உள்நாட்டு முன்னேற்றமே மிகவும் கவனிக்கப்பட்டு வந்தது. எனினும், இக்காலத்தில் இரண்டு யுத்தங்கள் நடந்தன. அவைகளைப் பற்றிச் சுருக்கமாக இங்கெடுத் துரைத்துப் பின்பு உள்நாட்டு நிகழ்ச்சிகளையும்பற்றிச் சொல்லுவோம்.

3. **இரண்டாவது ஆப்கானிய யுத்தம்:—இரண்டாவது ஆப்கானிய யுத்தத்தின் காரணங்கள்** ஆங்கிலேயர் ஒரு விதமாக வெற்றி பெற்றும், அவர்கள் சாதக மொன்றும் பெறவில்லை. **லார்ட் லாரேன்ஸ்** வைஸ்ராயாக இருந்தபோது அமீர் தோஸ்த் முகம்மது இறந்தார் (1863). அவர் குமாரர்களாகிய **அப்சல்கான், ஷேர்அலி** என்ற இருவருக்குள், பட்ட விஷயமாகப் பெருத்த யுத்தமொன்று தொடங்கிற்று. அதில் ஷேர்அலி தோல்வி யடைந்து காபூலினின்று துரத்தப்படவே, அவர் இந்திய கவர்ன்மெண்டாரிடம் உதவியை நாடினார். ஆனால் லாரென்ஸ் யார் தற்சமயத்தில் அமீராக இருக்கின்றனரோ அவரையே அங்ஙனம் அங்கீகரித்தல் வேண்டுமென்கிற கொள்கையே கைக்கொண்டவராகிய ஷேர்அலிக்கு உதவிசெய்ய மறுத்துவிட்டனர். பிறகு, ஷேர்அலி, தாமே முயன்று தம் சகோதரரைத் துரத்திவிட்டு, அமீராகிவிட்டார். அவருக்கு அன்றைத்தினம்முதற்கொண்டு, இங்கிலீஷ்காரரின்மீது துவேஷம் மிகுந்திருந்தது.

4. லார்ட் லாரன்ஸுக்குப் பின் வைஸ்ராய்களாக வந்த **மேயோ, நார்த்ப்ருக்** என்ற இருவரும் அவரைப் போலவே அயல்நாட்டு விஷயங்களில் தலையிட விருப்பமில்லாதிருந்தார்கள். ஆனால், **லிட்டனோ** வெல்லெஸ்லி டல்ஹௌஸி முதலியவர்களைப் போன்றவர். வடமேற்குக் கணவாய்கள் ஆங்கிலேயர் கைவசமிருக்கவேண்டும் என்ற அபிப்பிராயம் அவர் கொண்டிருந்தனர். இதற்காக இவர் 1876-ம் வருஷம் **க்வெட்டா** என்னுமிடத்தை ஒரு சிற்றரசனிடமிருந்து விலைக்கு வாங்கினார். இதை யறிந்த ஷேர்அலி, ஆங்கிலேயர் ஆப்கனிஸ்தானத்தைக் கைப்பற்ற ஆரம்பஞ் செய்கிறார்களெனப் பயந்து இதை ஆக்ஷேபித்தார். இது பயனற்றுப் போகவே, பலாத்காரமாகவாவது க்வெட்டாவைக் கைப்பற்ற நினைத்து, அமீர் ரஷ்யர்களி னுதவியை நாட ஆரம்பித்தார். ரஷ்யப் பிரதிநிதியை இவர் அன்புடன் வரவேற்றதுமன்றி, அவர் இங்கிலீஷ் பிரதிநிதியுடன் முகங்கொடுத்துப் பேசவில்லை (1878). உடனே லிட்டன் ஆப்கானியரின்மீதுயுத்தங் கூறி, சேனைகளைக் காபூலுக்கு அனுப்பினார். ஷேர்அலி தோற்கடிக்கப்பட்டு துருக்கி ஸ்தானத்திற்கு ஓடிப்போய் அங்கு இறந்தார்.

5. **கண்டமக்** என்னு மிடத்தில் ஒரு சமாதானம் நடைபெற்றது. அதன்படி, ஷேர்அலியின் குமாரராகிய **யாகுப்கான்** காபூலில் ஒரு ஆங்கில ரெஸிடென்டை வைத்துக்கொள்வ தென்கிற நிபந்தனையின் மேல், அமீராக்கப் பட்டார். ஆனால் அவர் ஆங்கிலேயரால் அமீராக்கப்பட்டமையால், தேசமெங்கும் அவருக்கு விரோதமா யிருந்தது. ஆகையால் இங்கிலீஷ் சேனை இந்தியாவிற்குத் திரும்பிய இரண்டு மாதத்திற் கெல்லாம் காபூலியர்கள் கலகத்திற் கிளம்பி, இங்கிலீஷ் ரெஸிடென்டையும், அவருக்குத் துணையாக இருந்த போர்வீரர்களையும் கொன்றுவிட்டார்கள்.

6. ஆகவே, மறுபடியும் ஓர் சேனையை இந்தியாவி னின்றும் அனுப்ப வேண்டி வந்தது. காபூலை ஆங்கிலேயர் மறுபடியும் பிடித்துக்கொண்டு யாகுப்கானை இந்தியாவிற்கு அனுப்பிவிட்டார்கள். ஆனால் குளிர் காலம் நெருங்கவே, ஆக்லண்ட் காலத்திற் போல தேச மெங்கும் குபீரெனக் கலகங்கள் கிளம்பிவிட்டன. காபூலி லிருந்த இங்கிலீஷ் சேனை மிகுந்த அபாயமான நிலையி லிருந்தது. ஆயினும் சேனைத் தலைவரா யிருந்த **லார்ட் ராபர்ட்ஸ்** மிகவும் சாமர்த்திய முடையவர். அவர் கலகக்காரரை இரு முறை தோற்கடித்தார்.

7. இதற்குள், லிட்டன், தன் பதவியை ராஜிநாமா செய்து இங்கிலாந்திற்குப் போக வேண்டி யிருந்தது. அவருக்குப் பின் ரிப்பன் வைஸ்ரா யானார். இவர் ஷேர் அலி சகோதரரின் குமார ராகிய **அப்துர் ரஹிமான்** என் பவரை அமீராக்கினர். இதற்குப் பின் ஆங்கிலேயர் ஆப்கா னியரது உள் நாட்டு விஷயங்களில் தலையிடுவதே யில்லை. வேறு தேசத்தாரோடு நேய உடன்படிக்கைகள் செய்ய லாகா தென்று இங்கிலீஷ்காரார் அமீருக்குக் கப்பங் கட்டி வருகின்றனர்.

8. **மூன்றாவது பர்மா யுத்தம்** :— டல்ஹௌஸி காலத் தில் நடந்த சண்டையின் பலனாக, கீழ் பர்மா முழுவதும் ஆங்கிலேயரால் சேர்த்துக்கொள்ளப்பட்டது. அக் கால முதற் கொண்டே, இழந்த பிரதேசத்தை மறுபடியும் அடைய வேண்டு மென்று பர்மா அரசர் மிகவும் முயன்றார். இதற்காக அவர் பிரஞ்சுக்காரருடன்கூட ரகசியமாக வேலை செய்து வந்தனர். இதுவுமன்றி, பர்மா அரசாங்கம் சரியாக நடந்து வராமையால், இங்கிலீஷ் வர்த்தகர்களுக்கு மிகுந்த சேதமும், அபாயமு முண்டாயின. முக்கியமாக, அவர்

களின் தூண்டுதலின் மேல் லார்ட் டப்ரின் யுத்தங் கூறி, ஒரு சேனையை அனுப்பினுர். பர்மர் தோற்கடிக்கப்பட்டு, அவர்களின் தலை நகராகிய மாண்டலே இங்கிலீஷ்காரர் கைவசஞ் சென்றது. பர்மா அரசராகிய திபா என்பவர் பட்டத்தினின்றும் நீக்கப்பட்டு, ரத்னகிரி என்னு மிடத்திற்குக் கைதியாக அனுப்பப்பட்டார். பர்மா முழுவதும் ஆங்கிலேயரால் சேர்த்துக்கொள்ளப்பட்டது. (1886-ம்ஸூ, ஜனவரிமீ, 1௳).

9. **லார்ட் லான்ஸ்டௌன் :—** இவர்காலத்தில், பார்லிய மெண்ட், நமது தேசச் சட்ட சபைகளைப் பற்றி முக்கிய மான சட்ட மொன்று உண்டாக்கியது (1892). அதன்படி சட்ட சபைகளுக்குச் சில நபர்களைத் தேர்ந் தெடுக்கும் சுதந்திரம் ஜனங்களுக்குக் கொடுக்கப்பட்டது. சட்ட சபையிலிருக்கும் பிரதிநிதிகள் ராஜாங்க விஷயங்களைப்பற்றி கவர்ன்மெண்டைக் கேள்விகள் கேட்கவும், மசோதாக்களைப் பிரேரணை செய்யவுங் கூடும்.

10. **லார்ட் எல்கின் :—** இவர் இரண்டாவது வைஸ்ராயின் புத்திரர். இவர் காலத்தில் நமது தேசம் சில துன்பங்களுக்கு உள்ளாக வேண்டி யிருந்தது. 1896 - ம் வருஷத்தில் பம்பாயில் முதல் முதல் பிளேக் உண்டாயிற்று. அதுமுதற்கொண்டு இக் கொடும் வியாதி தேசமெங்கும் பரவி மிகுந்த சேதத்தை உண்டாக்கி வருகிறது. இதன் கொடுமையைத் தடுக்கக் கவர்ன்மெண்டார் அதிக பணம் செலவுசெய்து வருகின்றனர். அஸ்ஸாம், வங்காளம் முதலிய மாகாணங்களில் இவர் காலத்தில் சில பூகம்பங்கள் உண்டாகி மிகுந்த சேதத்தை உண்டாக்கின.

11. **லார்ட் கர்ஸன்:—** இவர் 1899-ம் வருஷம் வைஸ்ராயாக வந்தார். நமது தேசத்தில் இதுவரைக்கும் வந்த

ராஜப் பிரதிநிதிகளில் இவரை மிகுந்த புத்திநுட்பமுடையவரெனச் சொல்லலாம்.

இந்தியாவின் வடமேற்குப் பிரதேசத்தைப் பலப்படுத்த எண்ணி, இவர், **வட மேற்கு எல்லை மாகாணம்** (North-western Frontier Province) என்றோர் புது மாகாணத்தை யுண்டாக்கி, அதற்குப் பிஷாவர் என்பதைத் தலைநகராக்கி, அதை ஓர் கமிஷனர் ஆட்சியின் கீழ் வைத்தார். அரசாங்க சௌகரியத்திற்காக என்று சொல்லி இவர் வங்காளத்தை இரண்டு மாகாணங்களாகப் பிரித்தார். இதைத் தேசத்து ஜனங்கள் அங்கீகரிக்காததால் எங்கும் ஒரே கூக்குரலாயிற்று. இப் பிரிவு 1911-ம் வருஷம் நமது சக்கரவர்த்தி, ஐந்தாவது ஜார்ஜால் ரத்து செய்யப்பட்டது.

இவர் இந்தியாவிற்கு வந்த இரண்டு வருஷங்களுக்கெல்லாம் விக்டோரியா மகாராணியார் காலஞ்சென்றமையால், அவர் மூத்த குமாரரும், இளவரசருமாகிய எட்வர்ட் என்பவர் ஏழாவது எட்வர்ட் என்ற பட்டத்துடன் சிம்மாசனமேறினர். இது சம்பந்தமாக 1903-ம் வருஷம், ஜனவரி மாதம் முதல் தேதியன்று, ஓர் தர்பார் கூட்டப்பட்டது. அது மிகவுஞ் சிறப்பாக நடந்தது.

இவர் தீவிர புத்தியுடையவராதலால் அரசாங்கத்தின் ஒவ்வொரு இலாகாவிலும் சீர்திருத்தஞ் செய்யத் தலைப்பட்டார். உயர்தரப் படிப்பு விஷயங்களில் இவர் செய்த சீர்திருத்தங்கள் மிகவும் கவனிக்கத் தக்கவை. இவரே படிப்பில் நிபுணர். ஆகையால், இவர், எல்லாவகைப் படிப்பிற்கும், ஆராய்ச்சிக்கும் கவர்ன்மெண்டிலிருந்து பெருந்தொகைகளைக் கொடுத்துதவுமாறு ஏற்பாடு செய்தார். பழைய சரித்திரப் பிரசித்தமான சிறந்த கட்டிடங்களைக்

காப்பாற்றுமாறு, இவர் ஓர் சட்டத்தை உண்டாக்கினர். இதன்படி புராதன கட்டிடங்கள் கவர்ன்மெண்டால் காப்பாற்றப்பட்டு வருகின்றன. இவர் காலத்தில் சில வரிகள் குறைக்கப்பட்டன.

இவரது உத்தியோக காலம் 1904-ம் வருஷம் தீர்ந்து போயிற்று. ஆனல் இவரது சாமர்த்தியத்தை உத்தேசித்து, இவரை, இன்னும் மூன்று வருஷகாலம் வைஸ்ராயாக இருக்கவேண்டுமென்று இங்கிலாந்தில் துரைத்தனத்தார் கேட்டுக்கொண்டனர். எனினும், இவர் அடுத்த வருஷம் (1905) தம் வேலையை ராஜீநாமா செய்யவேண்டி வந்தது.

12. **லார்ட் மிண்டோ:**—இவர் ஆரும் கவர்னர்-ஜெனரலது பேரர். இவர் மிக நல்லவரா யிருந்தும், தேசமெங்கும், முக்கியமாக வங்காளத்தில், ஒரே குழப்பமாகவும், கொலைகள் நடந்தவண்ணமாகவு மிருந்தன. இதற்கு முக்கிய காரணம், ஜனங்களுக்கு சுயராஜ்யம் வேண்டுமென்ற அவாவே. ஜனங்களிற் பெரும்பாலார் சமாதான வழிகளிற் கிளர்ச்சி செய்தார்கள். ஆனல், சிலர் மட்டும் பலாத்கார வழியைப் பின்பற்றத் தலைப்பட்டனர். இவர்களை அடக்குவதற்குப் பல அடக்குமுறைச் சட்டங்களைக் கவர்ன்மெண்டார் உண்டாக்க வேண்டி யிருந்தது. ஆனல், இவர் ஜனங்களுக்குச் சுதந்தரங் கொடுக்கும் வழியை நாடாமலிருக்கவில்லை. இச் சமயத்தில், **லார்ட் மார்லி** என்ற சிரேஷ்டர் இந்தியா காரியதரிசியாக இருந்தனர். இவரும் பெருந் தன்மையும், பார புத்தியு முடையவர். இவர்களிருவருஞ் சேர்ந்து, **மிண்டோ மார்லி சீர் திருத்தங்கள்** என்று சொல்லப்படும் சீர் திருத்தங்களைச் செய்து வைத்தனர். இதன்படி, நமது தேசத்தாரால் சட்ட சபைகளுக்கு அனுப்பப்படுவோர் தொகை அதிகமாக்கப்பட்டது. இந்

திய காரியதரிசியின் சபையிலும் இந்தியர்கள் நியமிக்கப் பட்டு வருகிறார்கள்.

இவர்காலத்தில், இப்போதுசக்கரவர்த்தியாகஇருக்கும் ஐந்தாம் ஜார்ஜ் மன்னர், இளவரசராக, நமது தேசத்திற்கு வந்தார். இவரைக் கௌரவப்படுத்தும் பொருட்டே, சென்னையின் முக்கிய பாகத்திற்கு ஜார்ஜ் டவுன் எனப் பெயரிடப்பட்டது. 1910-ம் வருஷம் மே மாதம் ஏழாவது எட்வர்ட் இறந்தார். பின்பு, அவர் புத்திரர், ஐந்தாவது ஜார்ஜ் என்பவர் சிம்மாசனமேறினார்.

13. **லார்ட் ஹார்டிங் :**— இவர் 12-வது கவர்னர்-ஜெனரலின் பேரர். இவர் காலத்தில்தான் நமது மாட்சிமை தங்கிய சக்கரவர்த்தியும், அவரது மனைவியாரும் இந்தியாவிற்கு விஜயஞ்செய்து, டில்லிமா நகரில் தர்பார் மகாசபையொன்று கூட்டி முடி சூட்டிக்கொண்டனர். (12-12-1911) அன்றைத் தினம் தேச மெங்கும் ஒரே திருநாளாக இருந்தது. தர்பார் தினத்தை ஒவ்வொரு வருஷத்திலும், நாம் கொண்டாடி வருகிறோம். இது நடந்த மூன்று வருஷங்களுக் கெல்லாம் ஐரோப்பாவில் பிரமாதமான யுத்தமொன்று தொடங்கியது. இதுதான் மகா ஐரோப்பிய யுத்தம்.

14. **லார்ட் சேம்ஸ்போர்ட் :**—மேற்சொன்ன ஜெர்மனி யுத்தம் மிகுந்த ஊக்கமாக நடந்துகொண் டிருக்கும்போது இவர் நமது தேசத்திற்கு வைஸ்ராயாக வந்தார். யுத்தம் நடந்தேறிய கால முழுவதும், நமது தேசத்தார் யாவரும் இங்கிலீஷ்காரருக்குச் சிறந்த உதவி புரிந்து வந்தனர். ஜெர்மனியர் தோற்றுப்போய், 1918-ம் வருஷம் சமாதானஞ் செய்ய வேண்டி வந்தது. யுத்தம் நடக்கும்போதே

நமது தேசத்தில் சகல இனத்தாரும் முழு சுதந்திரம் வேண்டுமென்று பலத்த கிளர்ச்சி செய்ய ஆரம்பித்தனர். ஆகவே, இக் காலத்தில் இந்தியக் காரியதரிசியாக இருந்த **எட்வின் ஸாமுவல் மான்டேகு** என்பவரும், வைஸ்ராயும் தேசமெங்கும் பிரயாணஞ் செய்து, குறிப்பான ஜனங்களிடத்தும், சங்கங்களிடத்தும் சீர் திருத்தங்களைப் பற்றி அபிப்பிராயங்கள் சேகரித்து, ஓர் சட்டத்தை உண்டாக்கினார்கள். இதைப்பற்றிப் பின்பு சொல்லுவோம்.

15. **லார்ட் ரீடிங்** :— இவர் சட்டப் பயிற்சியில் மிகத் தேர்ந்தவர். சென்ற சில வருஷங்களுக்கு முன் நமது தேசத்திற்கு இளவரசர் வந்தது உங்களுக்கு ஞாபகமிருக்கலாம். தேசமெங்கும் சுயராஜ்யக் கிளர்ச்சியால் மிகவும் அலங்கோலமாகிப் பிளவுபட்டிருந்தது. தேசத்தைச் சமாதானத்திற்குக் கொண்டுவர இவர் மிகவும் முயன்றும் பயனற்று தேசியக் கிளர்ச்சி பலத்து வந்தது. தேசத்திற்கு சுயராஜ்யம் பெற வேண்டுமென்று நம் நாட்டோர் யாவரும் பலமாக உரைக்க ஆரம்பிக்கின்றனர்.

16. **லார்ட் இர்வின்** :— இவர் 1927-ம் ஞு ஏப்ரல் மீ ராஜப்பிரதிநிதி யானார். இவர் ஏற்கெனவே இங்கிலாந்தில் பெரும் பதவியைப் பெற்றிருந்தவர். முன் ராஜப்பிரதிநிதி காலத்தை விட இந்தியர்களுக்குச் சுதந்திரங்கள் இப்போது அதிகமாக இருந்தும் தேசத்தில் சமாதானங்கிடையாது. காங்கிரஸ் மகாசபை ஒரே பிடிவாதமாகத் தேசத்திற்கு சுயராஜ்யங் கேட்டுவருகிறது. சீர்திருத்த விஷயங்களை விசாரித்து ஆலோசனை செய்வதற்காக ஸர் ஜான் ஸைமன் என்பவரின் கீழ் ஒரு கமிஷன் பார்லியமெண்டால் ஏற்படுத்தப்பட்டு அக் கமிஷன் தேசமெங்கும் சுற்றுப்

பிரயாணஞ் செய்து சில அரசியல் சீர்திருத்தங்களை சிபார்சு செய்தது.

17. **லார்ட் வில்லிங்டன் :—** தற்காலம் ராஜப்பிரதிநிதியாக இருப்பவர் லார்ட் வில்லிங்டன். இவர் பம்பாயில் ஐந்து வருஷ காலமும், சென்னையில் ஐந்து வருஷ காலமும் கவர்னராயிருந்தவர். இவருக்கு இந்தியாவைப் பற்றியும், இந்தியரைப்பற்றியும் நன்றாகத் தெரியும். இவர் காலத்தில் இந்தியர்களுக்கு பெருவாரியான அதிகாரங்களுக்கு அரசியல் சீர்திருத்தங்களும் கிடைக்குமென்று சொல்லக்கூடும்.



## 23. இந்திய துரைத்தனத்தாரும் சுதேச இராஜ்யங்களும்

தற்காலத்திய இந்தியாவின் படத்தைப் பாருங்கள். அதில் ஆங்கிலேயரால் நேரில் அரசாளப்பட்டு வரும் பாகங்களையும் இந்திய மன்னர்களால் ஆளப்பட்டு வரும் பாகத்தையும் கவனியுங்கள். இச் சுதேச ராஜ்யங்கள் ஒன்று சேர்ந்து நமது தேச மொத்த விஸ்தீரணத்தில் மூன்றில் ஒரு மடங்கு (சற்றேறக்குறைய) இருக்கின்றன. அவைகளின் ஜனத்தொகை நமது தேச மொத்த ஜனத்தொகையில் சுமார் நாலில் ஒருமடங்கு.

நமது தேசத்தில் சுமார் 700 சுதேச ராஜ்யங்களிருக்கின்றன; இவைகளில் ஹைதராபாத், மைசூர், காஸ்மீரம், பரோடா, திருவாங்கூர், பாடியாலா, கொல்ஹாபூர், கொச்சி முதலிய ராஜ்யங்கள் மிகப் பெரியவை.

இச் சுதேச மன்னர்களெல்லாம் முன் சொல்லியவாறு ஆங்கில ஏகாதிபத்தியத்திற் கீழ்ப்பட்டவராவர். இவர்கள்

யாவரும் வெவ்வேறு காலங்களில் இந்திய இராஜாங்கத்தோடு உடன்படிக்கைகள் செய்துகொண்டிருக்கிறார்கள். இவர்கள் இந்திய இராஜாங்கத்தாரின் உத்தரவின்றி ஒருவருடன் ஒருவர் சண்டையாவது சமாதானமாவது செய்தல் கூடாது. இத்துடன் கூட ஒவ்வொரு சுதேச மன்னனும் தனது பிரதான நகரத்தில் ஒரு ஆங்கில ரெஸிடெண்டை வைத்திருத்தல் வேண்டும். அவர் அங்கிருக்கும் சங்கதிகளைப்பற்றி அடிக்கடி இந்தியகவர்ன்மெண்டுக்கு தெரிவித்து வருவார். இந்திய மன்னர்களுள் ஏதாவது மனஸ்தாபங்களுண்டானால் அவைகளை விசாரித்துத் தீர்ப்புச் சொல்லும் அதிகாரம் இந்திய கவர்ன்மெண்டைச் சார்ந்தது.

இச் சுதேச ராஜ்யங்கள் எவ்விதமாக ஆங்கில ஆதிபத்யத்தின்கீழ் வந்தன என்பதைப்பற்றிச் சுருங்கச் சொல்லுவோம். நமது தேசத்தில் ஆங்கில ராஜ்யஸ்தாபனமான காலம் முதல் கிழக்கிந்திய கம்பெனியார் சுதேசமன்னர்களுடன் சரிசமத்துவமான நிலையினின்று உடன்படிக்கைகள் செய்துவந்தனர். இப்படிச் செய்வதால் பல தீங்குகள் விளைந்தன. சுதேச மன்னர்கள் ஒருவருடன் ஒருவர் சண்டை செய்து, தேசமெங்கும் ஒரே குழப்பமாகச் செய்து, தங்கள் ஜனங்களுக்கும் மிகுந்த துன்பத்தை விளைவித்தார்கள். இத்துடன் நிற்காது இவர்கள் பிரெஞ்சுக்காரர் முதலிய ஆங்கிலேயரின் விரோதிகளுடன் சேர்ந்து ஆங்கில ராஜ்யத்திற்கே அடிக்கடி பெருத்த அபாயத்தை விளைத்துவந்தனர். ஆகவே, பொதுஜன நன்மையை உத்தேசித்தும், தங்கள் இந்திய ராஜ்யத்தின் பந்தோபஸ்தை உத்தேசித்தும் சுதேச ராஜ்யங்கள் எல்லாவற்றையும் தங்கள் அதிகாரத்தின்கீழ் கொண்டுவரவேண்டியது அவசியமென்று ஆங்கில அதிகாரிகள் தீர்மானித்தார்கள்.

இதை முதல் முதல் நன்கறிந்து அனுபோகத்திற்குக் கொண்டுவந்தவர் நான்காவது கவர்னர் - ஜெனரலாகிய மார்க்குவிஸ் ஆப் வெல்லெஸ்லி. அவர் காலத்தில் நடந்த உபகார நியமன உடன்படிக்கைகளைப் பற்றியும், அவைகளின் நிமித்தமாக நடந்த யுத்தங்களைப் பற்றியும் நீங்கள் படித்திருக்கிறீர்கள். இவருக்கு வெகு காலத்திற்குப் பின்பு கவர்னர் - ஜெனரலாக வந்த லார்ட் டல்ஹௌஸியும் இவரது அபிப்பிராயத்தைக் கொண்டவர். புத்திரசந்தானம் பெறாத சுதேச மன்னர்களின் ராஜ்யங்களை இவர் ஆங்கில அரசுடன் சேர்த்த விஷயத்தைப் பற்றியும் நீங்கள் படித்திருக்கிறீர்கள்.

இவர் செய்த காரியத்தால் சுதேச மன்னர்களுள் பெருந் திகில் உண்டாகிவிட்டது. 1857-ம் வருஷத்தில் நடந்த கலகத்திற்கு இதுவும் ஒரு முக்கிய காரணமாயிருந்தது. ஆகையால் சிப்பாய் கலகம் முடிந்த பிறகு விக்டோரியா மகாராணியார், இனிமேல் சந்ததியற்ற ராஜ்யங்கள் ஆங்கில அரசாங்கத்தோடு சேர்க்கப்படமாட்டா வென்றும், சுதேச மன்னர்கள் தாங்கள் செய்துகொடுத்த உடன்படிக்கைகளின்படி நடந்துவரும் வரையில் அவர்கள் பாதுகாக்கப்பட்டு வருவதுமன்றி வம்ச பரம்பரையாக ஆண்டு வரலாமென்றும், பிரசங்கம் செய்தார். இந்த நிபந்தனையின்படி எந்த சுதேச மன்னனாவது சரியாக ஆண்டுவராமற் போனால், அவன் உடனே பட்டத்தினின்றும் நீக்கப்படுவதில்லை. அவனைக் கூடியமட்டும் நல்ல வழியில் கொண்டுவரக் கவர்ன்மெண்டார் சகல வழியிலும் பிரயத்தனஞ் செய்கிறார்கள். அதிலும் அவன் சரிப்பட்டு வராமற் போனால் அரசாங்கத்தினர் அவனைப் பட்டத்தினின்றும் நீக்கி, வேண்டிய திறமை வாய்ந்த சுற்றத்தாரில் ஒருவனைப் பட்டம்

வகிக்கும்படி செய்கின்றனர். இதற்குதாரணமாக, 1875-ம் வருஷத்தில், தன் ராஜ்யத்திலிருந்த ரெசிடெண்டை விஷம் வைத்துக் கொல்ல முயன்றார் என்ற பெருங் குற்றம் பரோடாவின் **கேயிக்வார்** மன்னரின்மீது சாற்றப்பட்டது. அவர் பட்டத்தினின்று நீக்கப்பட்டாரெனினும் அவர் வம்சம் முழுவதும் ராஜ்ய சுதந்திரத்தினின்று விலக்கப்படவில்லை. கெயிக்வார் வம்சத்தில் சார்ந்த ஒரு ராஜகுமாரனுக்குப் பட்டங் கொடுக்கப்பட்டது.

1831-ம் வருஷமுதல் மைசூர் ஆங்கிலேயருக் குட்பட்டு, இங்கிலீஷ் கமிஷனர் ஒருவரால் ஆளப்பட்டு வந்தது. ஆனால் 1881-ம் வருஷத்தில் லார்ட் ரிப்பன் ராஜப்பிரதிநிதியா யிருக்கும்போது, பழைய இந்து அரச சந்ததியைச் சார்ந்த **சாமராஜேந்திர உடையார்** என்பவர் மைசூர் மஹாராஜாவாகப் பட்டஞ் சூட்டப்பட்டார். இதேவிதமாக 1857-ம் வருஷமுதல் ஆங்கிலேயர் கைவச மிருந்த **குவாலியர்** ஸிந்தியா வம்சத்தைச் சார்ந்த ஒரு மன்னருக்குக் கொடுக்கப்பட்டது.

இக் காரணங்கள் பற்றி இந்திய மன்னர்களுக்கும் ஆங்கில இராஜாங்கத்தினருக்கும் அதிக ஒற்றுமையும், சிநேக விசுவாசமும் ஏற்பட்டது. 1906-ம் வருஷம், நமது சக்கரவர்த்தியாகிய ஐந்தாவது ஜார்ஜ் மன்னர் இளவரசரா யிருக்கும்போது நமது தேசத்திற்கு வந்தார். அப்போது சுதேச மன்னரெல்லாம் அவரை வெகு ஆவலுடன் எதிர்கொண் டழைத்து உபசரித்தனர். ஜார்ஜ் மன்னரின் முடிசூட்டு நிமித்தமாக 1911-ம் வருஷம் டில்லியில் வெகு சிறப்பாக நடந்த தர்பாரில் சுதேச மன்னரெல்லாம் மிகுந்த ஆடம்பரத்துடன் வெகு விசேஷமாகக் கூடினார்கள். அது இம் மன்னர்களுக்கு நமது சக்கரவர்த்தியிட மிருக்கும் விசு

வாசத்தைக் காட்டும் ஓர் அறிகுறியாகும். தங்களுடைய நற்குணத்திற்கேற்ப, 1921-ம் வருஷம் நமது இளவரசர் நம் தேசத்திற்கு விஜயஞ்செய்தபோது, சுதேச மன்னர் யாவரும் அவரை அன்புடன் வரவேற்றி உபசரித்தார்கள்.

1914-ம் வருஷம் ஜெர்மனியுடன் இங்கிலாந்து யுத்தத்திற்குச் சென்றபோது சுதேச மன்னரெல்லாம் தங்களாலியன்றவரை போட்டி போட்டு பொருளையும் சேனைகளையும் சமர்ப்பித்தார்கள். உதாரணமாக, மைசூர் மகாராஜா 50 லக்ஷம் ரூபாய் கொடுத்தார். சுதேச மன்னரின் சேனைகளும், சில சுதேச மன்னரும் ஐரோப்பாவிலும், எகிப்திலும், மெஸொபொடேமியாவிலும், ஆப்பிரிக்காவிலும் சென்று, ஆங்கில சாம்ராஜ்யத்தின் நிமித்தம், மிகுந்த தைரியத்துடனும், விசுவாசத்துடனும் எதிரிகளுடன் போர் செய்தார்கள். இவர்கள் செய்த உதவியைப் பற்றி ஆங்கில ராஜதந்திரிகள் பார்லிமெண்டிலும், மற்ற இடங்களிலும் மிகுந்த விசுவாசத்துடனும், நன்றியறிவுடனும் பேசியுள்ளார்கள்.

யுத்தகாலம் முதற்கொண்டு, ஸாம்ராஜ்யத்தின் விஷயங்களைக் கவனிக்குமாறு வருஷா வருஷம் ஸாம்ராஜ்யத்தின் பல பாகங்களின் பிரதிநிதிகளடங்கிய ஆலோசனை சபையொன்று நடைபெற்று வருகிறது. அதில் நமது தேசத்திற்கு மூன்று பிரதிநிதிகளுண்டு; அவர்களில் ஒருவர் சுதேச மன்னராயிருத்தல் வேண்டும். இத்துடன், நிற்காமல், சுதேச மன்னருள் ஐக்கிய முண்டாவதற்கும் அவர்களின் அபிப்பிராயத்தை இந்திய கவர்ன்மெண்டார் கண்டு கொள்வதற்கும் மன்னர் சபை (Council of Princes) ஒன்று ஏற்படுத்தப்பட்டிருக்கிறது.

சுதேச மன்னர்களில் மைசூர் மஹாராஜா, பரோடா, கெயிக்வார் போன்ற பலர் மிகவுங் கற்றறிந்த விவேகிகள். அவர்களுடைய ராஜ்யங்கள் அநேக விஷயங்களில் முன்னேற்ற மடைந்திருக்கின்றன. நமது மாகாணத்திலிருப்பதுபோல அவைகளிலும் சட்ட நிர்மாண சபைக ளிருக்கின்றன. இந்த ராஜ்யங்களில் சிறுவர்களும், சிறுமிகளும் கட்டாயம் படித்தல் வேண்டுமென்று ஓர் சட்டமிருக்கிறது. இந்த ராஜ்யங்களில், ராஜா ஸர். டி. மாதவராவ், ஸர். கே. சேஷாத்ரி, வி. பி. மாதவராவ், ஸர். எம். விஸ்வேஸ்வரய்யா போன்ற ராஜதந்திர நிபுணர்கள் திவான்களாக இருந்து, மிகுந்த சாமர்த்தியத்துடன் ராஜ்ய விஷயங்களை நடத்தி, பெரும்புகழ் அடைந்திருக்கின்றனர்.

ஆனால் முன்சொன்னவாறு, ரெசிடெண்டுக்கு சுதேச ராஜ்யங்களில் மிகுந்த அதிகாரமும், செல்வாக்கு முண்டு. இத்துடன் கூட சுதேச மன்னர்கள் வருஷா வருஷம் இந்திய கவர்ன்மெண்டுக்குக் கப்பங்கட்டி வருதல்வேண்டும். இதில் கவர்ன்மெண்டுக்கு வருஷ மொன்றிற்குச் சுமார் 10-கோடி ரூபாய் வருமானம் வருகிறது. முக்கியமான சுதேச ராஜ்யங்களில் ஆங்கில பட்டாளங்களி லிருந்து வருகின்றன; அவைகளின் செலவு சமஸ்தானத்தைச் சார்ந்தது. சுதேச மன்னரும் அவர்களின் பிரஜைகளும் மற்ற இந்தியர்களைப் போல ரயில், தந்தி, தபால் முதலியவைகளை உபயோகிக்கும் சுதந்திரம் பெற்றிருக்கிறார்கள்.



## 24. இந்தியாவில் ஆங்கில அரசியல்

1. சென்ற பாடங்களில், நமது தேசத்தில் கொஞ்சங் கொஞ்சமாக ஆங்கில அரசாட்சி பரவின விஷயத்தைப் பற்றியும், கவர்னர்-ஜெனரல்களும் வைஸ்ராய்களும் தேச முன்னேற்றத்திற்காகப் பாடுபட்டதைப் பற்றியும் படித்தீர்கள். இப் பாடத்திலும், இனி வரும் பாடங்களிலும் நமது தேசம் எவ்விதம் அரசாளப்படுகின்றதென்பதையும், சரிவர அரசாட்சி செய்வதற்கு எவ்வித ஏற்பாடுகள் செய்யப்பட்டிருக்கின்றன என்பதையும் படிப்போம்.

2. கவர்ன்மெண்ட் அல்லது அரசாங்கமென்பது ஜனங்கள் தங்களுடைய சௌகரியத்திற்காக ஏற்படுத்திக் கொண்ட ஒரு சாதனம். முதலில் ஒரு கிராமத்தை எடுத்துக் கொள்வோம். அக்கிராமத்திலுள்ள ஒவ்வொரு வீட்டாரின் குடும்ப விஷயங்களையும் அவ்வீட்டாரே கவனித்து வருகின்றனர். ஆனால், ஆறு, குளங்கள், நீர்ப் பாசனம், கோயில், திருநாள் முதலிய **பொது** விஷயங்கள் ஒவ்வொரு கிராமத்திற்கும் இருக்கின்றன வல்லவா? அவை எல்லோருக்கும் பொதுவா யிருந்தபோதிலும், அக் காரியங்களைச் சரிவரப் பார்த்து வருவதற்குத் தனியாக ஓர் ஏற்பாடு செய்ய வேண்டுவது அவசிய மன்றோ? இப்படி, கிராம விஷயங்களைப் பற்றி கவனிக்க ஜனங்களால் செய்யும் ஏற்பாட்டிற்குக் கிராம கவர்ன்மெண்ட் என்று பெயர். தொன்று தொட்டே, நமது தேசத்தில் ஒவ்வொரு கிராமத்திலும் இப் பொது விஷயங்களைக் கவனிப்பதற்காக அக் கிராம வாசிகள் பஞ்சாயத்துச் சபை ஏற்படுத்தி யிருக்கின்றனர். இப்பஞ்சாயத்தை, கிராம கவர்ன்மெண்டென்றே சொல்ல வேண்டும். இதுபோல ஒரு தேசமுழுவதையு மெடுத்துக்

கொண்டால், அயல் தேசங்களினின்று அன்னியர் படையெடுக்காமல் காத்தல்; உள் நாட்டில் சண்டை சச்சரவில்லாமல் சமாதானத்தைப் போற்றி வருதல்; வித்தை, கைத்தொழில்கள், வியாபாரம் முதலியவைகளை ஆதரித்தல் இவை போலும் பல முக்கியமான பொது விஷயங்களிருக்கின்றன. இவைகள், மிகப் பெரிய விஷயங்களாகையால் இவைகளைக் கவனிப்பதற்குத் தனியாக ஓர் ஏற்பாடிருத்தல் வேண்டுமன்றோ? இதற்குத் தேசிய கவர்ன்மெண்டு என்று பெயர்; இதுவும் பொது ஜன நலத்திற்காக ஏற்பட்ட ஒரு சாதனமே.

3. அரசியலின் அமைப்பு பல விஷயங்களில் மனிதனது உருவ அமைப்பை ஒத்திருக்கிறது. முதலில் மனித சரீரத்திற் போல ராஜாங்க அமைப்பிலும் பல பிரிவுகள் உள்ளன. நமது சரீரத்தில் தலை, கைகள், கால்கள் முதலிய உறுப்புக்களொவ்வொன்றும் வெவ்வேறு காரியங்களைச் செய்து வருகின்றன. அதுபோல அரசாங்கத்திலும், பல அங்கங்கள் உள்ளன. இவைகளுக்கு இலாகாக்களென்று பெயர். இதுவுமன்றி, அரசாங்க சௌகரியத்திற்காக, தேசம் மாகாணங்களாகவும், ஒவ்வொரு மாகாணமும் ஜில்லாக்களாகவும், ஒவ்வொரு ஜில்லாவும் தாலூகாக்களாகவும், ஒவ்வொரு தாலூகாவும் கிராமங்களாகவும் பிரிக்கப்பட்டிருக்கின்றன. நமது தேசத்திற் கதிபதி, டில்லியிலிருக்கும் ராஜப்பிரதிநிதி. அவர் இங்கிலாந்து ராஜாவால் நியமிக்கப்படுவதால் நமது சக்கரவர்த்திக்கும், இங்கிலீஷ் பார்லியமெண்ட் சபைக்கும் அவர் ஜவாப்தாரியாவர். ஒவ்வொரு மாகாணத்திற்கும் கவர்னர்கள் என்னும் பிரதம அதிகாரிகளுண்டு. அவர்கள் அநேகமாக வைஸ்ராயிக்குக் கீழ்ப்பட்டவர்கள். ஒவ்வொரு ஜில்லாவிற்கும் கலெக்டர்கள்

உண்டு. அவர்கள் கவர்னருக்குக் கீழ்ப்பட்டவர்கள். தாலூகாவின் தாசில்தார்கள் கலெக்டருக்கும், கிராமத்தின் கணக்குப்பிள்ளைகளும், மணியக்காரரும் தாசில்தார்களுக்குக் கீழ்ம் பட்டவர்கள்.

4. மேலும் வயது அதிகமாக அதிகமாக, மனித சரீரத்தில் எப்படி மாறுபாடுகளேற்படுகின்றனவோ, அவ்விதமே அரசியலின் அமைப்பிலும் மாறுபாடுகள் ஏற்படுகின்றன. ஜனங்களின் படிப்பும், அனுபோகமும் விருத்தியடைய அடையத் தங்களுடைய நோக்கங்களுக்கும், தேவைகளுக்குந் தகுந்தபடி, அரசியலில் மாறுபாடுகள் கொண்டுவர முயல்கின்றனர். இம் மாறுபாடுகளுக்குத்தான் சீர்திருத்தங்கள் (Reforms) என்று பெயர். இராஜாங்கம் ஜன சௌகரியத்திற்காக ஏற்பட் டிருக்கிறபடியால், அதிலேற்படும் சீர்திருத்தங்களும், பொது ஜனங்கள் விரும்பிய வண்ணமே இருத்தல் வேண்டும்.

5. கம்பெனியார் நமது தேச நிர்வாகத்தை அடைந்த நாள் முதற்கொண்டு அவர்களா லேற்படுத்தப்பட்ட அரசியலி னமைப்பு, பொதுஜன நன்மைக்காகவே இருந்த போதிலும், சுதேச ஜனங்களுக்கு ஜவாப்தாரியாக இருக்கவில்லை. இங்கிலாந்து முதலிய தேசங்களில் அரசாங்கத்திலிருப்போர் தாம் செய்யுங் காரியங்களுக்கு அத்தேச ஜனங்களுக்குப் பதில் சொல்லித் தீரவேண்டும். இம்முறை நமது தேசத்தில் இல்லை. எனினும், கம்பெனி கால முதற்கொண்டே, பார்லிமெண்டார் இந்தியா கவர்ன்மெண்டு பொதுஜன விருப்பமாக ஆண்டு வரவேண்டுமென்று வற்புறுத்தி யிருக்கின்றனர். இதற் குதாரணமாக, முதல் கவர்னர் - ஜெனரலான வாரன் - ஹேஸ்டிங்ஸ் விசாரணை செய்யப்பட்டதைச் சொல்லலாம். கம்பெனிச் சாஸனம்

சோதிக்கப்பெற்றுத் திரும்பிக் கொடுத்துவந்த ஒவ்வொரு சமயத்திலும் பார்லியமெண்டில் கம்பெனி விஷயங்கள் நுட்பமாகப் பரிசோதிக்கப்பட்டன. 1833-ம் வருஷத்தில் நமது தேசத்தோருக்குச் சில உயர்ந்த உத்தியோகங்களுங் கொடுக்கப்பட்டன.

6. இப்படிச் செய்வதில் பார்லியமெண்டாரின் அபிப்பிராயம் யாதெனில், இந்தியர்களுக்கு உத்தியோகங்கள் வகிப்பதற்குச் சந்தர்ப்பங்கள் கொடுத்து, அவர்களுக்குப் படிப்பும், அநுபோகமு மதிகரிக்க அதிகரிக்கச் சிறிது சிறிதாகத் தாமே அரசாளும் அதிகாரமும் அவர்களுக்குக் கொடுக்கப்பட வேண்டுமென்பதே. சட்டதிட்டங்கள் செய்வதில் அநுபோக முண்டாவதற்கும், 1858-ம் வருஷமுதல் இதுவரை, நான்கு தடவைகளில் சட்டங்கள் உண்டாக்கியிருக்கின்றனர் (1858, 1892, 1909, 1919). சட்ட சபைகளால் உண்டாக்கப்படும் சட்டங்களைத் தழுவியே கவர்ன்மெண்டார் அநுசரித்தல் அவசியமாகும். சட்ட சபைகளில் பெரும்பாலார் நம்மவர்களாயிருந்து, அவர்களுக்குச் சகல வித சட்டங்களையும் உண்டாக்கி, கவர்ன்மெண்டைச் சரிவர நடத்து மதிகாரம் நாளடைவில் கொடுக்க வேண்டுமென்பது பார்லியமெண்டி னபிப்பிராயம். இச்சட்டங்களைப் பற்றியும், அவைகளுண்டான சந்தர்ப்பங்களைப் பற்றியும் இங்கு சுருங்கச் சொல்வோம்.

7. 1858-ம் வருஷத்தில்தான், நமது தேசத்தின் ராஜாங்க நிர்வாகம் இங்கிலீஷ் துரைத்தனத்தாரால் நிர்வகிக்கப்பட்டது. அச் சமயத்திலேயே மஹாராணியார் தம் சிறந்த விளம்பரத்தை வெளியிட்டார். அதில், ஆங்கில அரசாங்கத்தின் கொள்கைக ளெல்லாம் அடங்கியிருக்கின்றன. இச் சமயம்வரை, கவர்ன்மெண்டார் அல்லது

நிர்வாக சபையாரே தேசத்திற்கு வேண்டிய சட்டங்களை யுண்டாக்கி ராஜ்ய பரிபாலனமுஞ் செய்துவந்தனர். சட்டங்கள் செய்வதற்கென்று சட்ட நிரூபண சபை (Legislative Council) யொன்று தனியாக அப்போது கிடையாது. ஆனால் மேற்குறித்த வருஷத்திற்குப் பின், சட்ட நிரூபண சபையொன்று ஏற்படுத்தப்பட்டு, அதில் சில இந்தியர்களும் நியமிக்கப்பட்டார்கள்.

8. 1892-ம் **வருஷ சட்டம் :—** இச் சட்டத்தின்படி, மாகாணச் சட்ட நிரூபண சபையி னங்கத்தினர் தொகையும், இந்தியச் சட்ட நிரூபண சபையி னங்கத்தினர் தொகையும் அதிகமாக்கப்பட்டன. தேசத்தவரில் சர்க்கார் உத்தியோகத்தி லில்லாதவரிலும் சிலரைத் தேர்ந் தெடுக்கலாமென்ற சுதந்தரம், இச் சட்டத்தின்படி, முனிஸிபாலிடிகளுக்கும், ஜில்லா, தாலூகா போர்டுகளுக்கும் கொடுக்கப்பட்டது. இவ்விதமாகத் தேர்ந்தெடுக்கப்பட்ட அங்கத்தவர் சட்ட சபைக் கூட்டங்களில் கவர்ன்மெண்டைக்கேள்வி கேட்கும் சுதந்தரமும், கவர்ன்மெண்டின் வருஷாந்தர வரவு செலவு திட்ட ஜாப்தா (Budget) வின் மீது அபிப்பிராயந் தெரிவிக்கும் சுதந்தரமும் கொடுக்கப்பட்டார்கள்.

9. 1909-ம் **வருஷ சட்டம் :—** 1892-ம் வருஷத்துச் சட்டம் ஜனங்களுக்குப் பிடிக்கவே யில்லை. இக் காலத்திற்குள் நமது தேசீய சமாஜமாகிய நேஷனல் காங்கிரஸ் மிகுந்த பிரபல மடைந்தது. வருஷந்தோறும் நடக்கும் அதின் கூட்டங்களில் நமது தலைவர்களும், ஐரோப்பிய அபிமானிகளும் நம் தேசத்தோருக்கு இன்னும் பலவித சுதந்தரங்கள் கொடுக்க வேண்டுமென்று வற்புறுத்திக் கேட்டனர். இதோடு நிற்காமல், சில புத்தியீனர்கள், இந்தியாவிற்குச் சுதந்தரம் பெறவேண்டு மென்கிற எண்

ணத்தோடு வெடிகுண்டு முதலியவைகளை உபயோகித்து அனேகம் படுகொலைகள் செய்தனர். கவர்ன்மெண்டார் இவர்களைத் தகுந்தபடி சிக்ஷைசெய்தபோதிலும், நமக்கு அதிக சுதந்தரங்கள் கொடுக்க எண்ணி இந்த வருஷத்தில் ஒரு சட்ட முண்டாக்கினர். இதற்கு வைஸ்ராய் மிண் டோவும, இந்திய காரியதரிசி லார்ட் மார்லியும் கர்த்தாக் களா யிருந்தபடியால் இச் சட்டத்திற்கு மிண்டோ-மார்லி சீர்திருத்தங்கள் என்று பெயர்.

10. இதன்படி, மாகாண நிர்வாகசபையிலும், இந்திய நிர்வாக சபையிலும் ஒவ்வோர் இந்திய மெம்பர்கள் நியமிக் கப் பட்டார்கள். வைஸ்ராய்க்கும், கவர்னருக்கு மடுத்து, இதுதான் நமது தேசத்தில் மிகவு முயர்ந்த பதவி. சட்ட சபைகளுக்கு நேராக மெம்பர்களைத் தேர்ந்தெடுக்கும் சுதந் தரம் ஜனங்களுக்குக் கொடுக்கப்பட்டது. இச்சட்ட சபை களில் கவர்ன்மெண்ட் உத்தியோகஸ்தர்களும், கவர்ன்மெண் டால் நியமிக்கப்பட்ட மெம்பர்களுமே பெரும்பாலரா யிருந் தனர். ஆகையால், சட்ட சபைகளில் விசேஷ சுதந்தர மொன்றும் நம் தேசத்தோருக்கு இச் சட்டத்தால் கொடுக் கப்படவில்லை.

11. 1914-ம் வருஷம் ஐரோப்பாவில் மஹா யுத்தம் தொடங்கியது. அதில் இங்கிலாந்திற்கு உதவியாக நின்று ஆங்கில ஸாம்ராஜ்யம் முழுவதும் ஜெர்மனிக்கு விரோத மாகப் போர் புரிந்தது. ஆனல், நம் தேசத்தோரைப் போல இங்கிலாந்திற்குப் பண உதவியும், சரீர உதவியுஞ் செய்தோர் வேறு எவருங்கிடையார். அச்சமயத்தில் நமது தேசத்தோர் செய்த உதவியின் பயனுகத்தான் முக்கியமாக இங்கிலாந்து வெற்றி பெற்றதென்றுஞ் சொல்லலாம். இக் காரணத்தால் இந்தியாவிற்குத் தகுந்த பிரதிப் பிரயோ

ஜனம் செய்தல் வேண்டு மென்ற எண்ணம் இங்கிலாந்து தேசமெங்கும் உதித்தது.

12. அக் காலத்தில் இந்தியக் காரியதரிசியாக இருந்த எட்வின் சாமுவல் மாண்டேகு என்பவர், 1917-ம் வருஷம், ஆகஸ்டு மாதம் 20-ம் தேதியன்று பார்லிமெண்டில் நம் தேசத்தாருக்குப் படிப் படியாக ஆங்கில ஸாம்ராஜ்யத்தின் கீழ், சுயராஜ்யம் கொடுப்பது அவசிய மென்றும், அத னிமித்தம் கூடிய சீக்கிரத்தில் இங்கிலீஷ் கவர்ன்மெண்டார் சரியான ஏற்பாடுகள் செய்யப் போகிறார்க ளென்றும் ஒரு முக்கிய அறிக்கையை வெளியிட்டார். இவர் தம் வாக்குத் தத்தத்தை நிறைவேற்றும் பொருட்டு, அதே வருஷம் நவம்பர் மாதம் நமது தேசத்திற்கு வந்தார். பிறகு, இவர் வைஸ்ரா யாகிய லார்ட் செம்ஸ்போர்டுடன் தேச மெங்கும் பிரயாணஞ் செய்து, முக்கிய தலைவர்களுடனும், சங்கங்க ளுடனும் இவ் விஷயத்தைப் பற்றிக் கலந்து பேசி ஓர் அறிக்கை வெளியிட்டனர். இதற்குப் பின் சிறு 'கமிடி' ஒன்று ஏற்படுத்தப்பட்டு அதனங்கத்தினர் நம் தேசத்தில் யார் யாருக்கு ஓட் அல்லது சட்ட நிரூபண சபைக்கு மெம்பர்களைத் தேர்ந்தெடுக்கும் சுதந்தரங் கொடுக்கலாமென நிச்சயிக்கும் பொருட்டு இந்தியா வெங்கும் பிரயாணஞ் செய்து, ஆங்காங்கு முக்கிய ஜனப்பிரதிநிதிகளிடம் வாக்கு மூலங்கள் முதலியவை வாங்கினார்கள். இவர்களின் வாக்கு மூலங்களின்பேரிலும், தம் அறிக்கைகளின்பேரிலும், இந்தியக் காரியதரிசியானவர், ஒரு மசோதாவைத் தயாரித்து, அதைப் பார்லியமெண்டின் முன்பு கொண்டு வந்தார். இதனைத் தீர யோசிக்கும் பொருட்டு பார்லியமெண்ட் அங்கத்தினரடங்கிய கமிட்டியொன்று ஏற்படுத்தப்பட்டது. நமது தேசத்தினின்றும் பல பிரதிநிதிகள் இங்கிலாந்

திற்குச் சென்று, இக் கமிட்டியின் முன் தத்தம் குறைகளை எடுத் துரைத்தார்கள். இவ்விதமாகக் கூடுமான வரையில் மசோதாவி லிருந்த குற்றங்கள் நீக்கப்பட்டன. இவ்விதம் சீர்படுத்தப்பட்ட மசோதா 1919-ம் வருஷம், டிஸம்பர் மாதம் பார்லியமெண்டால் அங்கீகரிக்கப்பட்டுச் சட்ட மாயிற்று. அடுத்த வருஷம், இச் சீர்திருத்தச் சட்டம் அமுலுக்குக் கொண்டுவரப்பட்டது.



## 25. சீர்திருத்தச் சட்ட விவரம்

1. சென்ற பாடத்தில், 1919-ம் வருஷத்திய சீர் திருத்தச் சட்டம் உண்டான சந்தர்ப்பங்களைப் பற்றிப் படித்தீர்கள். இந்தப் பாடத்தில் அச்சட்டத்தால் ராஜாங்க அமைப்பிலேற்பட்ட மாறுபாடுகளைப் பற்றி நோக்குவோம். இதுவரையி லிருந்த சட்ட சபைகளில் அரசாங்க வர்க்கத் தினரால் நியமிக்கப்பட்ட மெம்பர்களே பெரும்பாலரா யிருந்தனர். ஆகையால், அவைகளில் நம் பிரதிநிதி களுக்குப் பேசுஞ் சுதந்திரமே யன்றி, சட்டங்கள் செய்யும் அதிகாரம் கிடையாது. ஆனால், 1919-ம் வரு ஷத்திய சீர்திருத்தச் சட்டத்தின்படி, மாகாண சட்ட சபைகளில் மட்டுமல்லாது இந்தியர் சட்ட சபைகளிலும் ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்படும் பிரதிநிதிகளே பெரும் பாலரா யிருக்கின்றனர். ஆகையால், நமது பிரதிநிதிகள் நமக்கு வேண்டிய சட்டங்களை உண்டாக்கிக் கொள்ளலாம். இவைகளை அமுலுக்குக் கொண்டுவராமல் தடுக்கு மதிகாரம் கவர்னருக்கும், வைஸ்ராயிக்கும் இருந்தபோதிலும், அவர்கள் ஜனப் பிரதிநிதிகளால் உண்டாக்கப்பட்ட சட்டங்களைக் கண்டபடி அவ்விதம் தடுப்பதில்லை. இச் சட்டங்கட்கு

ஒவ்வொரு ஸர்க்கார் உத்தியோகஸ்தரும் கீழ்ப்படிந்து அவைகளை யனுசரித்தே ராஜ்யபரிபாலனஞ் செய்தல் வேண்டும். ஆகையால் அரசாங்க உத்தியோகஸ்தர்களெல்லாம் பொதுஜன சேவகர்களாய்விட்டார்கள். மேலும் படிப்பு, கைத்தொழில்கள், வியவசாயம், ஜில்லா, தாலூகா போர்டுகள், முனிசிபாலிடிகள் முதலிய விஷயங்களில், நமது பிரதிநிதிகள் இட்டதுதான் சட்டம் எனலாம்.

2. I. **சக்கரவர்த்தி** (The Crown). நமது தேசத்திற்கும், ஆங்கில ஸாம்ராஜ்யத்திற்கும் சக்கரவர்த்தியே தலைவர். அவருக்கு மிஞ்சிய அதிகாரம் எவருக்கும் கிடையாது. அவரிடமிருந்தே சட்ட சபைகள் தம் சுதந்தரங்களைப் பெறுகின்றன. தேசத்திலுள்ள சகல உத்தியோகஸ்தர்களும் அவருக்குக் கீழ்ப்பட்டவர்கள் ; அவரிடமிருந்தே தம் அதிகாரத்தைப் பெறுகின்றனர். ராஜ்ய விஷயங்களில் அவருக்கு யோசனை சொல்லி, அவருக்குப் பிரதிநிதியாகத் தேசத்தையாளப் பல மந்திரிகள் உளர். இவர்கள் ஏறக்குறைய 30 பேருண்டு. அவர்களுக்குக் 'காபினெட்' என்ற பொதுப் பெயருண்டு. இவர்கள் யாவரும், பார்லியமெண்ட் மகா சபையில் அதிகாரம் வகிக்கும் கட்சியைச் சார்ந்தோராயிருத்தல் வேண்டும். இக் 'காபினெட்' அல்லது மந்திரிசபையில் இந்தியக் காரியதரிசியும் ஒருவர்.

3. II. **பார்லியமேண்டு.** நமது தேச விஷயங்களிலும், ஆங்கில ஸாம்ராஜ்ய விஷயங்களிலும், சக்கரவர்த்திக்கடுத்து சகல அதிகாரமும், பார்லியமெண்டு மகா சபையிடமிருந்து வருகின்றன. இதுதான், ஆங்கில ஸாம்ராஜ்யத்தின் உயர்தரச் சட்ட நிரூபண சபை யென்று சொல்லலாம். இச்சபை அங்கத்தினர் யாவரும் இங்கிலாந்தி லிருக்கும் ஓட்டர்களால் தேர்ந்தெடுக்கப்படுகின்றனர்.

4. III. இந்தியக் காரியதரிசி. இவர் காபினெட் அங்கத்தவரில் ஒருவரென்று சொன்னேமல்லவா? இவருக்கென்று தனியாக ஓர் ஆபீஸ் லண்டனில் உண்டு. அதற்கு இந்தியா ஆபீஸ் என்று பெயர். நம் தேச நிர்வாக விஷயங்களில் இவருக்கு யோசனை சொல்ல 'இந்தியா கவுன்சில்' என்றதோர் சபை உள்ளது. இவர் உத்தியோகமும், இச் சபையும் 1858-ம் வருஷத்தில் உண்டாக்கப்பட்டன வென்பது உங்களுக்கு ஞாபகமிருக்கலாம். இச் சபையில், நமது தேச விஷயங்களில் தேர்ச்சி பெற்றவர்களே, அங்கத்தினர்களாக நியமிக்கப்பட்டு வருகிறார்கள். சென்ற சில வருஷங்களாகச் சில இந்திய கனவான்களும் இதன் அங்கத்தவராக நியமிக்கப்பட்டு வருகின்றார்கள். இந்தியக் காரியதரிசிக்கு வருஷத்திற்கு 5,000 பவுன் அல்லது 75,000 ரூபாய் சம்பளம். சீர்திருத்தச் சட்டத்திற்கு முன் இச் சம்பளமும் இந்தியா ஆபீஸ் செலவும் நமது தேச பொக்கிஷத்தினின்று கொடுக்கப்பட்டு வந்தன. ஆனால், 1919-ம் வருஷத்திற்குப்பின் இவ்விரண்டு செலவுகளும் ஆங்கிலப் பொக்கிஷத்தினின்று கொடுக்கப்பட்டு வருகின்றன. இந்திய சபை அங்கத்தினர் ஒவ்வொருவருக்கும் வருஷத்திற்கு 1,200 பவுன் சம்பளம்; இந்திய அங்கத்தினருக்கு மட்டும் இச் சம்பளத்துடன் கூட 600 பவுன் படியுமுண்டு.

5. இந்தியக் காரியதரிசிக்கு, நமது தேச கவர்ன்மெண்டின்மீது மிகுந்த அதிகாரமுண்டு. சகல விஷயங்களிலும் இவரது அபிப்பிராயத்தையே இந்தியக் கவர்ன்மெண்டார் மேற்கொள்ளவேண்டும். இவர் இந்திய கவர்ன்மெண்ட் விஷயங்களில் பார்லியமெண்ட் சபைக்கு ஜவாப்தாரியாவர். வைஸ்ராயும் இந்தியச் சட்ட நிரூபண சபையும் ஏதாவது ஒரு விஷயத்தில் ஏகோபித்திருந்தால் இவர் அதில் சாதாரணமாகத் தலையிடமாட்டார்.

6. IV. **இந்தியா கவர்ன்மேண்ட் :—(a) வைஸ்ராய் அல்லது கவர்னர் - ஜேனரல்.** நமது தேசம் ஆங்கில ஸாம்ராஜ்யத்திற் குட்பட்டிருப்பதால், அது, இங்கிலீஷ் சக்கரவர்த்தியின் அதிகாரத்திற்கும், பார்லியமெண்டின் அதிகாரத்திற்கும் கீழ்ப்பட்டிருக்கிறது. உள் நாட்டில், உயர்தர அதிகாரிகள், இந்தியா கவர்ன்மெண்டாரே. இக் கவர்ன்மெண்டுக்குத் தலைவர் வைஸ்ராய் அல்லது கவர்னர்-ஜெனரல். இவருக்கு ஏராளமான அதிகாரம் உண்டு.

7. **சீர்திருத்தச் சட்டத்தா லேற்பட்ட மாறுபாடுகள் :—** இம்பீரியல் அல்லது டில்லிச் சட்ட சபையானது, இங்கிலாந்தில் பிரபுக்கள் சபை, பொதுஜன சபை என்றுற்போல **இராஜ்ய சபை** (Council of State) யென்றும், சட்ட நிருமாண சபை (Legislative Assembly) யென்றும் இரு பிரிவுகளாகப் பிரிக்கப்பட்டது. சட்ட சபையினரின் தொகை 68 பேர்களிலிருந்து 140 பேருக்கு உயர்த்தப்பட்டது. இதில் 100 பேர்கள் ஜனங்களால் தேர்ந் தெடுக்கப்பட்டவர்கள்; மீதி யிருப்போர் வைஸ்ராயால் நியமிக்கப்பட்டவர். இவர்களிலும், சுமார் மூன்றிலொரு பங்கினர் ஸர்க்காரில் உத்தியோகம் வகிக்காதவராயிருத்தல் வேண்டும். ஆகையால் இச் சபையில் மிகப் பெரும்பான்மையோர் நம் தேசத்து ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளே யாவர். ஆனால் இச் சட்ட சபையால் உண்டாக்கப்படும் சட்டங்களை வைஸ்ராய் அனுசரிக்க வேண்டிய தென்பது அவசியமில்லை.

8. இராஜ்யசபை (Council of State) இதில் 60 மெம்பர்கள் இருக்கிறார்கள். அவர்களில் மூன்றில் ஒரு பங்கினர் ஸர்க்கார் உத்தியோகஸ்தர்கள். இச் சபையில் 33 பேர்கள் பெரியமிராசுதார்களாலும் ஜமீன்தார்களாலும், வியாபாரிகளாலும் தேர்ந்தெடுக்கப்பட்டவர்கள். மீதி யிருப்பவர்கள்

கவர்னர் - ஜெனரலால் நியமிக்கப்பட்டவர். ஸர்க்காருக்கு இச் சபையில், சட்ட சபையிலுள்ளதைவிட மிகுந்த செல்வாக்குண்டு. ஐந்து வருஷத்திற்கொரு முறை இச் சபையோர் புதிதாகத் தேர்ந்தெடுக்கப்படுதல் வேண்டும். சட்ட சபை அங்கத்தினர் மூன்று வருஷத்திற்கொரு முறை புதிதாகத் தேர்ந்தெடுக்கப்படுதல் வேண்டும்.

9. **இவ்விரு சபைகளின் சுதந்தரங்கள்** :—இவ்விரு சபைகளும் அரசாங்கத்தின் வருஷாந்தர வரவு செலவுத் திட்டங்களைச் சோதித்து, தங்கள் அபிப்பிராயங்களைக் கூறலாம். இவைகள் பொதுஜன விஷயங்களைப் பற்றிக் கேள்விகளும் கேட்கலாம்; மசோதாக்களுங் கொண்டுவரலாம். ஆனால், ராஜ்ய சபை, சில விஷயங்களைப் பற்றித்தான் தீர்மானித்தல் கூடும். இம் முறைகளால் முன்பு இருந்ததைவிட நமது தேசத்தாருக்கு சர்க்காரின்மீது அதிக செல்வாக்கிருக்கிறது.

10. V. **மாகாண கவர்ன்மெண்டு** :—சென்ற தொகுதிகளில் நமது தேசியவிஷயங்களில் உச்சஸ்தானத்திலிருக்கும் உத்தியோகஸ்தர்களைப் பற்றியும், சட்ட சபைகளைப் பற்றியும் சொன்னோம். இப் பாடத்தில் மாகாண அரசாட்சிக்காகச் செய்யப்பட்டிருக்கும் ஏற்பாட்டைப் பற்றிக் கூறுவோம். நம் தேசம் பத்து மாகாணங்களாகப் பிரிக்கப்பட்டிருக்கிறது. அனேகமாக ஒவ்வொரு மாகாணத்திற்கும் ஒவ்வொரு கவர்னர் உண்டு.

11. (*a*) **கவர்னர்** :—இந்தியா முழுவதற்கும் வைஸ்ராயெப்படியோ அப்படியே மாகாண விஷயங்களுக்குக் கவர்னர் ஏற்பட்டவர். இவரும், வைஸ்ராயைப்போல நமது சக்கரவர்த்தியால் நியமிக்கப்படுவர். இவருக்கு ராஜாங்க

விஷயங்களில் மிகுந்த அதிகாரமுண்டு. இவர்தான், நிர்வாக சபை அங்கத்தினரையும், மாகாண மந்திரிகளையும் நியமிக்கும்பொருட்டு சக்கரவர்த்திக்கு சிபார்சு செய்பவர்.

12. (*b*) **நிர்வாக சபை**:—மாகாண கவர்ன்மெண்டில், சீர்திருத்தச் சட்டப்படி, இச் சபையி னங்கத்தினர் எண்மர். அவர்கள் இரு பிரிவாகப் பிரிக்கப்பட்டிருக்கின்றனர். அவர்களில் ஐந்து பேருக்கு, நிர்வாக சபை அங்கத்தினர் என்று பெயர்; மற்ற மூவருக்கு மந்திரிகள் என்று பெயர். இம்மூவரும், சட்டசபையில் எக்கட்சியினர் பெரும்பாலரா யிருக்கின்றனரோ அக் கட்சியினின்றும் கவர்னரால்நியமிக்கப்படுபவர். இவ்விஷயத்தில் இவர்கள் இங்கிலாந்தின் காபினெட்டைப் போன்றவர்கள். படிப்பு, கைத்தொழில்கள், தாலூகா போர்டுகள், ஜில்லா போர்டுகள், முனிஸிபாலிடிகள் முதலிய விஷயங்களில் இவர்களுக்கு மிகுந்த அதிகாரமுண்டு. சட்ட சபையில் பெரும்பாலோர் இவர்களை ஆதரிக்காவிட்டால் இவர்கள் தங்கள் வேலையை ராஜிநாமா செய்துவிடவேண்டியதே. மாகாணச் சட்டசபையில் மொத்த அங்கத்தினர் 133. அதில் ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர் 100; சர்க்காரால் நியமிக்கப்பட்டவர் 29; ஆனால், சீர்திருத்தச் சட்டப்படி, படிப்பு, கைத்தொழில்கள், விவசாயம், சுகாதாரம், ஜில்லா, தாலுக்கா போர்டுகள் முதலிய இலாக்காக்களில் நமது பிரதிநிதிகளுக்குச் சுதந்தரமுங் கொடுக்கப்பட் டிருக்கிறது. இவைகள் குடியரசுக்கு மாற்றப்பட் டிருக்கிறபடியால், இவ் விலாக்காக்களுக்கு "Transferred Subjects" அல்லது 'மாற்றப்பட்ட இலாக்காக்கள்' என்று பெயர். இவைகளைப் பரிபாலனஞ் செய்யும் பொருட்டே, மந்திரிகள் நியமிக்கப்பட் டிருக்கின்றனர். இவ் விஷயங்களைப் பற்றிய மசோதாக்களைச் சட்டசபை

அங்கீகரித்துவிட்டால், அவைகளை மந்திரிகள் அமுலுக்குக் கொண்டுவந்தே தீரவேண்டும். அவர்களால் அப்படி அமுலுக்குக் கொண்டுவர முடியாமற்போனால், அவர்கள் தங்கள் வேலையை ராஜிநாமா செய்ய வேண்டியதுதான்.

13. மந்திரிகளின் பரிபாலனத்திற் குட்படாத போலீஸ், நியாயஸ்தலங்கள் போன்ற வேறு இலாக்காக்கள் இருக்கின்றன அல்லவா? இவைகளைப் பற்றியும் நமது பிரதிநிதிகள் மசோதாக்கள் கொண்டு வந்து, அவைகளை அங்கீகரிக்கலாம். ஆனால் அவைகளைக் கவர்ன்மெண்ட் அமுலுக்குக் கொண்டுவரவேண்டு மென்கிற நிர்ப்பந்தங் கிடையாது. அவைகளைக் கவர்னர் மறுத்துவிடலாம். அவ்விலாக்காக்களுக்கு 'நிறுத்தி வைக்கப்பட்ட இலாக்காக்கள்' என்று பெயர்.

14. டில்லிச் சட்ட சபையைப்போல, மாகாண சட்ட சபையும், கவர்ன்மெண்டின் வருஷாந்தர வரவு செலவு திட்ட ஜாப்தாவைப் பரிசோதித்து, செலவுகளைக் குறைத்தோ அதிகப்படுத்தியோ வரலாம். மாற்றப்பட்ட இலாக்காக்களின் செலவு விஷயமாகச் சட்ட சபையார் செய்யும் மாறுபாடுகளைக் கவர்ன்மெண்டார் அங்கீகரித்தே தீரவேண்டும். நிறுத்தி வைக்கப்பட்ட இலாக்காக்களின் செலவுகளையும் சட்ட சபையார் குறைக்கும்படியோ அதிகப்படுத்தும்படியோ மசோதாக்களை அங்கீகரிக்கலாம். ஆனால் அவைகளை அமுலுக்குக் கொண்டு வராமலும் கவர்னர் தடுத்துவிடலாம். ஆகையால் இவ் விஷயங்களில் கவர்னருக்கு ஏராளமான அதிகாரமிருக்கின்றது.



## 26. ஆங்கிலேய அரசாட்சியின் நன்மைகள்

**அமைதியும், பாதுகாப்பும் :—**நாம் ஆங்கிலேய அரசாட்சியினால் என்ன நன்மைகளை அடைந்திருக்கிறோமென்பதை நன்றாக அறிந்துகொள்ள வேண்டுமாயின் ஆங்கிலேயர்கள் முதல் முதல் இந்தியாவிற்கு வந்தபொழுது அத்தேசத்தின் நிலைமை எவ்விதமாக இருந்தது என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டுவது அத்தியாவசியமாயிருக்கிறது. அக்காலங்களில் இந்தியாவில் தற்காலத்தி லிருப்பது போன்ற அமைதியே கிடையாது. நாடெங்கும் ஒரே செங்கோல் நடத்தப்படவில்லை. பலமுள்ளவனே பெரியவனா யிருந்தான். பல பாகங்களில் பல மன்னர்கள் அரசு புரிந்து வந்தனர். அவர்கள் தமக்குள் அடிக்கடி சண்டையிட்டுக் கொண்டிருந்தார்களேயொழிய, தமது குடிகளின் க்ஷேமங்களைக் கவனிக்க முடியாமல்போயிற்று. இக் காரணத்தினாலேயேதான் அன்னியர் தேசத்தின் மீது படையெடுத்து வந்து நம் நாட்டைக் கைவசப்படுத்துவதற்கும் காரணமாயிருந்தது. இப்பொழுதோ அவ்விதமில்லை. அந்நியர் நம் தேசத்தின் மீது படையெடுக்காத வண்ணம் நிலத்தின் மார்க்கமாயும், நீர் மார்க்கமாயும் வேண்டிய பந்தோபஸ்துகள் செய்யப்பட் டிருக்கின்றன. இந்த அமைதியின் பெருமையை எடுத் துரைத்தல் மிகவும் அவசியம். அமைதியில்லாவிடின் நாட்டிலுள்ள ஜனங்கள் தத்தம் தொழில்களை நிம்மதியாகச் செய்ய இயலாது. மேலும் பொருளையும் மதியின் நுட்பத்தினால் விருத்தியாக்கிக்கொள்ளக் கூடும். இந்திய மன்னர்களின் ஆளுகைக் குட்பட்ட ஸமஸ்தானங்களைத் தவிர தேச முழுமையும் ஆங்கிலேயர் கைவசத்தி லிருப்பதால் உள் நாட்டுக் கலகங்களுக்கு இட மில்லாம லிருக்கிறது. ஒரு கிராமத்தில்கூட ஏதாவது கிளர்ச்சியெழு

மாயின் உடனே போலீஸார் சென்று அடக்கிவிடுவார்கள். போக்கு வரவுக்குரிய சாதகங்கள் இக் காலத்தி லிருப்பது போல் முன் காலங்களில் இல்லை. மேலும் முன் காலத்தில் நாடெங்கும் உலாவிக்கொண்டு ஜனங்களைக் கொன்று கொள்ளையடித்து வந்த கொள்ளைக் கூட்டங்களெல்லாம் ஒவ்வொன்றாய் ஆங்கிலேயர்களினால் பிடிக்கப்பட்டு மாய்ந்த படியால் நாடெங்கும் ஜனங்கள் அச்ச மில்லாமல் பரவி யிருப்பதுடன், ஒரு இடத்தி லிருந்து மற்றொரு இடத்திற்குப் போவதற்கும் சௌகரியமா யிருக்கிறது.

இந்தியாவைப் பாதுகாக்கும் பொருட்டு ஆங்கிலேயர்கள் ஒரு பெரிய சேனையைப் பாதுகாத்து வருகிறார்கள். உள்நாட்டில் ஏதாவது கலகங்கள் ஏற்பட்டாலும், அல்லது பகைவர்களால் ஏதாவது தீங்கு நேர்ந்தாலும் அவைகளை அடக்க எக்காலத்திலும் அரசாங்கத்தார் தயாராக இருக்க வேண்டியது அத்தியாவசிய மல்லவா? மேலும் கடல் மார்க்கமாய் இந்தியாவிற்கு வரக்கூடிய துறைமுகங்களும் செவ்வனே பாதுகாக்கப்பட்டு ஆங்கிலேயர் கைவசத்தி லிருக்கின்றன. மேற்கே ஏடன் நகரமும் கிழக்கே சிங்கப்பூர் பட்டணமும் ஆங்கிலேயர் கைவசமிருந்து வருகின்றன.

**நியாய விசாரணை.** முன் காலத்தைப் போல் மன்னனுடைய மனோராஜ்யமே சட்டமா யிராமல் தேசத்தி லுள்ள பலவேறு ஜாதியாரின் பழக்க வழக்கங்களை யொட்டி அநேக சட்டங்கள் ஆங்கிலேயரால் எழுதப்பட் டிருக்கின்றன. சட்டத்தின் முன் பிச்சைக்காரனும் பிரபுவும் ஒன்றே. மேலும் சிறிய விவகாரங்களை விசாரிப்பதற்குக் கிராம முன்ஸிபின் கோர்ட்டு முதல் படிப்படியாக தேசத்தில் அநேக கோர்ட்டுகள் ஏற்படுத்தப்பட் டிருக்கின்றன. கிராமங்களில் உண்டாகும் சிறிய விவகாரங்களைக் கிராமப் பஞ்சாயத்

தாரும் கிராம முன்ஸீபும் விசாரிக்கிறார்கள். பெரிய கேசுகளை முன்ஸீப் கோர்ட்டில் விசாரிக்கிறார்கள். ஒருவன் தனக்கு முன்ஸீப் கோர்ட்டில் நியாயம் ஏற்படவில்லை என்று கருதினால், அவன் உடனே ஜில்லா கோர்ட்டில் மனு செய்துகொள்ளலாம். ஜில்லா கோர்ட்டின் அதிகாரத்திற்குமேல் ஹைகோர்ட்டுக்கும் அப்பீல் செய்துகொள்ளலாம். இவ்விதமாக இந்தியா முழுவதிலும் சுமார் மூவாயிரம் நியாயஸ்தலங்களுக்குமேல் இருக்கின்றன. சில பெரிய கேசுகளில் நியாயாதிபதி கேஸை விசாரிக்கும்போது தனக்குதவியாக ஜூரர்களது அபிப்பிராயத்தையும் கேட்கும்படியும் ஏற்பாடு செய்யப்பட் டிருக்கிறது. ஜூரர்கள் விசாரணை நடக்கும்போது நியாயாதிபதியின் சமீபத்தில் உட்கார்ந்துகொண்டு இருதிறத்தாரின் வழக்குகளைக் கேட்டு எவன் குற்றவாளியென்று சொல்லுவார்கள்.

**கல்வி.** ஒரு தேசத்தின் நாகரிகத்தைக் கவனிக்கும்போது அத் தேசத்தில் உள்ள ஜனங்கள் கல்வியில் எவ்வளவு அபிவிருத்தி அடைந்திருக்கிறார்கள் என்பதைக் கவனிக்க வேண்டியது அத்தியாவசியம். ஏனென்றால் முன்னேற்றம் அடைய ஆவலுள்ளோர் கல்வி கற்றவர்களாயிருக்கவேண்டும். முன் காலத்தில் கல்வியறிவுடைய சிலரும் பெரும்பான்மை மத விஷயங்களிலேயே தேர்ச்சியடைந்திருந்தனர். கிராமங்கள் முதல் பெரிய நகரங்கள் பரியந்தம் அநேக பள்ளிக்கூடங்கள் ஏற்படுத்தப்பட் டிருக்கின்றன. மேலும் அஞ்ஞான இருள் ஒழியப் பெண்கள் கல்வியில் அபிவிருத்தி யடைய வேண்டுமென எண்ணங்கொண்டிருக்கும் அரசாங்கத்தார் அநேக பெண்பள்ளிக்கூடங்களையும் கலாசாலைகளையும் ஏற்படுத்தி யிருக்கிறார்கள். அநேக பெண்மணிகள்' உயர்தரக் கல்வி கற்று நாகரிகத்தி

லும் மேனுட்டாரைப்போல் நடிக்க முயற்சி செய்கிறூர்கள். பள்ளிக்கூடங்களுக்கும் கலாசாலைகளுக்கும் அரசாங்கத்தார் ஏராளமான பொருளுதவி செய்கின்றனர். கல்வி யபிவிருத்தி விஷயங்களைப் பரிபாலிக்க வித்தியா இலாகா அதிகாரிகளை நியமித்திருக்கிறூர்கள். புத்திசாலியா யிருந்து ஏழையா யிருக்கும் பிள்ளைகளுக்குக் கவர்ன்மெண்டார் பொருளுதவி யுஞ் செய்கிறூர்கள்.

**வைத்திய சுகாதார ஏற்பாடுகள்.** ஜனங்கள் சௌக்கிய மாகவும் மனத்திருப்தி யுடையவர்களாயுமிருப்பதே கவர்ன் மெண்டாருக்கு மிக்க பலமாகும். முன் காலத்தில் ஜனங் களின் சௌக்கியத்தைக் கவனித்த மன்னர்கள் சிலரே. ஆனுல் இப்போதோ கவர்ன்மெண்டார் ஏராளமான பணச் செலவுசெய்து அநேக வைத்தியசாலைகளை ஏற்படுத்தியிருக் கிறூர்கள். பெரிய பட்டணங்களில் அநேக வைத்தியசாலைக ளிருக்கின்றன. அங்கே ஏழை ஜனங்கள் இனுமாக மருந்து வாங்கிச் சாப்பிட்டு வியாதியை சொஸ்தம் செய்துகொள்ள லாம். மேலும், பிளேக் வாந்திபேதி முதலிய தொத்து வியாதிகளைப் பரவவொட்டாதபடி வேண்டிய ஜாக்கிரதை எடுத்துக்கொள்கிறூர்கள். மேலும், ஆடு மாடு முதலிய பிரா ணிகளுக்கும் அநேக வைத்திய சாலைகளும் இருக்கின்றன.

**விவசாய முன்னேற்றம் :—** நம் தேசத்தில் தொன்று தொட்டு வரும் வழக்கத்தை யொட்டி அநேகர் விவசாயத் தொழிலைச் செய்து வருகிறூர்கள். விவசாயத்தையும், விவ சாய முறைகளையும் கவனிப்பதற்கு ஒரு தனி இலாக்கா ஏற்பட்டிருக்கிறது. பெரிய நகரங்களில் விவசாயப் பள்ளிக் கூடங்கள் ஸ்தாபிக்கப்பட் டிருக்கின்றன. விவசாயஞ் செய்வோர்க்கு மூலதனத்தைக் கடன்கொடுத்து உதவி புரியும் பொருட்டு அரசாங்கத்தார் ஐக்கிய நாணயச் சங்கங் களை ஏற்படுத்தி இருக்கிறூர்கள். குடிகள் நீர்ப்பாய்ச்சலுக்

காக மழையையும் ஆறுகளையும்தான் நம்பவேண்டி இருக்கிறது. நதிகளில் வரும் வெள்ளத்தை அணைகட்டித் தடுத்து, ஓரிடத்தில் சேகரித்து, நிலங்களுக்கு நீர்ப்பாய்ச்சல் செய்கிறார்கள். இதோடல்லாமல் நெசவுத் தொழில், பென்ஸில், கடுதாசி செய்தல், மெழுகுவத்தி செய்தல், ஸோப்புகள் செய்தல் முதலான கைத்தொழில் செய்வதற்கும் அரசாங்கத்தார் ஒத்தாசை செய்கிறார்கள்.

**போக்கு வரவு சாதனங்கள் :—** முற்காலத்தில் போக்கு வரவுக்குரிய சாதனங்கள் மிகவும் கொஞ்சமே. ஒரு ஊரிலிருந்து மற்றொரு ஊருக்குப் போவதும் சாமான்களை ஒரு இடத்திலிருந்து மற்றொரு இடத்திற்குக் கொண்டுபோவதும் மிக்க துர்லபமாயிருந்தது. ஜனங்கள் பெரும்பான்மையோர் காலால் நடந்து செல்லவேண்டி இருந்தது. விவசாய அபிவிருத்தி அடைந்ததின் முக்கிய காரணங்களில் போக்கு வரவு சாதனங்களின் அபிவிருத்தி ஒன்று. முதல் முதலாக டல்ஹௌஸிப் பிரபுவின் காலத்தில் ஏற்படுத்தப்பட்ட பப்ளிக் வொர்க்ஸ் இலாக்கா ரஸ்தாக்கள், அணைகள், பாலங்கள் முதலியவை போட்டு எவ்வளவோ நன்மைகளைச் செய்திருக்கிறது. மேலும் இருப்புப் பாதைகள் போடப்பட்டிருக்கின்றன. முதன் முதலில் டல்ஹௌஸிப் பிரபுதான் இருப்புப் பாதை போடும்படி ஏற்பாடுசெய்தார். ஓரிடத்திலிருந்து மற்றோரிடத்திற்கு ஜனங்கள் மிக்க எளிதில் பிரயாணஞ் செய்யக்கூடும். மேலும் சாமான்களையும் ஓர் இடத்திலிருந்து மற்றோர் இடத்திற்குத் துரிதமாயும் சௌகரியமாயும் எடுத்துக்கொண்டும் செல்லலாம். இப்பொழுது எங்கேயாவது பஞ்சம் உண்டானால் அவ்விடத்திற்கு மற்ற இடங்களிலிருந்து தானியங் கொண்டுபோகலாம். அநேக உயிர்களைக் காப்பாற்றலாம்.



## 27. முடிவு

இப்போது நாம் நமது தேச சரித்திரத்தின் முடிவிற்கு வந்துவிட்டோம். சென்ற பாடங்களில், நீங்கள், ஆங்கிலேயர் நம் நாட்டிற்கு வந்து, அதை நாளடைவில் நம் உதவியின்பேரில் கைப்பற்றிய விஷயத்தைப்பற்றியும், அவர்கள் நம் நாட்டிற்கு வந்தபின் ஏற்பட்ட அதிசயமான மாறுபாடுகளைப்பற்றியும் படித்தீர்கள். இவர்கள் நம் தேசத்திற்கு வந்ததும், இந்தியாவிற்கும், இங்கிலாந்திற்கும் சம்பந்த மேற்பட்டதும் தெய்வ சம்மத மென்றே சொல்லலாம். நமது தேசத்தில் முற்காலத்தே அநேக ஸாம்ராஜ்யங்க ளேற்பட்டிருந்தன; நம்மவரும் அனேக விஷயங்களில் முன்னேற்ற மடைந்திருந்தனர். முக்கியமாக, மதவிஷயங்களில் இந்தியருக்கு மிஞ்சினவர் எவரும் கிடையாது. ஆனால் லௌகீக விஷயங்களில் நம் நாட்டோர், மேனாட்டோரிடமிருந்து, அநேக விஷயங்கள் தெரிந்துகொள்ளவேண்டி இருக்கின்றன. மேனாட்டார் லௌகீக சமாசாரங்களில் மிகத் தேர்ச்சி யடைந்திருந்தும் மத சம்பந்தமாக எவ்வளவோ விஷயங்கள் நம்மவரிட மிருந்து கற்றுக்கொள்ள வேண்டியவர்கள். உலகமே க்ஷேமமடைய வேண்டுமானால் மேல் நாட்டு நாகரிகமும், நம் நாகரிகமும் ஒருங்கே சேர்ந்து அதன்படி யாவரும் ஒழுகவேண்டியது இன்றியமையாதது. ஆகையால்தான், தெய்வ சங்கல்பமாக இங்கிலாந்தும் இந்தியாவும் ஒன்று சேர்க்கப்பட்டிருக்கின்றன.

அவுரங்கசீப் இறந்தவுடன், தேசமெங்கும் சட்டதிட்டமற்று, அடக்கி ஆள்வோரில்லாமல் ஒரே குழப்பமாக இருந்தது. நாளடைவில் இங்கிலீஷ்காரர் ஒருவர்தான் தேசத்திற்குச் சமாதானமும், பாதுகாப்பும் கொடுக்க முடியு

மென்று பொது ஜனங்கள் கண்டுகொண்டார்கள். முடிவாகத் தேச முழுவதும் ஆங்கிலேயர் ஆதிபத்யத்தின் கீழ்வந்துவிட்டது. நம் தேசத்தாரும், அவர்களிடமிருந்து அனேக விஷயங்களைக் கற்றுக்கொண் டிருக்கின்றனர்; ஆகவே, இங்கிலாந்தின் உதவியின் பேரில், பிரிட்டிஷ் ஸாம்ராஜ்யத்தில் கனடா, தென் ஆபிரிகா முதலிய மற்றத் தேசங்களைப்போல, நம் நாடும் சுயராஜ்யம் பெறவேண்டுமென்ற அவா அவர்களுக் குண்டாயிருக்கிறது. இந்த அவாவையும் துரைத்தனத்தார் அங்கீகரித்தே நமக்கு ராஜாங்க விஷயங்களில் அதிகாரமும், பிரதிநிதிகளை ஓட்டுகள் மூலமாகத் தேர்ந்தெடுக்கும் சுதந்தரமும் கொடுத்திருக்கிறார்கள். ஓட்டு உரிமையே நாம் சுயராஜ்யம் பெறுவதற்கு மூலாதாரம். நாம் அதைச் சரியாக உபயோகப் படுத்தி, தக்க பிரதிநிதிகளைத் தேர்ந்தெடுக்க வேண்டும். அவர்கள் மூலமாகச் சட்ட சபைகளில் நமக்குச் சௌகரியமான சட்டதிட்டங்கள் உண்டாக்கி, நாம் சுயராஜ்யத்திற்கு அருகர் என்று இங்கிலாந்தைத் திருப்தி செய்வோமானால், நமக்கு முழு சுயராஜ்யம் கிடைக்குமென்பதற்கு ஐயமேயில்லை. இந்தியாவும், பிரிட்டிஷ் ஸாம்ராஜ்யத்தில் இங்கிலாந்து, கனடா, தென் ஆபிரிகா, ஆஸ்திரேலியா முதலிய தேசங்களோடு சமபதவியை அடைந்து, க்ஷேமமாயிருக்க வேண்டுமென்று கடவுளைப் பிரார்த்திப்போமாக.

**முனிஸிபாலிடிகளில் சுய ஆட்சி:**—முதல் முதலில் நகர பரிபாலன விசாரணை, ஜில்லா போர்ட் முதலானவற்றில் இந்தியர்களுக்குச் சுய அதிகாரங் கொடுத்து உதவி புரிய வேண்டுமென்று முயற்சி செய்தவர் ஸர் தாமஸ் மன்றோ என்பவர். அவர் காலத்துக்குப் பிறகு பிறப்பிக்கப் பட்ட சட்டங்களிலும் இதையே வற்புறுத்தி யிருக்கிறார்

கள். 1857-ம் வருஷம் உண்டான சிப்பாய்க் கலகத்திற்குப் பிறகு விக்டோரியா மகாராணியார் பிரசுரஞ்செய்த அறிக்கைப் பத்திரிகையிலும் "தங்கள் தேச பரிபாலன விஷயத்தில் உயர்ந்த ஸ்தானங்களை வகிப்பதற்கு அருகராக இந்தியர்களைச் செய்யவேண்டும்" என்ற அபிப்பிராயங்களையே திரும்பியும் சொல்லி இருக்கிறார்கள்.

மேலே சொன்ன அபிப்பிராயங்களுக்கிணங்க இந்தியாவிலுள்ள பெரிய பட்டணங்களுக்கெல்லாம் 1841-ம் வருஷத்தில் முனிஸிபல் அதிகாரத்தைக் கொடுத்தார்கள். லார்ட் மேயோ காலத்தில் அவர் முயற்சியினால் முனிஸிபாலிடிகள் வேலைகளை அதிகப்படுத்தி, ஜனங்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பிரதிநிதிகளின் தொகையை ஜாஸ்தியாக்கினார். ஆனால் லார்ட் ரிப்பன் முனிஸிபாலிடிகளுக்குச் செய்த உதவி ஏராளமானது. நாளடைவில் இவைகள் விருத்தியடைந்து இப்பொழுது மிக்க பிரபலமுடையனவா யிருக்கின்றன. இந்தச் சபைகளுக்கு இவைகளின் அங்கத்தினர்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அக்கிராசனாதிபதி ஒருவர் உண்டு. முனிஸிபாலிடிகளின் கடமைகளென்னவென்றால், கல்வி அபிவிருத்தி, வரி வசூல், சுகாதாரம், பொதுச் செலவு முதலியன. சில விஷயங்களில் மாத்திரமே கவர்ன்மெண்டார் பிரவேசிக்கின்றனரே யொழிய மற்றக் காரியங்களில் சபையே ஆட்சி செய்கின்றது.

**கூட்டுறவு** :— ஜனங்கள் தங்கள் சம்பத்தையும், தேக சௌக்கியத்தையும் விருத்தி செய்துகொள்வதற்கு, தங்களுக்குள் கூட்டுறவு கொண்டு ஒப்புரவாழ ஏற்பாடுகள்செய்துகொண்டு ஒருவருக்கொருவர் ஒத்தாசை செய்துகொள்ள வேண்டும். இந்திய விவசாயிகளுக்கு ஏற்பட்டிருக்கிற கஷ்டமென்னவென்றால், பணமில்லாத குறையே. தேசமெங்கும்

ஐக்கிய நாணயச் சங்கங்கள் ஏற்படுத்தப்பட் டிருக்கிற தென்று முன்னமேயே சொல்லி இருக்கிறோம். இந்தக் கூட் டுறவினால் விளையும் பயன்கள் பல. ஒரு கிராமத்தாரும் மற்றொரு கிராமத்தாரும் தங்களுக்குள் கூட்டுறவு ஏற்படுத் திக்கொண்டால், இருவருக்கும் மிக்க நன்மையைத் தரும். விவசாயத்திற்கு வேண்டிய சாதனங்களைச் செய்துகொள் ளலாம். விவசாயிகளுக்குப் பணம் கடன் கொடுத் துதவ லாம். வேண்டிய விவசாயக் கருவிகளையும், நிலத்திற்கு வேண்டிய எரு முதலியவற்றையும் மொத்தமாய் லாபத் திற்கு வாங்கலாம். ஆடு மாடுகள் பயிர்களை நாசஞ் செய் யாதபடி பாதுகாக்கலாம். முக்கியமான நன்மையும் பலனும், ஒற்றுமையும் உண்டாகும்.





AL. Annamalai,
Kottaiyur. S.I.R

Printed at the 'Caxton Press,' Madras — 1935 (C)

